# சிறு கதைகள்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

புதுமைப் பதிப்பகம்

காரைக்குடி

1944

# பதிப்புரை

சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரவர்கள் எழுதிய நூல்களைத் தொகுத்துப் பிரசுரிக்கும் திட்டத்தில் இது முதற்பகுதியாகும். இதிலடங்கிய கதைகள் முதலில் கல்கி, ஆனந்த விகடன், கலைமகள், வசந்தம் ஆகிய பத்திரிகைகளுக்காகவும் குமரி மலருக்காகவும் ராஜாஜியவர்கள் எழுதிப் பிரசுரமானவை. இப்பத்திரிகாசிரியர்களுக்கு எங்கள் நன்றி உரியது.

**புதுமைப் பதிப்பகத்தார்**

# பொருளடக்கம்

# முகுந்தன்

க.

சிறுவர்களும் குரங்குகளும் சேர்ந்துவிட்டால் விளையாட்டுக்கு என்ன குறைவு? வேலம்பட்டிப் புளியந் தோப்பில் ஊர்ப்பையன்களெல்லாம் சேர்ந்து மரத்தில் ஏறியும் குதித்தும் கூக்குரலிட்டும் குரங்குகளை விரட்டிக்கொண்டும் விளையாடினார்கள். சில சமயம் குரங்குகள் ஜயித்தன. அப்போது அவைகளில் பெரிய குரங்கு 'உர்' என்று உறுமும்போது, சில பிள்ளைகள் விளையாட்டை மறந்து, சிறிது பயங்கொள்வார்கள். குரங்குகளில் சிறு குட்டிகளுக்கு, பாவம், ஆபத்தாய்த்தானிருந்தது. அவை விளையாட்டில் வேடிக்கை எதுவும் காணவில்லை. பயந்து ஓடி ஓடிக் கிளைக்குக் கிளை பாய்ந்து சிறுவர்களுடைய இம்சையிலிருந்து தப்பப் பார்த்தன. பையன்களுக்கோ இது வேடிக்கையாயிருந்தது. அவர்களுடைய ஆரவாரமும், குரங்குகளின் கீச் கீச் என்ற சத்தமும் ஊருக்குக் கேட்கும்.

திடீரென்று கிழக்குக் கோடியில் ஒரு பையன் பெரிய கூக்குரலிட்டான். எல்லோரும் என்னவோ

அபாயம் நேர்ந்துவிட்டதென்று அந்தப் பக்கம் ஓடினார்கள். முகுந்தன்மேல் ஒரு பெரிய குரங்கு பாய்ந்து, அவன் உடம்பெல்லாம் கிழித்து இரத்தக் காயம் செய்து கழுத்தைக் கவ்விக் கொண்டிருந்தது. முகுந்தன் குரங்குக்குட்டி ஒன்றைத் துரத்தி விளையாடும்போது அது கிளையிலிருந்து நழுவிக் கீழே விழ, அவன் அதைக் கையில் எடுத்துக்கொண்டு ஓடவே, தாய்க் குரங்கு மரத்திலிருந்து சீறி அவன்மேல் பாய்ந்து இவ்விதம் தாக்கிக்கொண்டிருந்தது. முகுந்தன் திக்பிரமை கொண்டவனாய், இன்னது செய்யவேண்டுமென்று தோன்றாமல், குரங்குக் குட்டியை இறுகக் கட்டிப் பிடித்துக்கொண்டான். இதைக் கண்டு குரங்கு இன்னும் ஆவேசத்துடன் அவனைக் காயப்படுத்திற்று. 'குட்டியை விட்டுவிடு, குட்டியை விட்டுவிடு' என்று பையன்கள் கூக்குரல் போட்டும் அவனுக்கு விளங்கவில்லை. சிறுவர்களில் யாரும் கிட்டப்போகத் தைரியங் கொள்ளவில்லை. குரங்கோ மிகப் பெரியது. மகா கோபாவேசங் கொண்டிருந்தது.

இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த மாரி என்னும் சிறுவன், "அடே, செத்துப் போயிடுவான்" என்று கத்திவிட்டு, ஒரே குதியாய்க் குதித்து முகுந்தன் கையிலிருந்த குரங்குக் குட்டியைப் பிடுங்கிக்கொண்டு ஓடினான். உடனே குரங்கு முகுந்தனை விட்டுவிட்டு மாரிமேல் பாய்ந்தது. பாய்ந்ததும், மாரி, குட்டியைக் கீழே போட்டுவிட்டுத் தரையில் கிடந்த ஒரு குச்சியை எடுத்துக்கொண்டு குரங்கை எதிர்த்துநின்றான். குட்டி கீழே விழுந்து ஓட ஆரம்பித்ததும், தாயானது பையனைத் தாக்குவதை விட்டுவிட்டுக் குட்டியண்டை

ஓடிற்று. குட்டி தாயின் வயிற்றைக் கௌவிக்கொள் ளவே, இரண்டும் மரத்தின்மீது ஏறி உச்சிக் கிளை போய்ச் சேர்ந்து ஒன்றுமே நடவாததுபோல் அங்கே உட்கார்ந்தன.

முகுந்தன் நினைவற்றுக் கீழே கிடந்தான். பையன் கள் எல்லாம் பயந்து, 'முகுந்தன் செத்துவிட்டான்' 'குரங்கு முகுந்தனைக் கொன்றுவிட்டது' என்று கத்திக்கொண்டு ஊர்ப்பக்கம் ஓடினார்கள். மாரி மாத் திரம் ஓடாமல், "அடே சின்னான்! போய் அம்மா வைக் கேட்டு ஒரு கலயத்தில் தண்ணீர் கொண்டுவா" என்று சொல்லி முகுந்தன் பக்கத்தில் உட்கார்ந்து அவனுடைய முகத்தைத் துடைத்துத் தடவிக்கொண் டிருந்தான். சின்னான் சேரிக்கு ஓடிப்போய் ஒரு மண் கலயத்தில் தண்ணீர் கொண்டுவந்தான். அதை மாரி வாங்கி முகுந்தன் முகத்தில் தெளித்ததும், அவனுக்கு நினைவு வந்தது. ஆனால், காயங்களில் இரத்தம் பெருகிக்கொண்டே யிருந்தது.

"சின்னா, நீ ஒரு பக்கம் பிடி, நான் ஒரு பக்கம் பிடிக்கிறேன். இருவரும் தூக்கி இவனை வீட்டுக்குக் கொண்டு போவோம் வா" என்று மாரி சொல்ல, இருவரும் சேர்ந்து முகுந்தனைத் தூக்கிக்கொண்டு போனார்கள். மாரியும் சின்னானும் சிறு குழந்தைகள் தான். ஆனால், ஏழைப் பிள்ளைகளா யிருந்தபடியால் வேலைக்கு அஞ்சவில்லை. சுகத்தில் வளரும் குழந்தைகள் செய்யாத காரியங்களை யெல்லாம் ஏழைக் குலத்தில் பிறந்த குழந்தைகள் தைரியமாகச் செய்யும். இல்லா விட்டால் அவர்கள் எப்படிப் பிழைக்க முடியும்?

உ

முகுந்தன் தகப்பனில்லாக் குழந்தை. அவன் தகப்பனுக்கு ஒரு காரணமுமில்லாமல் வந்த ஜுரம் ஒரு மாதம் விடாமல் அடித்தது ; ஊர்ப்பண்டிதன் என்ன மருந்து கொடுத்தும் நிற்கவில்லை. முப்பத்தோராவது நாள் இரவு, மனைவியையும் மகனையும் திக்கற்றவர்களாய் விட்டுவிட்டு, அவன் இறந்து போனான்.

சீதம்மாள் தெய்வபக்தி யுடையவள். புருஷன் இறந்த பிறகும் தைரியத்துடன் பையனை வளர்த்து வந்தாள். ஊரில் புருஷன் அங்கங்கே கொடுத்திருந்த காசு பணத்தையெல்லாம் வசூலித்து, அவன் வைத்து விட்டுப்போன நாலு ஏக்கரா புன்செய்க் காட்டை ஒரு குடியானவனிடம் குத்தகைக்குப் பேசி விட்டுக் குடும்பத்தை நடத்திவந்தாள். பையனைக் கிராமத்திலிருந்த சிறு பள்ளிக்கூடத்தில் போட்டாள். வீட்டிலும் அவனுக்கு இராமாயண பாகவத பாரதக் கதைகளைச் சொல்லிவந்தாள். தைரியமாய் வாழ்வை நடத்தி வந்தாலும், பாவம், சிறு வயதில் விதவையாய்ப்போன சீதம்மாளுக்குச் சில சமயம் உலகத்தின்மீது வெறுப்பு உண்டாகும். திக்கற்ற வாழ்வின் துன்பங்களைச் சகித்துக்கொள்ளுதல் யாருக்குமே கடினமல்லவா ? ஆனால், ஈசுவர நம்பிக்கையும் ஆசார சீலமும் இவளைக் காத்துவந்தன.

சீதம்மாள் ஸ்நானம் செய்து, பூஜைக் காரியங்களை முடித்துவிட்டு அடுப்பண்டை சமையல் செய்து கொண்டிருந்தாள். திடீரென்று மாரியும் சின்னனும் "அம்மா, அம்மா" என்று கூப்பிட்டுக்கொண்டு

உள்ளே நுழைந்து, மேலெல்லாம் இரத்த வெள்ளமாயிருந்த முகுந்தனை அவள்முன் கீழே இறக்கி வைத்தார்கள். திடுக்கிட்டுப்போன தாய் ஒரே பாய்ச்சலாய்க் குழந்தையண்டை வந்து குதித்து, "ஐயோ! என் குழந்தாய்!" என்று தலையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு, "என்னடா செய்தீர்கள்? துஷ்டப் பயல்களா!" என்று கூக்குரலிட்டாள். இவள் திடுக்கிட்டுக் குழந்தையண்டை குதித்த குதியும், தோப்பில் குரங்கு தன் குட்டியைக் காக்கச் சீறிப் பாய்ந்த பாய்ச்சலும் ஒரேமாதிரியாயிருந்தன. பெற்றவயிறு எல்லாம் ஒன்றுதானே! குரங்கானாலென்ன, சீதம்மாளானாலென்ன?

நடந்த சங்கதிகளெல்லாம் மாரி சொன்னான். கேட்டதும், அவளுடைய உள்ளத்தில் உதித்த நன்றி முகத்தில் அழகிய புன்முறுவலாகப் பிரகாசித்தது.

"நீங்கள் யார் அப்பா!" என்றாள்.

"நாங்கள் பறைப்பசங்கள், அம்மா" என்றான் மாரி.

இதைக் கேட்டதும் திடீரென்று சீதம்மாளுடைய மனோநிலை மாறிவிட்டது.

"பறைப்பயல்களா? அட பாவி! வீட்டுக்குள் நுழைந்துவிட்டீர்களே! ஐயோ, ஈசுவரா! நான் என்ன செய்வேன்? அடுப்பண்டை வந்துவிட்டீர்களே, ஐயோ, கொடும் பாவிகளே!" என்று எல்லாவற்றையும் மறந்து பெருங் கூக்குரலிட்டுக்கொண்டே, ஒரு விறகுக் கட்டையை எடுத்துப் பலத்துடன் வீசிச் சின்னான்மேல் எறிந்தாள். மாரி சட்டென்று குறுக்கே

குதித்தான். கட்டை அவன் காலில் பட்டுக் காயம் ஏற்படவே அவன் கீழே விழுந்தான். சின்னன் கூக்குர லிட்டுக்கொண்டு தெருப்பக்கம் ஓடினன்.

"பறைப்பயல் வீட்டுக்குள் நுழைந்து என் ஜன்மத்தைப் பாழாக்கினன். போதாதற்கு, ஊருக்கெல்லாம் என் அவமானத்தைத் தெரிவிக்கக் கூச்சலிட்டுக் கொண்டு ஓடுகிறன், பார்!" என்று கூவினள் சீதம்மாள்.

கீழே விழுந்த மாரி, மெள்ள எழுந்து காயம் பட்ட காலைக் கையால் அழுத்திக்கொண்டு, "அம்மா, உன் மகனை நான் குரங்கின் கையிலிருந்து தப்புவித்தேன். அதற்குப் பதிலாக நீ, என் காலை ஒடித்து விட்டாய்" என்றன். ஏழைக் குழந்தைகள் வயது முதிர்ந்தவர்களைப்போல் பேசுவார்கள்.

"நீயும் உன் குரங்கும் நாசமாய்ப்போக, இந்தப் பறைத்தீட்டு எப்படி நீங்கி நான் நற்கதியடையப்போகிறேன், ஐயோ, நிழல் பட்டாலும் தீட்டாயிற்றே! வீட்டுக்குள் சுவாமி வைத்திருக்கும் இடத்துக்கே வந்துவிட்டார்களே! இவர்கள் நாசமாய்ப்போக. ஹே, ஈசுவரா! என்மேல் கருணை வைத்துக் காப்பாற்று, சுவாமி!" என்று கத்தினள்.

மாரி இன்னும் காலை அமுக்கிக்கொண்டே நின்றன். "அடே, தூரப்போ, பறைப்பயலே" என்று இன்னொரு கட்டையை யெடுத்து மெய்மறந்து ஓங்கி அவன்மேல் அடித்தாள். முன் அடியைக் காட்டிலும் இது பலமாய்த் தாக்கிற்று. பொறுக்க முடியாமல் 'வீல்' என்று கத்திக்கொண்டு, பாவம், பையன் காலைப் பிடித்துக்கொண்டே ஓடினன்.

தெருவில் பெரிய கூட்டம் சேர்ந்துவிட்டது. 'என்ன, என்ன?' என்று சிலர் கேட்கவும், சிலர் பதில் சொல்லவும் பெரிய ஆரவாரம் கிளம்பிற்று. மாரி, சின்னன் இவர்களுடைய ஆயாளும் சேரியிலிருந்து வந்து தெருக்கோடியில் நின்றுகொண்டு "ஐயோ, என் குழந்தைகளைக் கொல்லுகிறார்களே!" என்று பெரிய கூச்சல் போட்டுக் கொண்டிருந்தாள். பெற்ற தாயின் வயிறு எரிதல் எல்லா உயிர்களிடையும் ஒரே மாதிரி தான். குரங்கானால் என்ன, வேறு எந்த உயிரானால் தான் என்ன?

௩

பிறகு இரண்டு வருஷத்திற்குப்பின் கதை. முகுந்தன் பெரியபையனாகிக் கமலாபுரம்பேட்டையில் பெரிய பள்ளிக்கூடத்தில் சேர்ந்துவிட்டான். தினம் இரண்டு மைல் போய்த் திரும்பிவரவேண்டும். ஆனால், இவனைப் போலவே அந்தப் பள்ளிக்கூடம் போகிற இரண்டு பிள்ளைகள் துணைக்கு இருந்தபடியால் போவது கஷ்டமாய்த் தோன்றவில்லை. குரங்கு விளையாட்டுச் சமாசாரத்தை எல்லாரும் மறந்துவிட்டார்கள். முகுந்தன் நெற்றியில் மாத்திரம் பெரிய ஒரு தழும்பு இருந்தது.

மாரியின் தாயார் குப்பாயினுடைய மனத்துக்கு மாத்திரம் சமாதானம் ஏற்படவில்லை. "எப்படி ஐயமார் வீட்டுக்குள் போய் நுழையலாம்? அந்தப் பாவம் பிடித்துத் தின்னாதா? மற்ற ஜாதிப் பையன்களுடன் நீங்கள் ஏன் கலந்து விளையாடினீர்கள்? தெய்வம் நம்மை விடுமா? அதனால்தான் இந்தக் கஷ்டங்கள் எல்லாம் நமக்கு வந்திருக்கின்றன. மழை பெய்யாமல்

நின்றுவிட்டது. தின்னச் சோறு இல்லாமல் தவிக்கிறோம். எல்லாம் அந்தச் சாபந்தான்" என்று பலவாறுகத் தன் மகனை ஏசிக்கொண்டேயிருந்தாள். ஊர் மாரியாயிக்கு மூன்று பொங்கலுக்கும் தவறுமல் மூன்று கோழி கொடுத்து, 'ஆயாளே! தெய்வமே! என் மகன் தெரியாமல் செய்துவிட்டான். மன்னித்துவிடு' என்று பிரார்த்தனை செய்துகொண்டாள். எவ்வளவு பய பக்தியுடன் பூஜைசெய்து பலி கொடுத்தாலும், மாரியாயிக்குக் கோபம் சாந்தமாகவில்லை. கஷ்டங்கள் மேலும் வந்துகொண்டே இருந்தன. முன்னெல்லாம் புருஷன் கள்ளுக்கடைக்கு சந்தையன்று மாத்திரம் போவது வழக்கம். இப்போது தினமும் போகலானுன். குடித்துவிட்டுப் போதையுடன் வீடுவந்து, சோறு போடு என்று மிரட்டுவதும், 'சோறு ஏது? எல்லாம் கள்ளுக்குத் தொலைத்து விட்டாயே?' என்றுல், உதைப்பதும் அடிப்பதும் வழக்கமாயிற்று. பகலெல்லாம் காட்டில்திரிந்து ஒரு தலைச்சுமை விறகு பொறுக்கி வந்து விற்று அவள் ஒரு பணம் சம்பாதித்தால், அதையுங்கூடச் சண்டைபோட்டுப் பிடுங்கிக் கள்ளுக் கடைக்குக் கொண்டுபோய்விடுவான். இப்படி வாழ்வு மிக்க கஷ்டமான போதெல்லாம், "பாப்பாத்தி அடுப் பண்டைபோன சாபந்தான் இது" என்று தன் பிள்ளைகளைப் பார்த்துச் சொல்வாள். புருஷன் குடித்துவிட்டு வந்து அடித்தால் அடிகளை வாங்கிக் கொண்டு, "பிள்ளைகளே, அழவேண்டாம். நாம் கண்டிக்குப் போய்விடலாம். இந்தப் பாழாய்ப்போன ஊரும் வீடும் நமக்கு வேண்டாம். இவன் கள்ளுக் கடையிலே சாகட்டும்" என்பாள்.

அந்த வருஷம் மழை, சுத்தமாய், இல்லை. நிலங்களெல்லாம் காய்ந்து கிடந்தன. கூலிக்கு அழைப்பார் யாருமில்லை. ஏழைக் குடியானவர்கள்பாடே வெகு கஷ்டமாயிருந்தது. கூலிவேலைசெய்து ஜீவனம் பண்ணுவோர்பாடு இன்னும் பரிதாபம். பறையர், சக்கிலிமார்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அவர்களின் நிலையை எழுதத்தான் முடியுமா?

கண்டிக்கு ஆள் சேர்க்கக் கங்காணி வந்தான். ஜனங்கள் அவனைத் தெய்வமாய் எண்ணி எதிர்கொண்டார்கள். "கங்காணி வந்து ஏழைகளை ஏமாற்றி அழைத்துப் போகிறான். பொய்யும் புரட்டும் சொல்லி, அறியாதவர்களை இட்டுச் செல்கிறான். இந்த அநியாயத்தைக் கேட்பாரில்லையே" என்று பெரிய குடித்தனக்காரர்கள் சொன்னார்கள். ஆனால், "நாம் இப்போது படும் கஷ்டத்தைவிடப் பெரிய கஷ்டம் என்ன இருக்கப் போகிறது?" என்றெண்ணி சேரிகளிலிருந்து கங்காணியுடன் இலங்கைக்குச் சென்றார்கள்.

குப்பாயியும் தனக்கு விமோசனம் இதுதான் என்றெண்ணிக் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு கண்டிக்குப் போகப் பெயர் கொடுத்தாள். புருஷன் வரமாட்டேன் என்றான். அவன் எக்கேடாவது கெடட்டும் என்று அவனை ஊரில் விட்டுப் போவதாகவே முதலில் தீர்மானித்திருந்தாள். ஆனால், கடைசியில் அவன், "எனக்கு யார் கஞ்சி காய்ச்சி ஊற்றுவார்? நானும் வருகிறேன்" என்றான். இனி, கள், சாராயம் தொடுவதில்லை என்று சத்தியம் செய்து தன்னையும் கூட்டிக்கொண்டு போகும்படி கெஞ்சிக் கேட்டுக்

கொண்டான். முடிவில் எல்லோரும் சேர்ந்தே போனார்கள்.

௩

மூன்று வருஷம் கழிந்தது. முகுந்தன் பள்ளிக்கூடத்தில் நன்றாய்ப் படித்துவந்தான். கடைசிப் பரீட்சையில் பையன்களுக்குள் முதலாவதாகத் தேறினான். இந்தச் செய்தி ஒருநாள் காலையில் வெளியாயிற்று. முகுந்தன் உடனே தாயிடம் போய்ச் சந்தோஷ சமாசாரஞ் சொல்ல மிக்க ஆவல் கொண்டான். ஆனால், பரீட்சையில் தேறிய தோழர்கள் எல்லாரும் கூடி சுவாமிமலை யேறி, அங்கே அன்று திருநாள், பார்த்துவிட்டு வேடிக்கையாய்ச் சிறிது நேரம் கழித்து வரலாமென்று தீர்மானித்து முகுந்தனையும் அழைத்தார்கள். மாட்டேன் என்று அவன் சொல்லிப் பார்த்தான். "போனால் நேரமாய்விடும், வீட்டில் தாயார் காத்திருப்பாள்" என்றான்.

"போடா, பெண் குழந்தைபோல் பேசுகிறாய். நேரமானால் நானும் உன்னுடன் ஊருக்கு வருகிறேன். நீ பயப்படவேண்டாம். பரீட்சையில் முதலில் தேறினேனென்று கர்வப்படாதே. எங்கள்கூடக் கட்டாயம் வரவேண்டும்" என்று ஒரு தடிப் பையன் வற்புறுத்தினான்.

"வந்தே தீரவேண்டும், வந்தே தீரவேண்டும் விடக்கூடாது" என்றார்கள் சுற்றிலு மிருந்த பையன்கள் எல்லாரும். முகுந்தனிடம் எல்லாருக்கும் மிகவும் பிரியம்.

ஆகவே முகுந்தன் மலைக்குப் போகவேண்டிய தாயிற்று. மலைமேல் வேடிக்கையாய்த்தா னிருந்தது. உற்சவத்திற்குத் திரள்திரளாக ஜனங்கள் வந்திருந் தார்கள். பையன்கள் கோயிலுக்குள்ளும் வெளியிலும் கடைவீதியிலும் மனம்போனபடி சுற்றித் திரிந்து விளையாடினார்கள். அவர்களில் ஒருவன் பணக்கார வீட்டுச் செல்லப் பிள்ளை. அவன் தகப்பன் ஐந்து ரூபாய் முழு நோட்டு ஒன்று பையன் இஷ்டப்படி செலவு செய்யக் கொடுத்திருந்தான். இதைக்கொண்டு, மிட்டாய்க் கடையில் வேண்டிய பட்சணங்கள் வாங்கி எல்லாரும் தின்றார்கள். வெயிலில் நாள் முழுதும் ஓய் வில்லாமல் திரிந்துவிட்டு மலையிலிருந்து இறங்கினார் கள். பாதி தூரம் இறங்கும்போது, "அடே, ராம கிருஷ்ணா! வெகு தாகமாயிருக்கிறதடா" என்றான் முகுந்தன். "இங்கே தண்ணீர் ஏது? ஊர் சேர்ந்தால் தான்" என்றார்கள் மற்றவர்கள்.

"போங்களடா, மடையன்களா! இங்கே அனுமான் குட்டை இருப்பது தெரியாதா?" என்று தடிப்பையன் சொல்லி, அங்கே ஒரு ஒற்றடிப் பாதை வழியாய்ப் போய் ஒரு பெரிய ஆஞ்சநேயஸ்வாமி செதுக்கியிருந்த பாறைக்குப் பின்னால் குட்டை ஒன்றைக் காட்டினான். முகுந்தன் அதில் இறங்கித் தாகம் தீரத் தண்ணீர் குடித்தான். "எவ்வளவு நன்றாய் இருக்குதடா தண் ணீர்?" என்று சொல்லிக்கொண்டு மேலே ஏறினான். நல்ல தாகமாயிருந்தால் அழுக்குத் தண்ணீர்கூட வெகு ருசியாயிருக்குமல்லவா?

கமலாபுரம் போய்ச் சேரவே இருட்டாய்விட்டது. அதற்குமேல் முகுந்தன் வேலம்பட்டி போய் வீடு

சேர்ந்து, "அம்மா" என்று கதவைத் தட்டியபோது அதிக நேரமாய் விட்டது. "அப்பா முகுந்தா, வந்தாயா? ஏன் இவ்வளவு நேரம்? நான் பயந்து விட்டேன், குழந்தாய்! பரீட்சை சமாசாரம் தெரிந்தவுடன் திரும்பி வருவதாய்ச் சொன்னாயே?" என்றாள் தாயார்.

"சுவாமிமலைக்கு எல்லாரும் போயிருந்தோம். நான் வரவில்லை என்றேன். பையன்கள் விடவில்லை. போய்த் திரும்பிவர இவ்வளவு நேரமாகி விட்டது. உற்சவ வேடிக்கையெல்லாம் பார்த்தோம்" என்று முகுந்தன் சொன்னான்.

"நல்லது; எப்படியாவது வந்து சேர்ந்தாயே, அதுவே போதும். இருக்கட்டும், பரீட்சை என்னவாயிற்று குழந்தாய்?" என்று தாயார் கேட்டாள்.

"அம்மா! நான் முதலாவதாகத் தேறியிருக்கிறேன்" என்றான்.

"ஐயோ! என் கண்மணியே!" என்று சீதம்மாள் குழந்தையை அணைத்துக் கட்டிக்கொண்டு அழுதாள். அவள் ஏன் அழவேண்டும்? அவள் மனதில் அப்போது என்னென்ன எண்ணங்கள் உதயமாயின? இவையெல்லாம், புருஷனை இழந்து, பெற்ற பிள்ளை ஒருவன்மேல் ஆசைவைத்து வளர்த்த தாய்களுக்குத் தான் தெரியும். நான் எழுதமுடியுமா?

௫

முகுந்தன் தாயார் இப்படி ஆனந்தக் கடலில் மூழ்கிய நான்கே நாட்களுக்குள் ஐயோ, உலகமே! இந்த வீடு ஏன் இப்படிப் பாழடைந்து கிடக்கிறது? கதையைச் சுருக்கமாய்ச் சொல்லி முடிக்கிறேன். முகுந்தன்

சுவாமிமலையில் தோழர்களுடன் விளையாடி விட்டு, வீடு திரும்பிய இரவே, வயிற்றில் வலி கண்டது. பிறகு பேதியாயிற்று. இரவுக்குள் பத்துத் தடவையாயிற்று. ஆனால் யாரும் விஷபேதி என்று நினைக்கவில்லை. ஏதோ சுவாமிமலையில் கடையில் பட்சணம் வாங்கித் தின்றதால் அஜீரணம் ஏற்பட்டிருப்பதாக எண்ணினார்கள். பையன் வெகு கஷ்டப்பட்டான். கிராமத்தில் நோய்கண்டால், வைத்தியனா, மருந்தா, ஒன்றும் கிடையாது. அதிலும் ஏழைகள் வீட்டில் காலரா அல்லது வேறு பெரிய வியாதியை நிறுத்தவோ, பரவாமற் செய்யவோ, என்ன ஏற்பாடுகள் செய்வதென்று ஒருவருக்கும் தெரியாது. தெரிந்தாலும் அதற்குச் சௌகரியம் ஏது? செலவுக்குப் பணம் எங்கே? இப்படிச் செய்யவேண்டும், அப்படிச் செய்யவேண்டும் என்று அறிந்தோர் சொல்வார்கள்; புத்தகத்தில் எழுதியிருப்பார்கள்; அவற்றில் ஒன்றையும் திக்கற்ற ஏழைகளின் குடிசைகளில் நடத்தமுடியாது.

தெய்வாதீனமாய்ப் பையன் பிழைத்துக் கொண்டான். பக்கத்து வீட்டு ஜனங்கள் சிலர் பரிதாபப்பட்டு உதவி செய்தார்கள். பையன் தப்பிப் பிழைத்தாலும் தாயை விஷநோய் பிடித்தது. இரண்டு நாள் யாருக்கும் சொல்லாமல் தன் நோயை மறைத்து வைத்துக் கொண்டே பையனுக்கு வேண்டியது செய்துவந்தாள். கடைசியில் தாங்க முடியாமற் போகவே, படுத்துவிட்டாள். பிறகு என்ன செய்ய முடியும்? "ஐயோ என் குழந்தைக்குக் குணமாயிற்றா? அவனை யார் பார்த்துக் கொள்வார்கள்? நான் சாகிறேனே!" என்று எழுந்து உட்கார்ந்து கதறிவிட்டு மறுபடியும் கீழே பிரக்ஞை

தப்பி விழுந்தாள். பிறகு நினைவு வரவேயில்லை, கை கால்கள் சிறிது இழுத்தவுடன் உயிர் போய்விட்டது.

ரா

மேலும் பதினைந்து வருஷம் சென்றது. எல்லாம் அடியோடு மாறிவிட்டது. வேலம்பட்டி பார்ப்பாரத் தெருவில் வீடுகள் எல்லாம் பாழாயின. கோயில் பூஜை செய்யும் கிருஷ்ணபட்டர் மாத்திரமே தம்முடைய வீட்டில் குடியிருந்தார். மற்றவர்கள் எல்லாரும் ஜீவனோபாயந் தேடி ஊரைவிட்டுப் பட்டணக் கரைகளுக்குப் போய்விட்டார்கள். வேலம்பட்டிப் பறைச்சேரியும் பாதி பாழாய்க் கிடந்தது. சிலர் கண்டிக்கும், சிலர் பினங்குக்கும், சிலர் சேர்வராயன் மலைக்கும், சிலர் கோலாருக்கும், பெங்களூருக்கும், வேறிடங்களுக்கும், கூலிவேலை தேடிப் போய்விட்டனர். குடியானத் தெருமட்டும் அவ்வளவு பாழாகவில்லை. காட்டையும் மாட்டையும் விட்டுப்போக வழியில்லாமல் அவர்கள் இருந்த இடத்திலேயே கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

தாயுடன் இலங்கைக்குப் போன மாரியும் சின்னனும் அங்கேயே இருந்து வந்தனர். தோட்டம் சேர்ந்தவுடன் தகப்பன் பழையபடி கள்ளுக்கடைக்குப் போக ஆரம்பித்தான். வேலையும் சரியாய்ச் செய்வதில்லை. சோம்பேறி, குடிகாரன் என்று அவனைச் சில நாளுக்குள்ளாகவே துரத்திவிட்டார்கள். பின்னர் வேறு தோட்டத்துக்குப் போனான். அங்கேயும் இதே கதிதான். கண்ட கண்ட இடமெல்லாம் அலைந்து

பிச்சையெடுத்துக் கொஞ்ச நாள் குடித்து வந்தான். கடைசியில் இன்ன இடம் போனுனென்றே தெரிய வில்லை.

மாரியும் சின்னனும் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்துகொண்டு தாயுடன் சிக்கனமாய் வாழ்க்கை நடத்தி வந்தார்கள். மாரிக்கு இப்போது வயது இருபத்தைந்து. அதே தோட்டத்தில் பிறந்த பெண் ஒருத்தி இருந்தாள். "உனக்கு இந்தப் பெண்ணைவிட நல்ல பெண் ஊரில் எங்கே கிடைக்கப்போகிருள் ? இவளைக் கட்டிக்கொள்" என்று குப்பாயி வற்புறுத்தியதன்மேல் மாரியும் அதற்கிணங்கினுன். கலியாணமாகிச் சில நாளானதும் ஊருக்குத் திரும்பக் குடி போகலாம் என்று மாரி யோசித்தான்.

"அம்மா, இந்த நாட்டில் நாம் பதினைந்து வருஷம் ஜீவனம் செய்தாகிவிட்டது. தகப்பன் போனவன் திரும்பி வரவேயில்லை. அவனுக்காகக் காத்துப் பயனில்லை. நாம் ஏன் இனி நம் ஊருக்குப் போகக்கூடாது? நமக்கு இப்பொழுது என்ன குறைவு? நம்முடைய பணம் சுமார் 200 ரூபா கங்காணியிடமிருக்கிறது. அதை வாங்கிக்கொண்டு வேலம்பட்டிக்குத் திரும்பிப்போய், ஒரு வண்டியும் ஒரு ஜதை மாடும் வைத்துக்கொண்டு மானமாய் ஜீவனம் செய்யலாம். அம்மா! இந்த ஊர் எனக்குப் பிடிக்கவேயில்லை. பட்டியில் அடைபட்ட மாடுகள் மாதிரி வாழ்வு நடத்துகிருேம். கோயில் கிடையாது. ஒருவன் பெண்டாட்டி ஒருவனுடையவளல்ல. இங்கே ஏன், அம்மா! நாம் இனி இருக்கவேண்டும்?" என்று தாயிடம் சொன்னுன்.

" ஆமாப்பா ஆமாம்! வேலம்பட்டிக்கே போய் அங்கே உங்கப்பன் குடிசையிலேயே சாகவேண்டும் என்றுதான் எனக்கும் ஆசை" என்றுள் குப்பாயி.

அவ்வாறே வேலம்பட்டிக்குத் திரும்பிப்போய்ச் சேர்ந்தார்கள். மாரியும் சின்னுனும் மேலச்சேரிச் சந்தைக்குப்போய் ஒரு ஜதை நல்ல காளை மாடும், சேலத்தில் ஒரு வண்டியும் வாங்கிக்கொண்டு வந்தார்கள். அவற்றை வைத்துக்கொண்டு சில காலம் மாரி மிகவும் சந்தோஷமாய் வாழ்வு நடத்தினன். குடியானத் தெருவில், " பார்த்தாயா ? கண்டிப்பறையன் மாடும் வண்டியுமாய்க் கொழுத்திருக்கிருன் " என்று பொருமைப் பட்டார்கள்.

ஆனல், நீண்ட நாள் இப்படி நடக்கவில்லை. கெட்ட காலம் சிக்கிரத்திலேயே வந்துவிட்டது. மாடுகளில் ஒன்று இருந்தாற் போலிருந்து நொண்ட ஆரம்பித்தது. இன்ன காரணமென்று தெரியவில்லை. என்ன செய்தும் கால் சரியாகவில்லை. கொண்டலாம்பட்டியில் ஒரு மாட்டு வைத்தியனுக்கு ஐந்து ரூபாய் கொடுத்துக் காலுக்கு மருந்து வைத்துக் கட்டிப் பார்த்தான். பிறகு மந்திரம் போடுவித்தான் ; கடைசியில் சூடும்போட்டுப் பார்த்தான். ஒன்றுக்கும் கேட்கவில்லை. அந்த மாட்டுக்குப் போட்ட பணம் வீணுய்ப் போயிற்று. வண்டியை ஈடுகாட்டி குடியானவன் ஒருவனிடம் நாற்பது ரூபாய் கடன் வாங்கிக் கையிலிருந்த பணத்தையும் சேர்த்து வேருெரு மாடு வாங்கினன். இது கொஞ்ச நாள் நடந்து வந்தது.

திடீரென்று அந்தப் பக்கத்துக் கிராமங்களில் கோமாரி வியாதி பரவலாயிற்று. அனேகக் கால்நடை

கள் இறந்தன. மாரியின் புதுமாடு அந்த நோய்கண்டு ஒரே நாளில் செத்துவிட்டது. பிறகு குடித்தனம் போன போக்கைப்பற்றி எழுதுவானேன் ?

கடைசியில் ஒரு குடியானவன் தோட்டத்தில் அண்ணனும் தம்பியும் வேலைக்கு அமர்ந்தார்கள். எஜமானன் இரவும் பகலும் வேலை வாங்குவான். ஆனால், கூலி மிகவும் குறைவு. எல்லாரும் அரை வயிறு சாப்பிட்டாலும் தள்ளாத தாயைக் காப்பாற்றுவது கஷ்டமாய் இருந்தது. போதாதற்கு, தம்பி சின்னான் சண்டை பிடிக்க ஆரம்பித்தான்.

இப்படியிருக்கையில் பினங்குக்கு ஆள் சேர்க்க ஒரு கங்காணி வந்தான். சின்னான் அண்ணனிடம் சொல்லாமல் அவன் பின்னோடு போய்விட்டான். நாகப்பட்டினம் போனதும் அண்ணனுக்கு ஒரு கடுதாசி எழுதிப்போடச் செய்தான். தான் சொல்லாமல் வந்துவிட்டது பெருங்குற்றம் என்றும், அதற்காக மன்னிக்க வேண்டுமென்றும், பஞ்சம் பொறுக்க முடியவில்லையாதலால் எப்படியாவது பிழைத்துக் கொள்ளலாமென்று கிளம்பி வந்ததாகவும், அண்ணன், அண்ணி, தாயார் இவர்களுடைய பாதாரவிந்தங்களுக்கு நமஸ்காரம் செய்வதாகவும் கடிதத்தில் எழுதியிருந்தது. ஆனால், இந்த வக்கணையெல்லாம் சின்னானுக்கா எழுதத் தெரியும்? எழுதித் தந்தவனுடைய கைச்சரக்குதான். ஆனால், அண்ணனுக்கு மரியாதையாய்க் கடிதம் எழுதச் சொல்லி அதற்காக இரண்டணா எழுத்துக் கூலி கொடுத்தது பெருந்தன்மை யல்லவா ? படிப்பில்லாத ஏழை ஒருவன் அதற்குமேல் என்ன செய்யமுடியும் ?

கிழவி குப்பாயி, பாவம், அதிகமாகப் புலம்ப ஆரம்பித்தாள். "ஐயோ! இது எல்லாம், குழந்தையா யிருக்கையில் அந்தப் பாப்பாத்தி அடுப்பண்டை போனயே, அந்தச் சாபந்தான் அப்பா! அது இன்னும் நீங்கவில்லையே. மாரியாயி! நீ எப்போது மனமிரங்கு வாய்? இந்தக் கொடுமை எப்போது தீரும்? கையில் காசு இல்லையே. இருந்தால் அடுத்த நோன்புக்கு ஒரு கோழியாவது தருவேனே. வேலம்பட்டி ஆயாளே! நானவது சீக்கிரம் செத்தால் என் கஷ்டம் தீர்ந்து விடும். என் அறியா மகனைக் காப்பாற்று. அவனும் அவன் பெண்டாட்டியும் சுகமாயிருக்க வேண்டும்" என்று அவள் சதா உளறிக்கொண்டே யிருப்பாள்.

மாரியின் மனைவி பூவாயிக்குப் பதினைந்தே வய தானலும் வெகு சுறுசுறுப்பாய் வேலை செய்வாள். காட்டுக்குத் தைரியமாய்ப் போய்ச் சுற்றித் திரிந்து விறகு கொண்டுவருவாள். வெறுமனே ஒரு நிமிஷமும் இருக்கமாட்டாள். ஒழிந்த நேரத்தில் புல் செதுக்கு வாள். அல்லது எங்கேயாவது கெஞ்சி வேலைசெய்து கூலி கொண்டுவருவாள். புல் அல்லது விறகு கொண்டு போனல் இவள் தலைச் சுமைக்குக் கொஞ்சம் அதிக விலையே கொடுப்பார்கள். எப்படியோ தன் சாமர்த்தி யத்தால் வாரத்தில் இரண்டு, மூன்று நாள் தவருமல் வெள்ளைப் பணமாக இரண்டணு கொண்டுவந்து சிரித்த முகத்துடன் புருஷனிடத்தில் கொடுப்பாள்.

அந்த வருஷத்தில் மழை துளிகூடக் கிடையாது. நாலு வருஷமாகவே மழை சரியாய்ப் பெய்யவில்லை. ஆனல், அந்த வருஷத்தைப்போன்ற கொடும் பஞ்சம் அதற்குமுன் கிடையாது. கிணறுகளெல்லாம் வற்றிப்

போயின. பயிர் பச்சையேயில்லை. குடிக்கத் தண்ணீருக்குக்கூடக் கஷ்டமாய்ப் போய்விட்டது. அனேகம் பேர் ஊரைவிட்டே போய்விட்டார்கள்.

மாரியும் தன் மனைவியுடன் எங்கேயாவது போய் ஜீவனம் தேடலாமென்று பார்த்தான். ஆனால், தாய், "நாம் இங்கேயே இருந்து செத்துப் போகலாம். எங்கே போய் என்ன? தெய்வம் அங்கே காப்பதாயிருந்தால் இங்கேயும் காக்கும்" என்று சொல்லிப் பிடிவாதமாய் மாட்டேனென்றாள். தள்ளாத தாயின் வார்த்தையை மாரி தட்ட மாட்டாமல் பேசாதிருந்தான்.

சேரியில் இப்போது ஐந்து வீடுகள்தான் காலியாகாமல் இருந்தன. மற்ற வீட்டுக்காரர் எல்லாரும் ஊரை விட்டுப் போய்விட்டார்கள். சேரியைச் சேர்ந்த தண்ணீர்க் குட்டை வற்றிப்போய் பல நாளாயிற்று. பக்கத்தில் ஒரு வேளாளன் தோட்டம். அதில் ஒரு கிணற்றில் தான் கொஞ்சம் தண்ணீர் இன்னும் இருந்தது. அந்த தோட்டக்காரன் அதில் கவலை கட்டி இறைத்துக் கொஞ்சம் பாக்கி இருந்த பயிரைக் காப்பாற்றிவந்தான். தண்ணீர் இறைத்தானதும் கவலை மாடுகளை அவிழ்த்து விட்டுக் கழுவின பிறகு பறையர்கள் கிணற்று வாய்க்காலிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொள்ள வேண்டியது. கிணற்றில் பறையர்கள் தங்கள் குடத்தை விடக் கூடாது. விட்டால் தீட்டாய்ப் போகும். ஆகையினால் அவர்கள் வாய்க்காலிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொள்ள வேண்டியது; மற்றக் குடியானவர்கள் இவ்வளவுகூட இடங்கொடுக்க மாட்டார்கள். ஐந்து வீட்டார் தினசரி எடுத்துக்கொள்ளும் தண்ணீர்,

காய்ந்துபோகும் பயிருக்குக் கொஞ்சம் உதவுமல்லவா? ஆனல், குட்டிக்கவுண்டன் நல்லவன். "பாவம்! ஏழைப் பறையர்கள் குடிப்பதற்குத் தண்ணீர் இல்லாமல் சாகிருர்கள்" என்று இரக்கப்பட்டு அவர்களைத் தண்ணீர் எடுக்கவிட்டான்.

காலையிலிருந்து பெண்கள் காத்துக் கொண்டிருப்பார்கள். நான் முன், நீ முன் என்று சண்டை போடுவார்கள். வாய்க்காலில் தோண்டிய பள்ளத்தில் நிற்கும் ஜலம் ரொம்பக் கொஞ்சம். ஆகையால் சண்டை. ஒவ்வொரு நாள் அவர்கள் போடும் சண்டையில் வாய்க்காலில் தண்ணீர் சேருய்ப் போய்விடும். "பார், சாமி, பொல்லாதவள் தண்ணீரைக் கலக்கிவிட்டாள்" என்று ஒருத்திமேல் மற்ருெருத்தி குடியானவனிடம் புகார் சொல்லுவாள். இந்த வேடிக்கையைப் பார்த்துக் கொண்டு நின்ற குடியானவர்கள் "இந்தப் பறையர்கள் வழக்கமே இப்படி" என்பார்கள். பிறகு, அந்தப் பெண்கள் சேற்று நீரையே அள்ளி எடுத்துக்கொண்டு போவார்கள். வீட்டில் குடத்தில் வைத்திருந்தால் பிறகு தெளியலாமல்லவா?

இவையெல்லாம் படிப்பதற்குக் கஷ்டமாகவே இருக்கும். மகா கொடுமை! ஆனல், இவ்வளவும் உண்மையேயல்லவா? ஏழைத் 'தீண்டாதா'ரின் துயரம் இதுதான். உலகத்திலே புண்ணிய பூமியும், தர்மம் என்பதற்குப் பிறப்பிடமுமானது நமது பாரத தேசம். அன்பும், தெய்வ பக்தியும், பாவத்தைக் கண்டு அஞ்சும் குணமும், நம் நாட்டில் வாழும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இயல்பானவை. ஆனல் நீசர் என்று பெயரிட்டுச் சிலரை ஒதுக்கிவைக்கிருேமே,

அக்கொடிய வழக்கத்தின் வெப்பத்தில் நமது தர்மம் அன்பு, தெய்வபக்தி, நல்லொழுக்கம் எல்லாம் எரிந்து சாம்பலாய்ப்போய் வருகின்றன. அவ்வழக்கம் தொலைய வேண்டும். தெய்வம் கொடுக்கும் சுகதுக்கங்களை அனை வரும் சமமாகப் பகிர்ந்து அனுபவிப்பதல்லவா தர்மம்? சிலர்பேரில் பொறுக்க முடியாத சுமைபோடுவது பாவம் அல்லவா?

எ

குட்டிக்கவுண்டன் தோட்டத்துச் சாலையில் வழக்கம்போல் அவன் மக்கள் இருவரும் படுத்திருந் தார்கள். இராத்திரிக் காவலுக்கு அங்கே பயிர் ஒன்று மில்லை. ஆனால், அரை வயிற்றுக்குத் தீனி போட்டு எலும்புக்கூடாயிருந்த நாலு எருதுகளும் நாலைந்து வெள்ளாடுகளும் இருந்தன. தண்ணீர் இறைத்த பரி யும் கயிறும் கிடந்தன. இவைகளை யாராவது தூக்கிக் கொண்டு போய்விடலாமல்லவா? பஞ்சக் காலத்தில் கிடைத்ததைத் தூக்கி விடுவார்கள். இதற்காகக் காவல்சாலையில் யாராவது இரவில் படுப்பது வழக்கம்.

நடுநிசி. உச்சிக்குமேல் பூரணசந்திரன். அந்த வெண்ணிலாவில் காய்ந்துபோன வயல் காடுகளும் கூடப் பால்வண்ணத்துடன் அழகாய்த் தோன்றின. பகலில்தான் எங்கேயும் பஞ்சத்தின் கொடிய தோற்றம். இரவில் எல்லாம் ஓய்ந்து அடங்கி மறைந் திருந்தன. பஞ்சங்கூட இரவில் தூங்குமல்லவா? மனிதனுக்கிருக்கும் கஷ்டங்களுக்கு, அவன் சற்று நேரம் நினைவற்றுத் தூங்கக்கூடியதாயிருப்பது ஒரு பெரிய சகாயமே.

நிச்சப்தமாயிருந்த அந்த நள்ளிரவில் திடீரென்று நாய் குலைத்தது. ஒன்று குலைக்கவே எல்லா நாய்களும் குலைக்கத் தொடங்கின. "யார்? திருடன்!" என்று குட்டிக்கவுண்டனின் சின்ன மகன் எழுந்து உட்கார்ந்தான். கிணற்று வாரியோடு யாரோ பூவரச மரங்களின் நிழலில் மெதுவாய் நழுவிச் சென்றதாகத் தோன்றிற்று.

"எழுந்திரு, அண்ணு! யாரோ திருடன் ஓடுகிருன்!" என்று மறுபடியும் சத்தம் போட்டான். "என்ன, என்ன?" என்று செங்கோடன் கண்ணைத் துடைத்துக்கொண்டு எழுந்தான். உடனே "ஓ, மாமா! ஏ, இராக்கியாக்கவுண்டா! ஓ, காளி! பரி எடுத்துக்கொண்டு ஓடுகிருன் திருடன். ஓடி வாருங்கள்! ஓடி வாருங்கள்!" என்று உரக்கக் கூவிக் கொண்டு ஆள்போன பக்கமாய் ஓடினன்.

இதற்குள் ஊரிலுள்ள நாய்கள் எல்லாம் குலைக்க ஆரம்பித்துவிட்டன. "தோட்டத்தில் திருடன் புகுந்து விட்டான்" என்றும், "பிடி பிடி" என்றும் இன்னும் பலவாருகப் பெருங்கூச்சல் கிளம்பிவிட்டது. பக்கத்துச் சாலைகளில் உள்ளவர்கள் எல்லாரும் எழுந்து ஓடிவந்தார்கள். கடைசியில் திருடன் பிடிபட்டான். பிடிபட்ட திருடனைப் பார்த்தால் ஒரு பெண் பிள்ளை! அவள் கையில் மண் குடமும் கயிறும் இருந்தன. திருடியது தண்ணீர்! கிணற்றில் தன் குடத்தைப் போட்டுத் தண்ணீர் மொண்டிருந்தாள். "அடே பாவி, பறைப்பிள்ளை வந்து கிணற்றில் குடத்தை விட்டு விட்டதடா" என்று கூக்குரலிட்டார்கள். உடனே "அடி", "உதை", "கொல்லு", "உடை

பானையை" என்று நாலாபுறமும் கூச்சல் கிளம்பிற்று. பானை ஒரு நிமிஷத்தில் சுக்கு நூருயிற்று. உதையும் அடியும் ஒன்றின்மேல் ஒன்ருக ஓயாமல் விழுந்தன. பெண்பிள்ளை நினைவு தப்பிக் கீழே விழுந்தாள்.

"அடே, செத்துப்போய்விட்டாள். இனி அடிக்காதேயுங்களடா" என்ருன் இராக்கியாக்கவுண்டன்.

"குழி வெட்டி நாயை மூடுங்கடா" என்ருன் இன்னொருவன்.

"ஆமாம், தொந்தரவு இல்லாமற் போகும்" என்ருன் மற்ருெருவன்.

குழி வெட்டுவது, மூடுவது என்ற பேச்சுக் கிளம்பியவுடன் எல்லாருக்கும் கொஞ்சம் புத்தி தெளிந்தது. அடித்துக்கொண்டே யிருக்க முடியாது, அதற்கு ஒரு முடிவு உண்டு என்று உணர்ந்தார்கள்.

"யாரடா இவள்? யாருக்காவது தெரியுமா? பாருங்கள்" என்ருன் ஒரு கிழவன்.

"கண்டி மாரி பெண்சாதிடா! ஐயோ பாவம்! இவள் நல்ல பிள்ளையாயிற்றே. இவள் ஏன் இந்த வேலை செய்தாள்?" என்ருன் செங்கோடன், குட்டிக் கவுண்டனின் பெரிய மகன்.

"நேற்றுத் தண்ணீர் இல்லை போ என்று எல்லாப் பறைப் பெண்களையும் விரட்டிவிட்டேன். ஆகையால் இம்மாதிரிப் போக்கிரித்தனம் செய்திருக்கிருள்" என்ருன் சின்ன மகன்.

"இந்தக் கொடும் பஞ்சத்தில் சாதியேது, சாமியேது, எல்லாம் ஒன்ருய்ப் போய்விட்டது. நல்லது

மில்லை, கெட்டதுமில்லை" என்று ஒரு நெட்டையான கவுண்டன் கீழே கிடந்த பெண்ணண்டை நின்று பார்த்துக்கொண்டு சொன்னான்.

"அடே, அவள் சாகவுமில்லை, ஒன்றுமில்லை. வெறும் பாசாங்கு. உதையடா. உதை விழுந்தால் எழுந்து வீட்டுக்கு ஓடுவாள்" என்று ஒருவன் சொல்லிக்கொண்டு உதைக்கவும் உதைத்தான். மற்றவர்களும் இந்தச் சிகிச்சையைப் பிரயோகித்தார்கள். கொஞ்சம் அசைந்தாற்போல் காணப்பட்டது. ஆனால், எழுந்திருக்கவுமில்லை, பேசவுமில்லை.

"அடே, இந்த நாயைத் தூக்கிப்போய்ச் சேரியில் எறிந்துவிட்டு வாருங்கடா" என்றான் இராக்கியாக்கவுண்டன். இராக்கியாக்கவுண்டனுக்குக் கொலைக் கேசு அனுபவம் உண்டு. அதன் கஷ்டம் அவனுக்குக் கொஞ்சம் தெரியும். அவன் செஷன்ஸ் வரையில் ஒரு விசாரணைக்காகப் போயிருந்தவன்.

இராக்கியாக்கவுண்டன் சொன்னபடி, மூன்று நாலுபேர், கீழே கிடந்த பெண்பிள்ளையைத் தூக்கிக் கொண்டு சேரிப்பக்கம் சென்றார்கள்.

அ

பெற்றோர்களில்லாத அனாதைக் குழந்தைகளுடைய சரித்திரம் உண்மை விவரங்களுடன் எழுதப் பட்டால் எல்லாருக்கும் மிகுந்த பயன் தருவதாயிருக்கும். நாம் அனைவரும் அவர்களைப் போன்ற அபாக்கியர்கள் இல்லையானாலும், அவர்களுடைய அனுபவங்களிலிருந்து பல விஷயங்களைக் கற்றறிந்து

பயன் பெறுதல் கூடும். முகுந்தனுடைய அனுபவங்களும் அத்தகையனவே. தாய் இறந்து அனுதையாய்ப் போன நாள் முதல், அவன் ஏங்கித் திரிந்து அலேந்து வளர்ந்த கதை ஒரு பாரதமாகும். ஆனல், அவன் தன் சரித்திரத்தை எழுதி வைக்கவில்லே. கேட்டறிந்து எழுதுவது ஆறின கஞ்சியைப்போல் ருசியற்றிருக்கும்.

திக்கற்ற குழந்தைகளுக்கு மற்றது ஒன்றுமில்லாமல் போனுலும், தேசம் சுற்றித் திரியும் பாக்கியம் உண்டு. பூகோள சாஸ்திரம் அவர்களுக்கு அனுபவப் படிப்பு. முகுந்தனும் பாரததேசம் முழுதும் அலேந்து திரிந்து வெகு கஷ்டங்கள் பட்டு எப்படியோ முன்னுக்கு வந்தான். கடைசியாக, டாக்டர் பரிட்சையில் தேறி, ஒன்றிரண்டு ஊர்களில் இருந்துவிட்டுப் பிறகு சொந்த ஊருக்கே ஆஸ்பத்திரி டாக்டராக வந்து சேர்ந்தான்.

ஒருநாள் கமலாபுரம் ஆஸ்பத்திரியில் டாக்டர் முகுந்தன், மேஜைமீது மருந்து கொடுத்த கணக்குகளே வைத்துக்கொண்டு ஒத்துப்பார்த்துக் கொண்டிருந்தான். வருஷாந்தரக் கணக்குத் தயார்செய்து அனுப்ப வேண்டிய நாள் நெருங்கியிருந்தது. அப்போது வெளியே நான்கு ஆட்கள் தாங்கள் தூக்கிவந்த கயிற்றுக் கட்டிலேக் கீழே மெதுவாக வைத்து, "சாஅமி!" என்ருர்கள். அளபெடை வண்ணம் காதில்வீழ, "பறையர்கள் போலிருக்கிறது. என்ன? கொலேயா? போய்ப்பாரும்" என்று முகுந்தன் கம்பவுண்டருக்குச் சொன்னுன்.

அவ்வூர்ப் பள்ளிக்கூடத்தின் தலேமை உபாத்தியாயர் அருகில் உட்கார்ந்திருந்தார். அவர் தினம்

காலையில் தேகாரோக்கியத்துக்காகக் கொஞ்ச தூரம் நடந்துவிட்டு ஆஸ்பத்திரியில் டாக்டருடன் அரை மணி நேரம் வெறும் பேச்சுப் பேசிவிட்டுப் போவது வழக்கம்.

"வாரந் தவருமல் இந்த ஊரில் ஒரு கொலை; ஒரு பிரேத விசாரணை. பொல்லாத ஊர் இது. நான் இருந்த வேறு எந்த ஆஸ்பத்திரியிலும் இப்படியில்லை" என்ருன் முகுந்தன்.

"படிப்பில்லாத ஜனங்கள். இந்த ஜில்லாவில் ஒன்றுமில்லாததற்கெல்லாம் சண்டை போடுவார்கள். வாய்ப் பேச்சிலிருந்து உடனே அடி, குத்து, கொலை ஏற்பட்டுவிடுவது சர்வ சாதாரணம். ஆரம்பப் படிப்புப் பரவினுல்தான் இவைகளெல்லாம் இருக்காது" என்ருர் உபாத்தியாயர்.

இதற்குள் கம்பவுண்டர் முத்துப் பிள்ளை திரும்பி வந்து, "பிரேதமல்ல; பெண்பிள்ளையைப் பலமாய் அடித்துக் கட்டிலில் போட்டுக்கொண்டு வந்திருக்கிருர்கள்" என்ருர்.

"வயது என்ன?" என்ருர் ஹெட்மாஸ்டர். இந்தக் கேள்வியைக் கவனியாமல் முகுந்தன், "உள்ளே கொண்டுவந்து மேஜைமேல் இறக்கச் சொல்லு" என்ருன்.

ஹெட்மாஸ்டர் புன்னகையுடன் "ஏதோ திருட்டு சினேகம். அதிலிருந்து வந்த ஆபத்துப்போல் தோன்றுகிறது" என்று சொல்லிக்கொண்டு எழுந்தார்.

"இருந்தாலும் இருக்கலாம்; போய்ப் பார்ப்போம்" என்று முகுந்தன் எழுந்து மேஜையண்டை

போனான். பெண்ணைக் கொண்டுவந்த ஆட்கள் அவளை மெல்லக் கட்டிலிலிருந்து தூக்கி மேஜைமேல் படுக்க வைத்தார்கள்.

முகுந்தன் காயங்களைப் பார்த்துக்கொண்டே, "பலமாய் அடித்திருக்கிறார்கள்" என்றான். நன்றாகப் பரிசோதித்ததில், இரண்டு கையெலும்புகள் ஒடிந்து போயிருந்ததாகத் தெரியவந்தது. மற்றவை மேலான தோல் காயங்கள்.

பெண்ணைத் தூக்கிவந்த ஆட்களில் ஒருவன் மாரி. "பிழைப்பாளா, எஜமானே?" என்று அவன் கேட்டான்.

"உனக்குச் சொந்தமா?" என்றான் முகுந்தன்.

"என் வீட்டுக்காரி, சாமி! பிழைப்பாளா?" என்று கண்ணில் நீர் ததும்ப மறுபடியும் கேட்டான்.

"எல்லாம் சரியாய்ப் போகும்; பயப்படாதே. ஆஸ்பத்திரியில் ஒரு மாதம் வைத்திருக்கவேண்டும்" என்றான் முகுந்தன்.

இதைக் கேட்டதும் மாரி "ஐயோ!" என்று கதறி, "ஒரு மாதம் கஞ்சிக்கு என்ன செய்வேன்?" என்றான்.

"பைத்தியக்காரா! கஞ்சி நாங்கள் வார்ப்போம், பயப்படாதே!" என்றான் முகுந்தன். அப்போது கூட வந்திருந்தவர்களில் ஒருவன், "அடே மாரி! உனக்குத் தெரியாதா? நம்ம ஊர் சாமியடா; டாக்டர் துரை நம்ம வேப்பமரத்தையா மகன்! நம்மைக் காப்பாற்றுவார், எஜமான், வாசிபண்ணிவிடுவார்" என்றான்.

" கஞ்சி வார்த்துக் குணப்படுத்தி விடுவார். உனக்கும்கூடச் சோறு போடுவார். ஏண்டா அழுகிறுய்?" என்றுன் மற்ெறுருவன்.

" நம்ம எஜமான், நம்மைக் காப்பாற்றுவாராடா" என்றுர்கள் மூன்று பேரும் சேர்ந்து.

மாரி இப்போது நிமிர்ந்து டாக்டர் முகத்தைப் பார்த்தான். " சுவாமி, நீங்கள் முகுந்தையா அல்லவா ? " என்று கேட்டான்.

"ஆம், ஆம்" என்று முகுந்தன் அடிபட்டவனுடைய ஒடிந்த கைகளைப் பார்த்துக்கொண்டே சொன்னுன்.

" நான் போய் வருகிறேன். டாக்டர்வாள் ! " என்று ஹெட்மாஸ்டர் நமஸ்காரம் செய்தார்.

" ஆகா, சரி, நமஸ்காரம் " என்று முகுந்தன் அவருக்குச் சொல்லிவிட்டு, " என்ன சண்டை ? ஏன் இந்த அடி ? சமாசாரம் சொல்லு, தம்பி ! " என்று மாரியைக் கேட்டான்.

வந்தவர்கள் நடந்த விருத்தாந்தத்தைச் சொன்னுர்கள். கதை சொல்லும்போது எல்லாரும் சேர்ந்தாப்போல் பேசியபடியால், விவரம் தெரிந்து கொள்வது கொஞ்சம் கஷ்டமாய்த்தானிருந்தது.

௬

" முத்துப்பிள்ளே ! ஏதாவது பூப்பறித்து வைத்திருக்கிறீரா, என்ன ? " என்று டாக்டர் கேட்டார்.

" இல்லே ஐயா ! பூவேது, பறிப்பதேது ? செடியெல்லாம் காய்ந்துகிடக்கிறது " என்று கம்பவுண்டர் சொன்னுர்.

" இந்தப் பெண்ணண்டை வந்தால் கம் என்று மல்லிகை வாசனை வருகிறதே, என்ன காரணம்? அம்மா கொய்துவைக்கும் மல்லிகைப்பூ வாசனை மாதிரியே இருக்கிறது" என்று முகுந்தன் தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். இவ்விதம் தன் தாய் ஞாபகத்துடனே பூவாயியின் காயங்களுக்கெல்லாம் மெதுவாக மருந்து தடவினான். பிறகு எலும்பு உடைந்த கைகளுக்கு சிம்புகள் வைத்துக் கட்டினான்.

" எப்படியிருக்கிறதம்மா ? " என்று அவளைக் கேட்டான்.

" அப்பா ! " என்று அவள் பெருமூச்சுவிட்டு " இப்போது கொஞ்சம் பொறுக்கலாம், எஜமானே ! சாமி உன்னை மகாராஜனாக்கட்டும். நீ சுகமாயிருக்க வேண்டும், எஜமானே ! " என்றாள்.

இவ்வார்த்தைகள் அந்தப் பெண்வாயிலிருந்து வந்தபோது அவள் பார்வையும், அவள் முகத்தில் பூத்த புன்முறுவலும், பெற்ற தாய் தன் குழந்தையைக் கண்டு ஆனந்தப்படும்போது தோன்றும் முகமலர்ச்சியாகவே இருந்தது. முகுந்தனுக்கு ஏனோ தன் தாயின் நினைவு மேன்மேல் அதிகரித்து வந்தது.

" இது என்னவோ தெரியவில்லை. இவளண்டை வரும்போதெல்லாம் அம்மா நினைவு மேலிடுகிறது " என்று மறுபடியும் தனக்குள்ளே சொல்லிக்கொண்டு முகுந்தன் எழுந்து கைகழுவப் போனான். எங்கே போனாலும் மல்லிகை வாசனை நிறைந்தாற்போலிருந்தது. முகுந்தன் தாயாருக்கு மல்லிகைப் பூவில் அதிகப் பிரியம். புருஷன் இறந்து தலையில் பூவைத்துக்

கொள்ள முடியாமற்போன பிறகுங்கூட தினம் தவறு மல் எங்கிருந்தாவது மல்லிகைப்பூ பறித்துக்கொண்டு வந்து பூஜைக்கு வைப்பாள். வீடு முழுதும் வாசனை வீசும். இன்று முகுந்தன் எங்கும் அவ்வாசனையைக் கண்டான்.

இம்மாதிரி சில சமயங்களில் அகாரணமாக ஏதோ ஒரு வாசனை அல்லது ஒரு பாட்டின் இசை மனதில் திடீர் என்று தோன்றி, அதனுடன் குழந்தைப் பிராயத்தின் நினைவு உதிப்பது பலருடைய அனுபவம் அல்லவா? சில வேளைகளில் ஏதோ முன்னுல் மோந்த மணம், எப்போதோ கேட்ட பாட்டு என்று மாத்திரம் நினைவு தோன்றுமேயொழிய, எப்போது, எந் நாளில், நுகர்ந்தது என்று சொல்ல முடியாம லிருக்கும். இவை பூர்வ ஜன்ம நினைவுகள் என்று சிலர் சொல்வார்கள். தான் குழந்தையா யிருந்தபோது வேலம்பட்டி வீட்டில் தாயுடன் விளையாடின பருவம் இன்று முகுந்தன் மனதை விடாமல் கவர்ந்தது.

'இதென்ன ஆச்சரியம்! இந்த மல்லிகைப் பூ வாசனை விடமாட்டேன் என்கிறது. ஒருவேளை, இறந்தவர்கள் மறுபடியும் பிறக்கிறுர்களென்று சொல்லுகிறுர்களே, அம்மாதான் இந்தப் பெண் ணுய்ப் பிறந்தாளோ, என்னவோ? யார் இல்லையென்று சொல்ல முடியும்?' என்று இந்த மாதிரி எண்ணி, முகுந்தன் மறுபடி எழுந்து அந்தப் பெண்ணின் கட்டி லண்டை போனுன். கண் மூடியிருந்தவள் கண்ணைத் திறந்து இவனைப் பார்த்தாள். அந்தப் பார்வை மறு படியும் இவனுக்குத் தாயார் நினைவை உண்டாக்கிற்று. மீண்டும் மல்லிகைப் பூ வாசனை குப் என்று வீசிற்று.

கo

படுத்ததும் தூங்கிப்போவது முகுந்தன் வழக்கம். இந்த வித்தையை அவன் வடக்கே சுற்றிக் கொண்டிருந்த காலத்தில் ஒரு யோகியிடம் கற்றுக்கொண்டான். படுத்த உடன் தூக்கம் வராமல் எண்ணங்கள் பல தொடர்ந்து தொடர்ந்து வருவது எல்லாருக்கும் சாதாரண அனுபவம். முகுந்தன் அவ்வெண்ணங்களை விரட்டி, மனதை யடக்கிப் படுத்தவுடன் தூங்கிப் போகப் பயின்றிருந்தான். ஆனால், இன்று அது பலிக்கவில்லை. என்ன முயற்சி செய்தும் தூங்க முடியவில்லை. சிறிது நேரம் புரண்டு புரண்டு பார்த்துவிட்டுக் கடைசியில் எழுந்து உட்கார்ந்து விளக்கேற்றிப் புஸ்தகத்தை எடுத்துக் கொண்டான். அது, இறந்துபோன நண்பன் ஒருவன் கொடுத்த பகவத்கீதைப் புஸ்தகம். அதைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான். இரண்டாவது அத்தியாயம், 22-ம் சுலோகத்துக்கு வந்தான் :

> "ஒருவன் நைந்துபோன துணியை எறிந்துவிட்டுப் புதிய துணியை உடுப்பதுபோல் தேகத்தில் வசிக்கும் ஆன்மாவானது பழுதுபட்ட தேகத்தைவிட்டு வேறு புதிய தேகத்தை யடைகிறது."

முகுந்தனுக்குத் தன் தாயார் நினைவு வந்தது.

"ஆமாம்; ஆனால், இறந்தவனுக்கு மறு பிறப்பில் என்ன தேகம் கிடைக்கும்? நினைத்த தேகம் எடுக்க முடியுமா? அது முடியாது. தான் செய்த நன்மை, தீமை, உபகாரம், அபகாரம், இவைகளையொட்டியே புது ஜன்மம் கிடைக்கும். மனிதனோ, பிராணியோ

துன்பத்தில் அடிபடுவதை அடிக்கடி நாம் காண் கிறோம். நம்மைத் துக்க சாகரத்தில் மூழ்கடித்துவிட்டு இறந்துபோன நமது தாயே, தகப்பனே, அண்ணனே மறுபிறப்பில் அந்த உருவம் எடுத்திருக்கலாமல்லவா? ஆதலின் துன்பப்படும் மனிதனுக்காகட்டும், பிராணிக் காகட்டும், நாம் அன்புடன் ஆதரவளித்து நோயைத் தீர்க்க முயலவேண்டும். யாராவது பொருளோ, பதவியோ அடைந்து சுகமாயிருப்பதைக் கண்டு நாம் பொறுமைப் படுகிறோமே, அது என்ன அறியாமை? ஒருவேளை, நமக்கு மிகவும் பிரியராயிருந்து அகாலத் தில் இறந்துபோன எவருக்காக நாம் இன்னும் துக்கப் படுகிறோமோ அவரே, மறு ஜன்மம் எடுத்து, தாம் முன்செய்த நற்கருமங்களின் காரணமாய் அந்த நல்ல பதவியையோ, பொருளையோ அடைந்திருக்கலா மல்லவா? இப்படி முகுந்தன் தனக்குத்தானே வியாக் யானம் சொல்லிக்கொண்டான்.

இந்த கீதா சுலோகத்தை இதற்கு முன் பலதரம் அவன் படித்ததுண்டு. புதியதொன்றுமில்லை. ஆனால், சில சமயங்களில் நாம் படிக்கும் சுலோகமோ, பாட்டோ, குறளோ முன்னெப்போதுமில்லாத புது மைத் தெளிவுடன் விளக்கமாகிறது. இந்த பகவத் கீதை சுலோகம் முகுந்தனுக்கு அவ்விதம் இன்று விளங்கிற்று.

"வயதினாலோ, நோயினாலோ மெலிந்து உடல் தான் இறந்துபோகிறது. ஆனால், நோயும், மூப்பும் இல்லாத ஆத்மாவும் அத்துடன் இறந்துபோகுமோ?

அதெப்படி முடியும்? அம்மாவின் உடல் இறந்தாலும் அவள் மறுபடியும் வேறு உடலில் பிறந்தே இருக்க வேண்டும்" என்றிவ்வாறு இடையிடையே பற்பல எண்ணங்கள் எண்ணிக்கொண்டே படித்துக்கொண்டிருந்தான்.

கக

"அப்பா, முகுந்தா! குழந்தாய்! எழுந்திருக்கிருயா? சாப்பிட வருகிருயா?" என்று அம்மா சமையல் உள்ளிலிருந்து கூப்பிட்டாள்.

அவள் குரலே; அதில் சந்தேகமே யில்லே! இதென்ன அதிசயம்? இவ்வளவு நாள் இவள் இறந்து விட்டாள் என்று நினேத்து வருந்திக்கொண்டிருந்தேனே? இதோ அவள் குரல்! அவளே! நான் ஊர் ஊராய்ச் சுற்றியது, கஷ்டப்பட்டது, எல்லாம் வெறுங் கனவு. அம்மா செத்துப்போகவில்லே; உயிருடன் இருக்கிருள். பள்ளிக்கூடத்துக்குப் போக நேரமாயிற்று. இனி ஒருநாளும் அழுக்குத் தண்ணீர் குடிக்கமாட்டேன். எனக்குக் காலரா வந்தாலும் அவளே என்னருகில் வரவிடமாட்டேன். அவளுக்கும் நோய் ஒட்டும்படி விடமாட்டேன். ஐயோ! இதென்ன சந்தோஷம்? அம்மா உயிருடன் இதோ இருக்கிருளே! அம்மா! கிட்டவா!

* * * *

எங்கேயோ அவசரமாய்க் குடம் எடுத்துக்கொண்டு வேகமாய்ப் போகிருள். என்னேயும் வாவென்று அழைப்பதுபோல் கையினுல் சைகை காட்டு

கிறாள். அவசரமாய்ப் போகிறாள். இதென்ன சேரிக்குள் ஓடுகிறாள்! ஐயோ! நில், அம்மா, நில், ஏன் ஓடுகிறாய்? அதோ, சேரிக்குள் போய்விடுகிறாள். அங்குள்ளவர்கள் எல்லாம் சுற்றிக்கொண்டு அடிக்கிறார்கள். 'வந்தாயா சேரிக்குள்? பாப்பாத்திக்கு இங்கென்ன வேலை?' என்று காட்டு மிருகங்களைப்போல் கூக்குரலிட்டுக்கொண்டு தடி எடுத்துவந்து மனம் போனபடி அடித்து எலும்பை நொறுக்கி விடுகிறார்கள். கயிற்றுக் கட்டிலில் போட்டு நாலுபேர் தூக்கிக்கொண்டு வந்து ஆஸ்பத்திரியில் போடுகிறார்கள். ஐயோ, அம்மா!

என்ன புத்தி மாறாட்டம்? காலரா கண்டு, பாவம், படுத்தபடுக்கையாக அல்லவா இருக்கிறாள்? உடம்பில் சொல்ல முடியாத வலி. கை கால் இழுப்பு. வயிற்றில் பொறுக்க முடியாத நோவு. ஐயோ, அம்மாவைத் தூக்கிப்போகிறார்களே, என்னால் எழுந்திருக்க முடியவில்லையே! 'முடிந்து போயிற்று' என்கிறார்களே. என்ன? அம்மாவுக்கு என்ன? ஏன் பேசாதிருக்கிறாள்? செத்தா போய்விட்டாள்? எனக்கு இனித் தாய் இல்லையா? ஐயோ! என்ன செய்வேன்?

* * * *

திடுக்கிட்டு முகுந்தன் கண்விழித்தெழுந்தான். நாற்காலியிலேயே தூங்கிப்போனபடியால் பகவத் கீதைப் புஸ்தகம் கீழே விழுந்து கிடந்தது. கமலாபுரம் ஆஸ்பத்திரியில் இருப்பதுதான் உண்மையாகவும், மற்றவை யெல்லாம் கனவாகவும் முடிந்தன. எழுந்து படுக்கையில் படுத்துக்கொண்டு தூங்கிப் போனான்.

கஉ

பூவாயியின் காயங்களை யெல்லாம் ஆற்றிக் கை யெலும்பைக் குணப்படுத்த ஒரு மாதத்திற்கு மேலா யிற்று. மிக்க அன்புடனும் ஆதரவுடனும் முகுந்தன் மருந்து போட்டுப் பார்த்து வந்தான்.

"தம்பி, மாரி, நான் ஒன்று சொல்லுகிறேன். கேட்கிறாயா?" என்றான் முகுந்தன்.

"சொல்லு, எஜமானே!" என்றான் மாரி.

"நாம் சிறு பையன்களாயிருக்கையில் என்னை ஒரு பெரிய குரங்கின் கையிலிருந்து காப்பாற்றினாய் அல்லவா? அப்போது என் தாய் அதற்காக உன்னை அடித்துத் துரத்தினாளல்லவா?"

"ஏதோ நடந்தது. அது வெகு நாளாயிற்று. சாமி! இப்போது என் வீட்டுக்காரியின் உயிரைக் காப்பாற்றிக் கொடுத்தாயே. என் வீட்டில் விளக்கு வைத்தாயே, எஜமானே!"

"மாரி, செத்துப்போனவர்கள் திரும்பிப் பிறக் கிறார்களென்று உனக்குத் தெரியுமா? நல்லதோ, தீயதோ, செய்ததன் பலன்களை அனுபவிக்க மறு ஜன்மம் எடுப்பது தெரியுமா?"

"ஆமாம், எஜமான்! அப்படித்தான் சொல்லிக் கொள்கிறார்கள். ஆண்டவன் எல்லாம் பார்த்து வரு கிறான். ஒருவரையும் விடமாட்டான். அவனுக்கு மேல் யார்?"

"என் தாயார் உனக்குச் செய்தது பெருந் தவறு. அதற்காக அவள் இப்போது வேறு ஜன்மம் எடுத்துக்

கஷ்டப்படுகிருள் என்றே நினைக்கிறேன். அதற்காக நான் ஒரு நோன்பு இருக்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறேன். "

"சொல்லு, சாமி!" என்ருன் மாரி.

"இப்போது உங்களுக்கெல்லாம் மிகவும் கஷ்டகாலம். கொடும் பஞ்சம். நீயும் உன் மனைவியும் என் வீட்டில் என்னுடன் இருங்கள். எனக்குப் பந்துக்கள் இல்லை. நீயும் பூவாயியும் எனக்குத் தம்பியும் தங்கையுமா யிருக்கவேண்டும்" என்ருன் முகுந்தன்.

மாரிக்கு ஒன்றும் புரியவில்லை. "சாமி, நாங்கள் எஜமானுக்குத் தம்பியும் தங்கையும் எப்படி ஆவோம்? முடியாது எஜமானே!" என்ருன் மாரி.

அதற்கு முகுந்தன் "மாரி, உங்களை இப்படிக் கேவலமான வாழ்வு நடத்தும்படி மற்றவர்கள் வைத்திருப்பது பெரும் பாவம். அதற்காகவுந்தான் இந்த நோன்பு நிச்சயித்தேன். நீ மறுக்கக்கூடாது" என்ருன்.

"சாமி!"

"இறந்தால் புது ஜன்மம் உண்டு என்று சொன்னேனல்லவா? உன் மனைவியைப் பார்த்தது முதல், என்ன காரணமோ, அவள் என் தாயாரே என்று நான் நினைக்கிறேன்."

"சாமி! எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே?"

"தம்பி, விளங்காமற் போனல் போகட்டும். நான் சொல்வதை நீ மறுக்கக்கூடாது. என் கூட நீங்கள் இருக்கவேண்டும்."

"என் தாய் சம்மதிக்கமாட்டாளே?"

"நான் சமாதானப்படுத்துகிறேன்" என்றான் முகுந்தன்.

"அவள் ஒப்புக்கொண்டால் சரி, எஜமானே!" என்று மாரி சொன்னான்.

எப்படியோ முகுந்தன் சொல்லிக் குப்பாயியைச் சம்மதிக்கச் செய்தான்.

அதுமுதல் முகுந்தன் ஊருக்குப் பறையனாய்ப் போனான். அவன் மனம் சாந்தியடைந்தது.

## கூனி சுந்தரி

---

க

" அவர் எக்கேடு கெட்டால் நமக்கென்ன ? இந்த மாதிரியான வேலைகளில் இறங்குவது அபாயம், கமலம். வேண்டாம், நான் சொல்வதைக் கேள்."

" ஒரு அபாயமும் இல்லை, காமு. நம் கையெழுத்து அவருக்குத் தெரியுமா ? தெரிந்தாலுமென்ன ? பார்க்கலாமே ஒரு வேடிக்கை ! "

" சரி, நீயே எழுது கமலம். என் பேனா ஓடவில்லை. "

" கொடு இங்கே, நான் எழுதுகிறேன். இதில் என்ன கஷ்டம். "

இவ்வாறு சென்னை வீரேசலிங்கம் மாணவிகள் விடுதியில் ஓர் அறையில் பேச்சு நடந்தது. கமலமும் காமாட்சியும் பி. ஏ. வகுப்பில் படித்தார்கள். இருவரும் சேர்ந்து ரகசியமாக ஒரு மொட்டைக் குறும்புக் கடிதம் தயாரித்தார்கள்.

*    *    *    *

கீதாப்பிரசங்க சிரோமணி ஸ்ரீமான் நரசிம்ம சாஸ்திரி அவர்களுக்கு நமஸ்காரம்.

ஐயா, வீரேசலிங்கம் விடுதியைச் சேர்ந்த சிறு பெண்களாகிய நாங்கள் அனைவரும் பணிவுடன் செய்துகொள்ளும் விண்ணப்பம் என்னவென்றால்,—

தாங்கள் பெரிய உத்தியோகத்திலிருந்து அதைவிட்டு பகவத் விஷயத்தில் ஈடுபட்டு சாஸ்திரங்களை ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லித் தரும சேவை செய்துவருவதை நாங்கள் மிகவும் பாராட்டுகிறோம். சென்ற ஞாயிற்றுக்கிழமை வசந்த மண்டபத்தில் தாங்கள் செய்த அரிய சொற்பொழிவைப்போல் இதற்குமுன் நாங்கள் கேட்டதே இல்லை. இதுவரை யாருமே கீதையையும் வேதாந்தத்தையும் இவ்வளவு அழகாக விளக்கிச் சொன்னது கிடையாது. ஆனால் நீங்கள் இவ்வளவு திறமையுடன் மற்றவர்களுக்கு எடுத்து உபதேசிக்கும் உண்மைகள் ஏன் உங்களுக்கே பயன்படாமல் போய்விட்டன?

ஆமையானது தனது அங்கங்களை உள்ளே இழுத்துக் கொள்ளுவதுபோல வெளிச் செல்லும் புலன்களை விஷயானுபவங்களிலிருந்து உள்ளே இழுத்துக்கொள்ளவேண்டும் என்றும், பஞ்சேந்திரியங்களான குதிரைகளைக் கடிவாளம் போட்டு அடக்கவேண்டும் என்றும், இல்லாவிடில் குதிரைகளோடு வண்டி நெறி தவறிப் பள்ளத்தில் வீழ்ந்து விபத்துக்குள்ளாகும் என்றும் இவ்வா

றெல்லாம் எவ்வளவு அழகாக நீங்கள் பிரசங்கம் செய்தீர்கள்? அதை நீங்கள் ஏன் பின்பற்றி நடக்கவில்லை? பிரசங்கம் செய்தபோது அங்கு இருந்த பெண்களைக் கண்ணெடுத்துக்கூடப் பார்க்காமல் இரண்டு மணிநேரம் பிரசங்கம் செய்து முடித்தீர்களே! அதைப் பார்த்து, தாங்கள் காஷாயம் தரிக்காத சன்னியாசியே என்று எல்லோரும் பேசிக்கொண்டார்கள். ஆனால் சென்ற இரண்டு நாளாகத் தங்கள் நடவடிக்கை இதற்கு முற்றிலும் மாறாயிருக்கிறது. நெறி தவறிப் பள்ளத்தில் விழுவதாக இருக்கிறீர்கள். தங்களுடைய கண்களைத் தாங்கள் அடக்க முயன்றதாகக் காணப்படவில்லை. பிரின்ஸிபல் அவர்களுக்குச் சொல்லி விடலாமென்று எங்களுள் சிலர் யோசித்தோம்.

ஆனால் தங்களை அவமானப்படுத்தலாகாது என்றே அப்படிச் செய்யாமல் இந்தக் கடிதத்தை எழுதத் தீர்மானித்தோம்.

தங்களுடைய மனைவி இறந்தபின் மறுபடி ஏன் தாங்கள் வழக்கம்போல் மறுவிவாகம் செய்துகொள்ளவில்லை? செய்துகொண்டிருந்தால் இந்த ராக விகாரங்கள் உங்களைத் தொந்தரவு செய்ய நேர்ந்திராது. தயவுசெய்து நாங்கள் சொல்வதைக் கேளுங்கள். கீதைப் பிரசங்கங்கள் இனி வேண்டாம். ஊருக்குத் திரும்பிப்போய் விவாகம் செய்துகொள்ளுங்கள். தங்களுக்கு அதிக வயது ஆகவில்லை. ஐம்பதுதானிருக்கும் என்று எண்ணுகிறோம். ஒரு பெண்ணை உங்களுக்காகப் பார்த்திருக்கிறோம். ரேணிகுண்டா ஸ்டேஷனை யடுத்

துள்ள வங்கீபுரத்தில் தெற்குத் தெரு பெரிய மாளிகை கோவிந்தய்யர் என்பவருக்கு ஒருபுதல்வி இருக்கிறுள். அவளுக்கு வயது இருபத்திரண்டு. உங்களுக்குச் சம்மதமாயிருந்தால், கலியாணம் செய்துவைத்து விடுகிறேம். எங்களுக்கு ஓர் அடையாளம் வேண்டும். மெத்தையில் கயிற் றுக் கொடியில் உங்கள் பட்டுக்கரை உத்தரீ யத்தை விரித்துப்போட்டு, அதன்மேல் உங்கள் கறுப்புக் குடையைத் தொங்க வைத்தால் இவ் விடத்திலிருந்து எங்களுக்குத் தெரியும். நாங்கள் சொல்லும் யோசனை உங்களுக்குச் சம்மதம் என் பதற்கு அதுவே அடையாளம். மற்ற ஏற்பாடு கள் எல்லாம் நாங்கள் செய்கிறேம். பெண் வீட் டில் நாங்கள் சொல்லிச் சம்மதிக்கச் செய்துவிடு கிறேம்.

அவமானத்துக்கு ஆளாக வேண்டாம். நல்ல பெயரைப் பாழ்படுத்திக் கொள்ளவேண் டாம். இனிமேல் வேலையில்லாமல் மெத்தைமேல் நிற்க வேண்டாம்.

தங்கள் நன்மையைக் கோரும்

**வீரேசலிங்கம் விடுதி மாணவிகள்**

உ

மகாதானபுரம் நரசிம்ம சாஸ்திரி, ஜில்லா முனி சீபு பதவியில் பன்னிரண்டு வருஷம் ஒரு புகாரும் இல்லாமல் உத்தியோகம் செய்த பிறகு, ஒரு வருஷம் ஆக்டிங் சப்-ஜட்ஜாகவும் இருந்தார். விவாகமாகிப்

பதினைந்து வருஷம் குழந்தையில்லாமல் பதினறுவது வருஷத்தில் மனைவி கருப்பம் தரித்தாள். வெகு ஜாக்கிரதையாக எல்லாச் சவுகரியங்களும் வைத்திய ஏற்பாடுகளும் செய்திருந்தார். ஆனபோதிலும், பிரசவமாகி ஏழாம் நாள் விஷசுரம் கண்டு பல வைத்தியர்கள் பார்த்தும் குணப்படாமல், பெண் குழந்தையை மட்டும் விட்டுவிட்டு மனைவி மறைந்து போனாள். சாஸ்திரி ஆருத் துயரத்தில் மூழ்கினர்.

அவருடைய தமக்கை விதவையாகி, அவருடைய வீட்டிலேயே இருந்துவந்தாள். இவள் குழந்தையை மிகவும் அன்பாக வளர்த்துவந்தாள். மறுவிவாகம் செய்துகொள்ளும்படி தம்பியை வற்புறுத்தி வந்தாள். ஆனல் அவர் கண்டிப்பாக மறுத்துவிட்டார். கச்சேரி வேலையிலும் பகவத் விஷய நூல்கள் படிப்பதிலும் வைராக்கியமாகக் காலங் கழித்துவந்தார்.

நரசிம்ம சாஸ்திரியின் துரதிருஷ்டம் இதனுடன் தீரவில்லை. எவ்வளவோ சொல்லியும் கேட்காமல் மார்கழி ஏகாதசி தரிசனத்திற்கு ஸ்ரீரங்கம் போகவேண்டும் என்று தமக்கையம்மாள் பிடிவாதம் பிடித்தாள். அங்கே போனாள். போன இடத்தில் வாந்திபேதி கண்டு திடீரென்று இறந்துவிட்டாள். குழந்தைக்கு இன்னும் இரண்டு வருஷம் சரியாக நிறையவில்லை.

மறுபடியும் பெண்களைப் பெற்ற உறவினர் சாஸ்திரியாரிடம் வந்தார்கள். குழந்தையைப் பார்த்துக் கொள்வதற்காகவாவது விவாகம் செய்துகொள்ளுங்கள் என்று ரொம்ப வற்புறுத்திப் பார்த்தார்கள். வேண்டாமென்று சாஸ்திரியார் மறுத்ததோடல்லாமல்

வேலையையும் விட்டு விலகினர். புதுப் படிப்பும் பழைய படிப்பும் நன்ருகக் கூடியிருந்தபடியால் நரசிம்ம சாஸ்திரியார் வெகு சீக்கிரத்தில் காலட்சேப உலகத்தில் பெரும் புகழ் அடைந்தார். சென்னையில் அவருடைய பிரசங்கம் என்ருல் பாட்டுக் கச்சேரிக்குக் கூடுவது போல் ஏராளமான கூட்டம் கூடிவிடும். எல்லாச் சாதியாரும் ஆண்களும் பெண்களும் படித்தவர்களும் பாமரர்களும் கூடுவார்கள். ஜனங்கள் கீதாப் பிரசங்க சிரோமணி என்று அவருக்குப் பட்டப் பெயர் கொடுத்தார்கள்.

இவ்வாறு பல மாதங்கள் கழிந்தன. ஊழ்வினைப் பயனைத் தடுக்க முடியுமா? வெகுநாள் வைராக்கியமாக நடந்துவந்தவர்: அந்தப் புதன்கிழமை இரவில் அவர் புத்தி தடுமாறிவிட்டது.

வீரேசலிங்கம் மாணவி ஹாஸ்டல் பின்புறமுள்ள தெருவில் ஒரு மெத்தை வீட்டில் அவர் தங்கியிருந்தார். சில மாணவிகள் ஓய்வுக்கு மெத்தைமேல் நின்றதும் சாஸ்திரியார் தன் வீட்டு மெத்தைமேல் நின்றதும் இரண்டும் ஒன்ருகச் சேர்ந்தது. அது முதல் ஒரு மயக்கம் ஏற்பட்டது. சாஸ்திரியாரின் கண்கள் விஷயானுபவத்தில் இறங்கின. இரண்டாம் நாளும் மூன்ரும் நாளும் இவ்வாறு நடந்தது. இது மாணவிகளுக்குப் பிடிக்கவில்லை. இதன் பயன்தான் மேலே சொன்ன மொட்டைக் கடிதம்.

ங

தபாற்காரன் கதவைத் தட்டியதும் எழுந்து சென்று தாமே கடிதத்தைப் பெற்றுக்கொண்டார்.

கடிதத்தை நெருப்பில் போடப்போனார். எதிர் பாராத அவமானத்தில் சிக்கிக்கொண்டேனே என்று தத்தளித்தார். மறுபடியும் யோசித்து, அதை மடித்துப் பத்திரப்படுத்தினார்.

எடுத்துக்கொண்ட பிரதிக்ஞை என்னவாயிற்று, படித்த படிப்பு என்ன பயன்பட்டது, இந்த அவமானத்தை எவ்வாறு தாங்குவது என்று நொந்து கொண்டார்.

ஒன்றும் தோன்றாமல் ஏதோ ஒரு புஸ்தகத்தை எடுத்துப் படிக்க உட்கார்ந்தார். கவனம் படிப்பில் செல்லவில்லை. "ஹே சீதாராமா, என் மூளையும் கெட்டுப் போயிற்றா ?" என்று தம் இஷ்டதேவதையிடம் முறையிட்டுக்கொண்டார்.

அன்றிரவு தூக்கமே வரவில்லை. இறந்துபோன மனைவியையும் தமக்கையையும் நினைத்துக்கொண்டார். சென்னையைவிட்டு ஊருக்குத் திரும்பிப் போவது என்று நிச்சயம் செய்தார். ஆனால் அடுத்த ஞாயிற்றுக் கிழமை சிந்தாதிரிப்பேட்டையில் ஜவுளிக்கடை ராமநாதஞ் செட்டியார் வீட்டில் கீதாப் பிரசங்கம் ஏற்பாடாயிருப்பதை எவ்வாறு நடத்தாமல்போகமுடியும்? பிரசங்கம்தான் எப்படி செய்யமுடியும் ? யோசித்து யோசித்து இரவு முழுதும் தூக்கமில்லாமல் கழித்தார்.

ரு

மாணவிகள் ஏமாற்றமடைந்தார்கள். அடுத்த நாள் சிரோமணியார் மெத்தையில் கொடிமேல் உத்தரீயமும் குடையும் தென்படவில்லை. மறுநாளும்

இல்லை. தங்களுடைய குறும்பு பலிக்கவில்லையே என்று மிகவும் வருத்தப்பட்டார்கள்.

"இன்னொரு நாள் பார்க்கலாம், காமாட்சி" என்றாள் கமலம்.

"ஒருநாளும் ஏமாற மாட்டார். பாகவதர் எம காதகர்" என்றாள் காமாட்சி.

"பந்தயம்!"

"இரண்டேகால் ரூபாய்."

"சரி, பார்க்கலாம். இன்னும் இரண்டுநாள் கெடுவு கொடு" என்றாள் கமலம்.

மூன்றும் நாள் இரவு சாஸ்திரியார் வானத்தைப் பார்த்தபடி மொட்டை மாடிமேல் உட்கார்ந்திருந்தார்.

"இந்த அழகும் பெருமையும் பொருந்திய விசுவ மண்டலத்தில் நானும் ஒரு துகள், தொத்திச் சுழன்று கொண்டிருக்கிறேன், என் சிறுமையை என்னென்று சொல்லிப் பழிப்பது! என் கவலையும் பயமும்,கடவுளே, உனக்கு ஒரு பொருட்டாகுமா? என்னைக் காக்க வேண்டும்" என்று கண்ணீர் வடித்தும் ஏங்கியும் வெகுநேரம் கழித்தார். அப்படியே தூங்கிவிட்டார். இறந்துபோன மனைவி கனவில் தோன்றினாள். கையில் தட்டும் தட்டில் வெற்றிலைப் பாக்கும் கொண்டு வந்து கொடுத்து, "நீங்கள் ஏங்கவேண்டாம்" என்று சொல்லி மறைந்துவிட்டாள். இந்தக் கனவைக் கண்டதும் சாஸ்திரியாரின் மனம் ஒருவாறு தெளிவு கொண்டது. கனவில் ஸ்திரீ தரிசனம் மங்களகரம் என்பது சாஸ்திரம். காரிய சித்திக்கு அது நல்ல சகுனம். மறு விவாகம் செய்து கொள்வதே நலம் என்று இறந்து

போன மனைவியே வந்து தனக்குச் சொன்னதாகப் பொருள்படுத்திக் கொண்டார். 'மாணவிகள் சொல்வது மிகவும் சரி. பக்குவப்படாத நிலையில் பிரகிருதியை அடக்கப் பார்ப்பதில் என்ன பயன்? மனத்தில் மாசு இருக்க, பலாத்கார இந்திரிய நிக்கிரகத்தினால் என்ன லாபம்? அகங்காரத்தினால் சாஸ்திரத்தைப் புறக்கணித்தேன். விவாகம்செய்துகொள்வதே நலம்' என்று தீர்மானித்தார். இந்த மாணவிகளின் வேலை பகவதாக்ஞை என்று கண்டார்.

மறுநாள் காலையில் பட்டுக்கரை உத்தரீயத்தைக் கொடியில் பிரித்துப் போட்டு அதன்மேல் தன் குடையையும் தொங்கவிட்டார்!

* * * *

ஹாஸ்டலில் கமலத்துக்கும் காமாட்சிக்கும் தாங்க முடியாத குதூகலம். குதித்துக் கூத்தாடினார்கள்.

"கொண்டுவா இரண்டேகால் ரூபாய்!" என்றாள் கமலம்.

"சரி, நீ புறப்படு வங்கீபுரத்திற்கு" என்றாள் காமாட்சி.

"கிழவர் சிக்கினார் வலையில்" என்றாள் கமலம்.

## ரு

வங்கீபுரம் கோவிந்தய்யர் சொத்துக்காரர். பரம்பரையாகப் பண்டித குடும்பம். அவரும் நல்ல வித்துவான். அவருக்கு, சுந்தரி என்று ஒரே ஒரு பெண். பிள்ளை கிடையாது. பெண்ணுக்கு சம்ஸ்கிருதம் நன்றாய்ச் சொல்லித் தந்தார். பன்னிரண்டாவது வயதில்

விவாகம் செய்ய வரன் தேடிக் கொண்டிருந்த சமயம், பெண்ணுக்கு ஒரு கடுஞ் சுரம் கண்டு, அதன் பயனாக கால் கட்டிக்கொண்டு முதுகும் கூனிப் போயிற்று. எவ்வளவோ வைத்தியம் செய்து பார்த்தும் பயன்படவில்லை. விவாகமாகாத குழந்தைக்கு இப்படி ஆய்விட்டதே என்று அந்தக் கவலையினாலேயே கோவிந்தய்யருடைய மனைவி மெலிந்து வாடிப்போய் இறந்து போனாள்.

கோவிந்தய்யர், மகளுக்கு எப்படியாவது சாஸ்திரப்படி விவாகம் செய்துமுடிக்க வேண்டுமென்று எவ்வளவோ முயன்றார். ஏராளமாக வரதட்சிணை கொடுப்பதாகவும் சொல்லிப் பார்த்தார். கூனியும் சப்பாணியுமான பெண்ணைக் கட்டிக்கொள்ள யாரும் முன் வரவில்லை. ஆனால் பெண் தைரியசாலி. தன் துர்ப்பாக்கியத்தைப் பொறுமையாகவே சமாளித்துக் கொண்டு தகப்பனாருக்குத் தன்னாலான அளவு சமாதானம் சொல்லி வந்தாள். தமிழும் சமஸ்கிருதமும் நன்றாகப் பயின்று சந்தோஷமாகவே இருந்தாள்.

உடலில் இவ்வளவு குறையிருந்த போதிலும், வீட்டில் எல்லாக் காரியமும் சுந்தரியே மிகச் சாதுரியமாக எப்படியோ செய்துவந்தாள். சுந்தரி என்றுதான் அவளுக்குப் பெயர்! பெயர் வைத்தபோது, பாவம், அவள் தாயார் தன் மகள் இப்படி குரூபி ஆவாள் என்று என்ன கண்டாள்? பெயர் வைத்தபோது பொருத்தமாகத்தான் இருந்தது. தன் உறவினர்களின் குழந்தைகளைவிட தன் குழந்தை அழகு என்றுதான் தாயார் நினைத்தாள். மாநிறந்தான், ஆனால் என்ன?

கண்ணும் மூக்கும் நெற்றியும் புருவங்களும் சித்திரம்போல் அமைந்திருந்தன. கூனியாய்ப் போன பிறகுங்கூட,முதுகும் கால்களும் பார்க்காமல் முகத்தை மட்டும் பார்த்தால் அனேகப் பெண்களைப் போலவே இவளும் இருந்தாள். சப்பாணியாய்ப் போனதற்காகப் பெயரை மாற்ற முடியுமா? பெயரின் பொருளும் வங்கீபுரத்தில் மறந்து போயிற்று. அந்தக் கிராமத்தில் 'சுந்தரி' என்றால் இந்த அபாக்கியவதியின் வடிவம் தான் பொருள்.

* * * *

பி. ஏ. படித்துக்கொண்டிருந்த கமலம் அதே ஊரில் பெரிய மிராசுதாரின் செல்லப் பெண். அவள் கோவிந்தய்யர் வீட்டுக்கு வருவது வழக்கம். சுந்தரி யிடம் ஓர் அளவு நட்பும் உண்டு.

"என்ன கமலம்! இப்போ ஏது பள்ளிக்கூட லீவு? ஏன் ஊருக்கு வந்துவிட்டாய்?" என்றார் கோவிந்தய்யர்.

"மாமா! நான் சுந்தரிக்கு ஓர் அகமுடையான் சம்பாதித்திருக்கிறேன். நீங்கள் ஒப்புக்கொள்ள வேண்டும்" என்றாள்.

முதலில், வேடிக்கை செய்கிறாள் என்று கோவிந் தய்யருக்குக் கோபம் வந்தது. பிறகு விஷயத்தை முழுவதும் கமலம் அவருக்குச் சொன்னாள்.

"இது சிறு பெண் விளையாட்டு; சுந்தரியை எங்கே அவர் ஒப்புக்கொள்ளப் போகிறார்? என் துக்கம் இவ்வளவு சுலபமாய்த் தீருமா?" என்று வழக்கம்போல் அவர் துயரத்தில் ஆழ்ந்தார்.

"இல்லை, மாமா, நம் கையில் அவர் சிக்கியிருக்கிறார். கட்டாயம் ஒப்புக்கொள்ளச் செய்கிறேன்" என்றாள் கமலம்.

"நீ தைரியசாலிதான், கமலம். ஆனால் ஈசுவரன் கருணை செய்யவேண்டுமே!" என்று விம்மி விம்மி அழுதார்.

"அப்பா! நீங்கள் எனக்காக வருந்தவேண்டாம்" என்றாள் சுந்தரி.

* * * *

அடுத்த நாள் காலை வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது. கமலம் எண்ணியபடியே நரசிம்ம சாஸ்திரியார் வண்டியிலிருந்து இறங்கினார்.

நிதானமாகவும் கம்பீரமாகவும் வண்டியிலிருந்து இறங்கினார். கமலம் அவரை எதிர்கொண்டு, "வாருங்கள், சிரோமணி மாமா!" என்று வீட்டுக்குள் அழைத்துப் போனாள். இந்தக் காலத்துப் படித்த பெண்களின் தைரியத்தைப்பற்றிச் சொல்லவேண்டுமா?

சிா

நரசிம்ம சாஸ்திரியார், வீட்டு வாசலில் வண்டியிலிருந்து இறங்கியதும், கலியாணத்துக்குரிய பெண், தன்னை எதிர்கொண் டழைத்துப்போன கமலம்தான் என்று எண்ணி, உற்சாகமாக வீட்டுக்குள் நுழைந்தார். பிறகு விஷயம் விளங்கிச் சுந்தரியைப் பார்த்தவுடன் ஏமாற்றம் அடைந்தார். ஒரு கணம் வெறுப்பு தோன்றிற்று. முகத்திலும் அது வெளிப்பட்டிருக்கலாம். உடனே சமாளித்துக கொண்டார். படித்த படிப்பு வீணாய்ப் போகுமா?

சென்னையிலிருந்து கிளம்பியபோதே இது பகவான் ஆக்ஞை என்று ஒரு வைராக்கிய மனோநிலையில் புறப்பட்டவர். சுந்தரியைப் பார்த்தபின், " சரிதான், இது எனக்கு ஆண்டவன் இட்ட சோதனை. இதில் நான் வெற்றி பெறவேண்டும். சாஸ்திரத்திற்கும் படிப்புக்குமே அவமானம் கொண்டுவந்த என் பிழைக்கு இது தகுந்த பிராயச்சித்தம். ஏங்கித் தவிக்கும் இந்தப் பெண்ணுக்கு நான் ஒரு புகலிடமாவது பெரும் பாக்கியங்கூட ஆகுமல்லவா ? " என்றிவ்வாறு மனதை நிதானப்படுத்திக்கொண்டார்.

கமலமும் சும்மா இருக்கவில்லை. சாமர்த்தியமாகப் பேச்சை நடத்தி, சுந்தரியின் படிப்பையும், முக்கியமாக, சம்ஸ்கிருத நூல்களில் அவள் பெற்ற பயிற்சியையும் சோபிக்கச் செய்தாள். சாஸ்திரியார் மனதில் பூரண திருப்தி உதயமாயிற்று. சுந்தரியின் பேச்சைக் கேட்கும்போது அவள் வடிவம் கரைந்து போயிற்று. தன் குழந்தை லக்ஷ்மியை இவள் நன்றாகவே பார்த்துக் கொள்வாள் என்று மனதில் எண்ணினார். " படிந்த அழுக்கு தீர்ந்து நான் நல்ல கதியைப் பெறுவேன். உடல் வேறு, உயிர் வேறு என்பதை இன்னும் என் மனம் உணரவில்லையே ! அந்தப் பேதை மனத்திற்குப் புத்தி உண்டாக்கவேண்டும். கூனுடலுக்குள் இருக்கும் சுத்த ஆத்மாவின் அழகுக்கு என்ன குறைவு ? அது அழகும் ஆனந்தமும் கொண்ட தனிப் பொருள் தானே ! இது சாஸ்திர உறுதி அல்லவோ ! " என்றிவ்வாறு தான் கற்ற வேதாந்தத் தத்துவங்களையெல்லாம் நினைவுக்குத் தந்து கொண்டார்.

* * * *

பேச்சு தீர்ந்தது. விவாகம் ஏற்பாடாயிற்று. கோவிந்தய்யருடைய மகிழ்ச்சியானது கரை கடந்து போயிற்று.

" சுவாமி, தாங்கள் எனக்கு ஆதிமூல மூர்த்தி யாகவே வந்தீர்கள். நீங்கள் எனக்கு மாப்பிள்ளை யல்ல, மகா விஷ்ணுவே!" என்று கண்ணீர் வடிய அவர் கால்களைத் தொட்டு நமஸ்கரித்தார். இறந்து போன மனைவியை நினைத்துக்கொண்டு விம்மி விம்மி அழுதார்.

" மாமா, அழக்கூடாது. மங்கள முகூர்த்தம் பேசி நிச்சயம் செய்யும்போது அழலாமா?" என்றாள் கமலம்.

" குழந்தாய்! நீ தீர்க்காயுசா யிருக்கவேண்டும். உனக்கு எல்லா மங்களமும் உண்டாகுக!" என்று கோவிந்தய்யர், தட்டில் தேங்காய் வைத்துக் கமலத் துக்குக் கொடுத்தார். அவள் கண்களிலும் நீர் ததும்பிற்று.

* * * *

" கிதா சிரோமணியார் ரொம்ப நல்லவர், காமாட்சி. நாம் என்னவோ வேடிக்கை பண்ணி அவ மானப்படுத்தலாம் என்று எண்ணினோம். நிஜமாகவே கலியாணம் ஏற்பாடாகிவிட்டது" என்று ஆரம்பித்து, கதை முழுவதையும் கமலம் தன் தோழிக்குச் சொன் னாள்.

" திருப்பதியில் இந்த மாதம் பதினைந்தாம் தேதி கோயிலில் ஒருநாள் கல்யாணம். நானும் போகப் போகிறேன். நீ வராமல் முடியவே முடியாது என்கிறார் கோவிந்தய்யர்" என்றாள் கமலம்.

“ப்ரின்ஸ்பாலம்மா லீவ் கொடுக்கமாட்டாள்” என்றாள் காமாட்சி.

“எல்லாம் கொடுப்பாள். போயே தீரவேண்டும்” என்றாள் கமலம்.

“நீ போவதாயிருந்தால் நானும் வருவேன்” என்றாள் காமாட்சி.

இன்னும் இரண்டு மூன்று மாணவிகளும் இந்தச் சந்தோஷத்தில் கலந்துகொண்டார்கள். எல்லாரும் திருப்பதி போவதாக நிச்சயித்தார்கள். “கிழவர் கலியாணம் வெகு விமரிசைதான்” என்று மாணவிகள் எல்லோரும் வெகு குதூகலத்துடன் முகூர்த்தத் தினத்தை எதிர் பார்த்தவர்களாக இருந்தார்கள்.

எ

சென்னையில் சமாசாரம் பரவிவிட்டது. பக்த ஜனக் கூட்டங்களில் வெகு அமர்க்களம். கீதா சிரோமணி சாஸ்திரியாருக்கு விவாகமாமே, பெண்ணுக்கு என்ன வயது, எந்த ஊர் என்று பலர் கேட்பதும், சிலர் காஞ்சிபுரம் என்றும், சிலர் மதுரை என்றும், எட்டு வயதுப் பெண் என்றும், இல்லை பன்னிரண்டு வயது, நல்ல வளர்ந்த பெண் என்று வேறு சிலரும் ட்ராமிலும் பஸ்ஸிலும் எங்கும் பேசி வந்தார்கள்; சமூகச் சீர்திருத்தக்காரர்கள் மிக்க ஆத்திரங் கொண்டார்கள்.

‘ஆழ்வார்பேட்டை அகில இந்திய ஸ்திரீ சம உரிமைச் சங்க’த்தில் ஒரு கூட்டம் கூடிக் கடுமையான தீர்மானம் நிறைவேற்றினார்கள். ‘நாற்பத்தைந்து

வயதுக்கு மேற்பட்ட ஒருவர் விவாகம் செய்துகொள்வதைச் சட்டப்படி உடனே தடை செய்யவேண்டும்' என்று தீர்மானம் பிரரேபிக்கப்பட்டது. முடிவில் அதை நாற்பத்தொன்பது வயது என்று மாற்றினர்கள். ஒரு விதி விலக்கும் சேர்த்தார்கள். விவாகத்துக்கு நிச்சயித்த பெண் முப்பத்தைந்து வயதுக்கு மேற்பட்டிருந்தால் குற்றமில்லையென்று தீர்மானத்தை மாற்றினர்கள்.

அ

இரண்டு வருஷமாகிவிட்டது. காவேரிக் கரையில் ஒரு கிராமம். "அம்மா, நீ 'நன்ருயில்லே'ங்கிருளே எல்லாரும், என்னம்மா உனக்கு? நன்ருத்தான் இருக்கயே!" இம்மாதிரி கொஞ்சிப் பேசிக்கொண்டிருந்தது, நரசிம்ம சாஸ்திரியாரின் முதல் தாரத்தின் பெண் லக்ஷ்மி.

"என் கண்ணே! என் முதுகைப் பார். வில் போல் வளைந்திருக்கிறது. மற்றவர்களெல்லாரும் அப்படியில்லை பார். அதனல்தான் என்னைக் கண்டு எல்லாரும் ஏளனம் செய்கிருர்கள்" என்ருள் சுந்தரி.

"உனக்கு வலிக்கிறதா அம்மா முதுகு?"

"இல்லை குழந்தாய், வலியில்லை."

"கூனலாயிருந்தால் என்ன அம்மா? கன்றுக்குட்டி கூட உன்னைப்போல் தானே நடக்கிறது. அது நன்ருத்தானே இருக்கு?"

"என்ன சொல்லுகிருள் லக்ஷ்மி?" என்று சொல்லிக்கொண்டு நரசிம்ம சாஸ்திரியார் எங்கேயோ போயிருந்தவர் வீட்டுக்குள்ளே நுழைந்தார்.

" நான் கன்றுக்குட்டிபோல் அழகாக இருக்கிறே னும். நான் அழகாக இல்லை என்று ஊரார் சொல்லுவ தெல்லாம் தப்பு என்கிருள் லக்ஷ்மி. நீங்கள் என்ன அபிப்பிராயப்படுகிறீர்கள் ? " என்ருள் சுந்தரி.

" நானும் லக்ஷ்மிபோலத்தான் எண்ணுகிறேன் " என்ருர் சாஸ்திரியார்.

அப்பா வந்ததும் குழந்தைக்குப் பேச்சு வளர்ந் தது. தாயார் எதிரில் நின்றுகொண்டு, " இதோ பார், உன்னைப் பார்த்தால் நீதானே தெரிகிருய்? உன் உடம்பு தெரியவில்லையே ! " என்றது குழந்தை.

" நன்ருய்க் கண்ணைத் திறந்து பார்த்தால் என் உடம்பு தெரியும் " என்ருள் சுந்தரி.

" இல்லை அம்மா, இல்லை. உடம்பைப் பார்த்தால் உடம்புதான் தெரிகிறது, நீ தெரியவில்லை. உன்னைப் பார்த்தால், உன் உடம்பு தெரியவில்லை " என்றது குழந்தை.

" சுந்தரி, குழந்தை சொன்னது தெரிந்ததா ? " என்ருர் சாஸ்திரியார்.

" குழந்தை என்னவோ குழந்தைப் பேச்சுப் பேசு கிறது. அதற்குப் பொருள் ஏது ! " என்ருள் சுந்தரி.

குழந்தையைக் கட்டி அணைத்துக்கொண்டு தகப்ப ஞர் தாங்கமுடியாத சந்தோஷத்தில் மூழ்கி நின்ருர்.

" சுந்தரி, இன்று லக்ஷ்மி சொன்னதைக் கேட்ட பிறகுதான் எனக்கு உபநிஷத்தில் ஒரு மந்திரத்தின் பொருள் சரியாக விளங்கிற்று. குழந்தைகளைப்போல் தான் உபநிஷத்தும் பேசுகிறது " என்ருர்.

" எனக்கும் சொல்லுங்களேன் " என்ருள் சுந்தரி

" 'அக்ஷிணி புருஷோ த்ருசியத ஏஷ ஆத்மா' என்ற மந்திரம் இருக்கிறதே, 'கண்ணில் தெரிகிறுனே அந்தப் புருஷன்தான் ஆத்மா' - இதற்குப் பொருள், லக்ஷ்மி இப்போது சொன்னதுதான். உன்னே நான் அடைந்தபோது இந்த மந்திரம் ஒருவாறு எனக்கு அர்த்தமானதுபோல் இருந்தது. இன்று குழந்தை சொன்ன பேச்சுத்தான் நன்ருக அதைத் தெளிவு படுத்திவிட்டது. உள்ளத்தில் அன்புடன் ஒருவரை யொருவர் பார்க்கும்போது திருஷ்டியிலிருந்து உடல் முற்றிலும் எங்கேயோ மறைந்துபோகிறது. ஆத்மாவை ஆத்மா பார்க்கிறது. இதைத்தான் லக்ஷ்மி சொல்லுகிருள். மந்திரமும் இதைத்தான் சொல்லுகிறது."

"ஆத்மா வேறு, உடல் வேறு என்கிறீர்கள். அவ்வளவுதானே?" என்ருள் சுந்தரி.

"இல்லே சுந்தரி, அதுவும்தான். ஆனல் அதுமட்டு மல்ல. இதோ பார். உன்னே நான் பார்க்கிறேன். அப் படிப் பார்க்கும்போது உன் உடல் என் உணர்ச்சியில் இல்லே; மறைந்து போயிற்று. கண், மூக்கு, காது, முகம் எல்லாம் மறைந்துபோய் நீ காணப்படுகிருய். அதுவே கண்ணில் காணப்படும் உன் ஜீவன்" என்ருர்.

சுந்தரியும் உபநிஷத்துக்களேப் படித்தவள்தான்.

"இதற்கு வேறே அர்த்தம் சொல்லுகிருர்களே? 'கண்ணில் தெரியும் புருஷன்' என்ருல் ஞானியான வன் கண்களே மூடிக்கொண்டு ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்தால், தன் ஆத்மாவை மனக்கண்ணில் காண் பான் என்றல்லவோ பொருள் சொல்லுகிருர்கள்?" என்ருள்.

"அதுவும் பொருள்தான். ஆனால் லக்ஷ்மி சொன்னதே பிரத்தியட்ச முறையில் சிறந்த பொருள். ஞானியுமல்ல, யோகியுமல்ல நான். உன்னை அன்புடன் பார்க்கும்போது உன் உடலையா பார்க்கிறேன்? உன் ஆத்மாவே என் கண்ணுக்குப் பிரத்தியட்சமாகப் புலப்பட்டு உள்ளம் திருப்தியடைகிறது. உன் கண்களும் என் கண்களும் சேர்ந்து ஒருவரையொருவர் பார்த்து மகிழும்போது, உன் முகமல்ல, உன் உள்ளமே எனக்குத் தரிசனமாகிறது. மூக்கையோ, நெற்றியையோ, நெற்றியிலுள்ள பொட்டையோ, புருவத்தையோ பார்த்தால், மூக்கோ, நெற்றியோ, பொட்டோ, புருவமோதான் தெரிகிறது. நீ மறைந்து போகிறாய்."

* * * *

மொத்தத்தில் நரசிம்ம சாஸ்திரியும் கூனி சுந்தரியும் மிக்க அன்புடன் உயர்தர முறையில் வாழ்க்கை நடத்தி வந்தார்கள்.

அழகு என்பது அன்பே. உடலில் மெய்யாக நிற்பது குணமே. உடலின் ரூபமும் விரூபமும் விவாகமாகும் வரையில்தான். விவாகம் முடிந்து இருவர் உள்ளமும் அன்புடன் கூடியதும் முகமும் உடலும் எங்கேயோ மறைந்துவிடும். இந்த உண்மை ஆணுக்கும் ஒன்றே, பெண்ணுக்கும் ஒன்றே. 'அவள் மூக்கைப் பார்', 'அவள் பல்லைப் பார்', 'வாயைப் பார்' என்பதெல்லாம் மற்றவர்களுடைய பேச்சும் தகராறும். அன்பைக் கண்ட தம்பதிகளுக்கு மூக்கும் வாயும் தீர்ந்துபோன விஷயம்.

# சாந்தி

ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு மாமியார். அந்த மாமி யாருக்கு ஒரு மருமகள்.

* * * *

மருமகளுக்குப் பதினான்கு வயது. புக்ககத்திற்கு வந்து ஐந்து நாளாயிற்று. "லக்ஷ்மீ, நான் நாலு குடம் இழுத்துப் போட்டிருக்கிறேன். நீ இன்னும் நாலு குடம் இழுத்து அண்டாவை ரொப்பி விடு. நான் அடுப்பங்கரைக்குப் போகிறேன்" என்று மாமியார் மருமகளைக் கூப்பிட்டுச் சொன்னாள்.

மருமகள் குடத்தைக் கிணற்றில் விட்டுக் கைநீட் டிக் கயிற்றை எட்டிப் பிடித்து, குடத்தை முழுகச் செய்தாள். பிறகு இழுக்கும்போது இடது கையில் வலித்தது. இழுக்க முடியவில்லை. இதைச் சொல்லிக் கொள்ள அவமானம். இடது கையை அதிகமாக உப யோகிக்காமல் காலால் கயிற்றை அமுக்கிப் பிடித்து ஒரு கையைக்கொண்டே மெதுவாகச் சமாளித்து

நாலைந்து குடங்களும் இழுத்து அண்டாவை நிரப்பி வேலையை முடித்தாள்.

ஏழைக் குடும்பம். கர்நாடகப் பழக்க வழக்கம். மருமகள் 'பெரியவள்' ஆனதும் சாந்தி முகூர்த்தம் முடித்துவிட்டார்கள். தனக்கும் ஒரு மாட்டுப் பெண் வந்துவிட்டாள் என்று மாமியாருக்கு மிக்க திருப்தி. அதிகாரம் செலுத்த ஓர் ஆள் அகப்பட்டால் யாருக்குமே அதில் ஒரு தனி சந்தோஷம். அரசியல் சாம்ராஜ்ய மோகத்தைப் போலவே இயற்கையில் ஒரு சாம்ராஜ்ய வேகம் உண்டு. முக்கியமாக ஏழைக் குடும்பங்களில் ஸ்திரீகளுக்கு இந்த ஆசை அதிகம்.

தனக்கு மாமியார் இட்ட எல்லா வேலைகளையும் லக்ஷ்மி சுறுசுறுப்பாகவே சந்தோஷமாய்ச் செய்து வந்தாள். ஆனால் ஜலம் இழுக்கமட்டும் முடியவில்லை. இரண்டு நாள் கஷ்டப்பட்டுச் சமாளித்துக்கொண்டாள். மூன்றும் நாள் இரவில் புருஷனிடத்தில், "ஒன்று சொல்லுகிறேன். கோபித்துக்கொள்ளாமலிருப்பீர்களா?" என்று பயந்து பயந்து சொல்ல ஆரம்பித்தாள்.

"என்ன விஷயம்? சொல்லு" என்றான் நடேசன். அன்பாகத்தான் பேசினான்.

"கோபித்துக் கொள்வீர்கள்" என்றாள் மறுபடியும்.

"இல்லை, தைரியமாகச் சொல்லு" என்றான் நடேசன்.

"தண்ணீர் இழுக்க முடியவில்லை. கை வலிக்கிறது. சொன்னால் அம்மா ஏதாவது எண்ணிக்கொள்

வார்கள். பயமா யிருக்கிறது!" என்று சொல்லிப் புருஷன் முகத்தைத் தான் ஏதோ பெருந் தவறு செய்ததுபோல் பார்த்தாள்.

முதலில் நடேசனுக்குக் கோபம் வரும்போல்தான் இருந்தது. மாமியார் - மருமகள் தகராறு ஆரம்பமாய்விட்டது என்று எண்ணினான். பிறகு, மனைவி விவரமாகச் சொன்னபின் சங்கதி தெரிந்தது. வீண் சண்டை அல்ல, மனைவிக்கு இடது கை ஊனம் என்பது தெரிந்தது.

நடேசனுக்கு அன்றிரவு வெகு நேரம் தூக்கம் வரவில்லை. காலையில் ஒரு தீர்மானத்துடன் எழுந்தான். தினமும் படுக்கைவிட்டு எழுந்ததும் தேகாப்பியாசம் செய்வது வழக்கம். அதற்குப் பதில், தானே தண்ணீர் இழுத்து அண்டாவை நிரப்பிவிட்டால் தேகப் பயிற்சியுமாகும்; மனைவியின் சங்கடமும் நிவர்த்தியாகும். கையைப் பற்றி வைத்தியர்களைக் கேட்கலாம் என்று தீர்மானித்தான்.

* * *

"ஏண்டா, நடேசா, தண்ணீர் இழுக்கிறாய்? பெண்டாட்டி செய்த வேலையா? நான் அவளை நாலு குடம் இழுக்கச் சொன்னது பெரிய தப்பாய்ப் போச்சா? அதற்காக என்னைத் தண்டிக்கிறாயா?" என்று வெகு கோபமாகத் தாயார் பேசினாள்.

"இல்லை, அம்மா. அவள் சொன்னதற்காக நான் செய்ததல்ல. உடம்புக்கு நல்லது. நீ எல்லா வேலையும் செய். அவளும் செய்யட்டும். நான் தினமும் காலையில் என் உடம்பு ஆரோக்கியத்திற்காக இதைச் செய்கிறேன்" என்றான்.

தாயாரிடம் லக்ஷ்மிக்குக் கையில் கண்ட வலியைச் சொன்னால் அவளிடம் அதிருப்தி கொள்வாள் என்று நடேசன் உண்மையைச் சொல்லவில்லை.

தாயார் முணுமுணுத்துக்கொண்டே இருந்தாள். இது மருமகள் செய்த குறும்பு என்றே அவள் நினைத்தாள். லக்ஷ்மிபேரில் வெறுப்பு ஆரம்பமாயிற்று.

பார்வதியம்மாளுக்கு (இதுதான் நடேசன் தாயார் பெயர்) ஒரு மகள், சீதம்மாள். நடேசனைவிட மூத்தவள். புருஷன் இறந்தது முதல் பிறந்தகத்திலேயே இருந்துவந்தாள். இவளுடைய தினசரி காரியக் கிரமம், பாய்மேல் படுத்துக்கொண்டு, யார் என்ன தவறு செய்கிறார்கள் என்று பார்த்துக்கொண்டே இருப்பது.

"உடம்புக்கு நல்லது கில்லது என்பது வெறும் பேச்சு. எல்லாம் அவள் வேலை. இத்தனை நாள் உடம்புக்கு நல்லதாக இல்லாதது இப்போது என்ன திடீர் என்று வந்துவிட்டது!" என்றாள் சீதம்மாள்.

"புருஷப் பையன், ஜலம் இழுப்பதாவது! இது என்ன வெட்கக் கேடு?" என்றாள் தாயார்.

"அவள் பாயில் படுத்திருக்கட்டும். நான் தண்ணீர் தூக்கி அண்டாவை நிரப்பி விடுகிறேன்' என்றாள் மகள்.

இம்மாதிரி பேச்சு நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போயிற்று. நடேசனுடைய இல்வாழ்க்கைப் புது நந்தவனத்தில் அன்புக்கு இடமில்லாமல் முள் பரவிப் பாழ் படுத்திற்று. லக்ஷ்மியினுடைய உள்ளம் தவித்தது.

* * *

சிறு பெண் ஒருத்தி, பெரியோர்கள் செய்த சாஸ்திரத்தையும் பரம்பரையாக வந்த குல தருமத்தையும் அனுசரித்து, பெற்றோரை விட்டு, நீதான் கதி என்று தான் முன்பின் பழகாத ஒரு புருஷனை நம்பி, புத்தம் புதிய ஒரு குடும்பத்தில் புகுந்து இவ்வாறு சிக்கிக்கொண்டு தவிக்கும் உள்ளத்தை ஆண் வாசகர்கள் சரியாக உணர்வதற்குக் கொஞ்சம் கற்பனை சக்தி வேண்டும்.

புருஷனுக்குத் தெரியாமல் ஒருநாள் அவள் மெதுவாகப் படுக்கையைவிட்டு எழுந்திருந்து கிணற்றண்டை போய், முதல் நாள் செய்தமாதிரி இடது கைக்குத் துணையாகக் காலைக் கொண்டு எப்படியோ கஷ்டப்பட்டு ஸ்நானத்திற்கு வேண்டிய ஜலம் இழுத்து அண்டாவை நிரப்பிவிட்டு வந்து படுக்கையில் படுத்துக் கொண்டாள். பிறகு நடேசன் எழுந்து வழக்கம் போல் தண்ணீர் தூக்கப்போய்ப் பார்க்கும்போது அண்டா நிறைய ஜலம் இருந்ததைக்கண்டான். தாயார் தான் இவ்வாறு செய்திருக்கவேண்டும் என்று எண்ணிப் பேசாமல் தன் காரியங்களைக் கவனித்தான்.

மறுநாளும் இவ்வாறே நடந்தது. "சரி, இதற்கு என்ன செய்வது? நான் ஜலம் தூக்கிச் சிரமப்படுவது அம்மாவுக்குப் பிடிக்கவில்லை; இவ்வாறு செய்கிறாள்" என்று எண்ணி விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்காமலிருந்தான். அன்றிரவு லக்ஷ்மிக்குச் சுரம் கண்டது. இடது கை பலமாய் வீங்கிவிட்டது. அதன் பிறகு நடேசனுக்கு நடந்ததெல்லாம் தெரிந்தது.

ஒன்றும் செய்யத் தோன்ருமல் குழப்பத்தில் கொஞ்ச நேரம் கிடந்தான். பிறகு தூங்கிப் போனுன்.

* * * *

"இவளுக்குக் கையில் ஏதோ ஊனம். இவளை ஏன் நம் வீட்டுக்குக் கட்டிக்கொண்டோம்!" என்று மறுநாள் தாயார் இரக்கமின்றிப் பேச ஆரம்பித்தாள். நடேசனுக்குத் தாங்கவில்லை. தாயாருடனும் சண்டையிட்டான். வலியினுல் வருந்திக்கொண்டிருந்த மனைவியிடமும் சண்டையிட்டான். இவ்வாறு இரண்டு நாள் கழிந்தது. பிறகு லக்ஷ்மியின் தகப்பனுருக்கு, அவளை அழைத்துப் போகும்படி கடிதம் எழுதினுன். அவரும் வந்தார்.

"பிறந்தபோதே உங்கள் மகளுக்குக் கையில் ஏதோ தொந்தரவு இருந்ததாமே? இதை எங்களுக்கு ஏன் சொல்லவில்லை?" என்ருள் பார்வதியம்மாள்.

"அம்மா! பிறந்தபோது இல்லை. எப்போதாவது வலிவந்துவீங்கிக்கொள்வதுண்டு. சொல்லாதது எங்கள் தவறுதான். ஊருக்கு அழைத்துப் போய்ச் சொஸ்தப் படுத்திப் பிறகு கொண்டுவந்து விடுகிறேன்" என்று மிகவும் பொறுமையாகவே அவர் சமாதானம் சொல்லி, மகளைச் சுரத்துடன் ஊருக்குக் கூட்டிக்கொண்டு போனுர்.

* * * *

"நல்ல இடங்கள் எத்தனையோ இருக்க, ஆயிரம் ரூபாய்க்கு ஆசைப்பட்டு இவனுக்கு இந்த நொண்டியைக் கட்டிவிட்டோமே! நம்முடைய கடனைத் தீர்க்க வேறே வழி இல்லாவல் போச்சா? நம் துரதிர்ஷ்டம் இப்படியாச்சே!"

இவ்வாறு வீட்டில் தினமும் பார்வதியம்மாளும் மகள் சீதம்மாளும் பேசிப் பேசி வந்தார்கள். மனைவிக்குச் சுரமும் கைவீக்கமும் குறைந்ததாக நடேசனுக்குக் கடிதம் வந்தது. ஆனால் அவள் இன்னும் படுத்த படுக்கையாகவே கிடப்பதாகச் சமாசாரம் கிடைத்தது.

ஒரு மாதத்திற்குப் பிறகு மறுபடியும் கை வீங்கினதாகவும் பழையபடி சுரம் அடிப்பதாகவும் கடிதம் வந்தது.

"இது ஜன்மாந்தர வியாதி, நடேசா! இது சொஸ்தமாகிற வியாதி அல்ல" என்றாள் பார்வதியம்மாள்.

"அப்படியும் இருக்கலாம். நம்முடைய கர்மத்தின் பலனை நாம் அனுபவித்துத்தான் தீர வேண்டும்" என்றான் நடேசன்.

"வேறு கலியாணம் பண்ணிவிட வேண்டியதுதான். என்னால் இனிமேல் பொறுக்க முடியாது" என்றாள் தாயார்.

"கன்னாபின்னா என்று பேசாதே" என்று நடேசன் சொல்லிவிட்டுக் கச்சேரிக்குப் போய்விட்டான். அவன் தாலுக்கா கச்சேரியில் குமாஸ்தா.

* * * *

ஒரு வருஷம் கழிந்தது. பார்வதி யம்மாளுக்கு ஒரு தம்பி. அவருக்கு ஒரு மகள்; மீனாட்சி. பன்னிரண்டு வயது. அந்தப் பெண்ணுடன் அவர் ஒருநாள் நடேசன் வீட்டுக்கு வந்தார்.

"எப்பேர்ப்பட்ட பெண், பார்! இவள் அந்தக் காலத்தில் ரொம்பச் சிறிசா யிருந்தாள். இல்லாவிட்

டால் அப்போதே உனக்கு இவளைக் கலியாணம் பண்ணியிருப்போம். இவளுக்கு இப்போது எங்கெங்கேயோ வரன் ஏன் தேடிப் போக வேண்டும்? நம் வீட்டுக் குழந்தையாகவே இருக்கட்டும்" என்றாள் பார்வதியம்மாள்.

முதலில் இந்தப் பேச்சை நடேசன் வெறுத்தான். ஆனால் விடாமுயற்சி வீண் போகாது. மறு வருஷம் சித்திரை மாதத்திலேயே திருப்பதியில் சுவாமி சந்நிதானத்தில் நடேசனுக்கு இரண்டாம் விவாகம் முடிந்து விட்டது.

உ

அடுத்த ஆறுவது மாதத்திலேயே, மீனாட்சி புருஷன் வீட்டுக்கு வந்து விட்டாள். பார்வதியம்மாள் மீனாட்சியிடம் மிக்க அன்பாக நடந்து வந்தாள். மீனாட்சியும் நல்ல பெண். சுறுசுறுப்பு. சிறு பெண்ணாயிருந்தும் வீட்டு வேலை அவ்வளவும் முதலிலிருந்தே தானாகவே செய்ய ஆரம்பித்தாள். இவ்வாறு எல்லாம் சரியாக இருந்தாலும் நடேசன் உள்ளத்தில் சுகமில்லை. என்னவோ வேதனை பண்ணிக்கொண்டே இருந்தது.

"ஏன், என்னிடம் நீங்கள் பிரியமாக இல்லை?" என்றாள் மீனாட்சி.

"பிரியம் ஏன் இல்லை? நான் என்ன செய்துவிட்டேன் உன்னை? அடிக்கிறேனா, திட்டுகிறேனா?" என்றான் நடேசன்.

"அதெல்லாம் வீண் பேச்சு. உங்கள் மனம் கிருஷ்ணபுரத்தில்தான் இருக்கிறது" என்றாள் மீனாட்சி.

கிருஷ்ணுபுரம் என்பது லக்ஷ்மி நோய்வாய்ப்பட்டுக் கிடந்த ஊர். நடேசன் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

* * * *

நடேசனுக்கு மறு விவாகம் ஆன சில நாட்களுக்கெல்லாம் எப்படியோ லக்ஷ்மியின் உடம்பு குணப்பட்டுவிட்டது. கை வீக்கம் இறங்கிவிட்டது, முழுதும் சரியாகவே போய்விட்டது.

" பார்த்தாயா, அவள் வேஷத்தை ! இப்போ பிறந்தகத்தில் வீட்டுக்கு வேண்டிய ஜலம் எல்லாம் அவளே இழுத்துக் கொட்டுகிருளாமே ! நம் வீட்டில் நாலு குடம் இழுக்கத்தானே அவளுக்கு முடியாமல் போய் விட்டது ! " என்ருள் பார்வதியம்மாள்.

" அவள் இங்கே வரப் பார்க்கிருளாம், வேஷக்காரி ! நாம் இருக்கிற நிலையில் இந்த அறியாப் பையனுக்கு இரண்டு பெண்டாட்டி வேறே வேண்டுமா ! " என்ருள் பார்வதியம்மாள்.

" அது இருக்கட்டும், அம்மா. அவள் நடவடிக்கையைப் பற்றிக் கேட்டாயோ?" என்ருள் சிதம்மாள்.

" அந்த வெட்கக் கேட்டை என்னத்துக்கு எடுக்கிருய் !" என்ருள் தாயார்.

" இதெல்லாம் நடேசன் காதில் விழப்படாது. ஆனல் ஊரார் வாயை அடக்கமுடியுமா ?" என்ருள் சிதம்மாள்.

* * * *

' ஊரார் வாய் ' ஒன்றுமே பேசவில்லை. கிருஷ்ணுபுரத்தில் எல்லாருக்குமே லக்ஷ்மியிடம் பரிதாபம். " இந்த அநியாயத்தைப் பார்த்தாயா ? இரண்டு நாள்

கையில் வாயு கண்டதற்காகத் தள்ளிப் போட்டார் களே! இப்படியும் உண்டா உலகத்தில்!" என்றார்கள்.

"இரண்டாம் கலியாணம்கூட ஆகிவிட்டதாமே? அநீதி, அநீதி!" என்றார்கள் சிலர். "பாவம்! தங்க மான குழந்தை இப்படித் திக்கற்றுப் போச்சு" என் றார்கள்.

"கோர்ட்டுக்கு இழுத்துப் புத்தி கற்பிக்கவேண் டும்" என்றார்கள் வேறு சிலர்.

இப்படிச் சில நாள் கழிந்தது. முதலில் லக்ஷ்மி முகத்தை வெளியில் காட்ட வெட்கப்பட்டு வீட்டுக் குள்ளேயே இருந்து வந்தாள். எவ்வளவு நாள் அந்த மாதிரி இருக்கமுடியும்? ஆற்றங்கரைக்கும் கோயிலுக் கும் போக ஆரம்பித்தாள். ஆற்றங்கரையில் ஒரு அனுமார் கோயில். தினமும் லக்ஷ்மி ஆற்றில் முழுகி விட்டு அனுமாரின் முன் பழம் வைத்துக் கும்பிட்டுப் போவாள். "அப்பனே! சீதையைக் காப்பாற்றினாயே! என் கதியைக் கொஞ்சம் பாரேன்!" என்று வேண்டிக் கொள்ளுவாள்.

* * * *

இவ்வாறு இரண்டு வருஷம் கழிந்தது. "பூர்வ ஜன்மத்தில் என்ன பாவம் செய்தேனோ!" என்று உள் ளத்தைச் சமாதானப் படுத்திக்கொண்டு லக்ஷ்மி தெய்வ பக்தி குறையாமலிருந்தாள்.

மாமியாரும் நாத்தனாரும் பேசி வந்த கொடுமை களைச் சிலர் கிருஷ்ணபுரத்திலும் பரப்பினார்கள்.

"ஒன்றும் இல்லாமல் தள்ளி விடுவார்களா? ஏதோ பிசகு நடந்திருக்கிறது" என்று அந்த ஊரிலும் சிலர் பேச ஆரம்பித்தார்கள். பிறகு கற்பனைக் கதை

களையும் சிலர் கட்டிவிட்டார்கள். வீட்டிலும் அண்ணனுடைய மனைவி மெதுவாகப் பேச ஆரம்பித்தாள். "என்னவானபோதிலும் புருஷன் வீட்டை விட்டு எவ்வளவு நாள் வெட்கமில்லாமல் பிறந்தகத்தில் இருக்க முடியும்? இதைவிட நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகலாமே" என்று லக்ஷ்மியின் காதில் படும்படியாக முணுமுணுப்பாள். இவ்வாறு பேசுவதைத் தடுப்பார் யாருமில்லை. லக்ஷ்மியின் தாயார் இறந்துபோய்ப் பல வருஷங்களாயிற்று. தகப்பனுருக்கு இப்போது வியாதி கண்டு தேகம் மெலிந்து வந்தது. பிறகு செருப்புக் கடித்த புண் சீழ்பிடித்துக்கொண்டு படுத்த படுக்கையாக மூன்று மாதம் கிடந்தார். லக்ஷ்மி இந்த மூன்று மாதங்களும் தகப்பனுருக்குப் பணி செய்வதில் ஈடுபட்டுத் தன் துயரத்தை ஓரளவு மறந்திருந்தாள்.

ஒருநாள் தகப்பனுர் மகனைக் கூப்பிட்டு "அப்பனே, நான் பிழைக்கப் போவதில்லை. உனக்கு ஒன்று சொல்கிறேன்; எப்படியாவது மாப்பிள்ளையிடம் போய்க் கெஞ்சிக் கேட்டுக்கொண்டு லக்ஷ்மியை அந்த வீட்டில் சேர்த்துவிடு; தெய்வம் விட்ட வழியாகட்டும். எனக்குப் பின் அவள் இந்த வீட்டில் இருக்கமுடியாது" என்று சொல்லித் துயரத்தை அடக்கமுடியாமல் விம்மி விம்மி அழுதார். அந்த இரவே அவருக்கு நினைவு தப்பி, மூன்று நாள் அப்படியே கிடந்து பிறகு பிராணன் போய்விட்டது.

## ரு

லக்ஷ்மியின் தமையனும் தகப்பனுர் ஆணைப்படி பல முயற்சிகள் செய்தான். ஒன்றிலும் பயன்பட

வில்லை. "கெட்டுப்போன அவலக்ஷணங்கள் இந்த வீட்டு வாசலை மிதிக்கக்கூடாது" என்றாள் பார்வதியம்மாள். மகள் சீதம்மாளும் அப்படியே சொன்னாள். நடேசனுக்கு இதைப் புறக்கணிக்க மனமிருந்தும் தைரியமில்லை. லக்ஷ்மியின் தமையனிடம், 'முடியாது' என்று சொல்லி அனுப்பிவிட்டான்.

* * * *

ஆற்றங்கரை அனுமாரை வணங்கிவிட்டு வழக்கம்போல் அவ்விடம் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்தாள், லக்ஷ்மி.

"ஏனம்மா அழுகிறாய்?" என்றான் அங்கே நின்ற ஒரு மாட்டுக்காரப் பையன்.

இவனுக்கு லக்ஷ்மி தினமும் அனுமார் சந்நிதியில் பூஜைக்கு வைக்கும் பழத்தை வழக்கமாகக் கொடுப்பாள். அவன் வாங்கிச் சாப்பிடுவான். இருவருக்கும் இவ்வாறு பழக்கம் ஏற்பட்டிருந்தது.

அவன் கேட்டதற்குப் பதில் சொல்லாமல் கொஞ்ச நேரம் அழுதுகொண்டே இருந்தாள்.

"சும்மா அழாதே, அம்மா! சாமி இருக்க, ஏன் அழுகிறாய்?" என்றான் அந்தப் பையன்.

"தம்பி, சாமிக்கு என்மேல் இரக்கமில்லை. செத்துப் போகவேண்டும் என்று எனக்கு ஆசை; சாவு வரவில்லையே என்று அழுகிறேன்" என்றாள்.

"எங்க அக்கா இப்படித்தான் அழுது அழுது ஒருநாள் கிணற்றில் விழுந்து செத்துப் போனாள். அவள் புருஷன் அவளை அடிச்சு அடிச்சு அதைப் பொறுக்க முடியாமல் அவள் அப்படிச் செய்தாள்.

குடிகாரப் பயல் அக்காளை இப்படிச் செய்துவிட்டான்" என்றான் மாட்டுக்காரப் பையன்.

"அப்பனே, என்னை என் புருஷன் அடித்தால் நான் பொறுத்துக் கொள்வேன். எவ்வளவு வேண்டுமானாலும் அடிக்கட்டும்; அதைப் பொறுத்துக் கொள்ளலாம்."

"அடிக்காமல் போனால் ஏன் அழுகிறாய்?" என்றான் அந்தப் பையன்.

"நான் சொன்னால் உனக்குத் தெரியாது, தம்பி! உன் அக்கா செத்துப் போனாள். இப்போ அவள் சுகமாக இருக்கிறாள். நானும் அப்படியே செத்துப் போகலாம் என்று தீர்மானித்து விட்டேன். ஆனால் பயமாக இருக்கிறது. என் கூடவா, தம்பி. பெரிய மடுவரையில் வருவாயா?" என்றாள்.

"எங்கே? தண்ணீரிலே விழவா? நான் வரமாட்டேன்" என்றான் பையன்.

"வரமாட்டாயா? சரி, நானே போகிறேன்" என்று சொல்லி அனுமார் முன் மறுபடியும் விழுந்து கும்பிட்டு நீண்ட நேரம் பேச்சில்லாமல் கிடந்தாள். பிறகு எழுந்து வேகமாக நடந்து ஆற்றில் பெரிய மடுவண்டை போனாள்.

"வேண்டாம்! வேண்டாம்! உன் காலில் விழுகிறேன் தாயே! எல்லாம் சரியாகப் போகும். தண்ணீரில் செத்தால் பிசாசாய்ப் போவாய், வேண்டாம்!" என்று மாட்டுக்காரப் பையன் கூப்பாடு போட்டுக் கொண்டு பின்தொடர்ந்து ஓடினான்.

பெரிய மடு என்பது வேனிற்காலத்தில் ஆற்றில் ஆழமான ஓர் இடம். இப்போது பெரும் பிரவாகமாக ஆற்றில் தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. மத்தியான்ன வேளை. யாரும் மனித சஞ்சாரம் இல்லை. மாடு மேய்க்கும் பையன்கள் சிலர் மட்டிலும் அக்கரையில் தூரத்தில் மாடு மேய்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு விஷயம் எட்டவில்லை. லக்ஷ்மி தண்ணீரில் குதித்தவுடன் பையன் திகிலடைந்து திரும்பி ஓடி விட்டான்.

ச

பார்வதியம்மாள் :—ஆற்றில் விழுந்து செத்தாளாமே, நல்லதாப் போச்சு !

சீதம்மாள் :—நம்ம வீட்டுப் பெயர் இனி எல்லார் வாயிலும் இருக்காது. பிழைத்தோம்.

மீனாட்சி :—துர்மரணமாகச் செத்துப் போனால் பிசாசாகப் போகிறாளாமே !

பார்வதியம்மாள் :—ஆமாம் ! அப்படித்தான் கஷ்டப் படுவாள், படட்டும்.

பார்வதியம்மாளும் சீதம்மாளும் மருமகள் மீனாட்சியும் இவ்வாறு பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது மீனாட்சி கர்ப்பிணி. ஏழாவது மாதம்.

இரண்டு மாதத்திற்குப் பின் மீனாட்சிக்கு சுகப் பிரசவமாயிற்று : பெண் குழந்தை. நடேசன் வீட்டில் இப்போது மகிழ்ச்சி நிரம்பிற்று. நடேசனுடைய உள்ளம்கூட லக்ஷ்மியைப்பற்றி நிம்மதி அடைந்தது. மரணத்தை ஒரு பெரிய கேடாக எண்ணி வருகிறோம்.

ஆனால் அதுவே பல கஷ்டங்களுக்கும் துக்கங்களுக்கும் நிவாரணம். அது இல்லாவிடில் வாழ்க்கை ஒரு தீரா நரகமாய்ப் போகும். லக்ஷ்மி ஆற்றில் விழுந்து செத்துப் போய்விட்டாள் என்றதும், எவ்வளவு வியாகுலங்கள் பல பேருக்குத் தீர்ந்து போயிற்று!

* * *

பிரசவமாகிப் பத்தாவது நாள், மீனாட்சிக்கு இலேசாகக் சுரம் கண்டது. "ஒன்றுமில்லை, சரியாகப் போகும்" என்றாள் பார்க்க வந்த கிழவி ஒருத்தி.

மறுநாள் மீனாட்சி படுத்த படுக்கையாக ஏதோ கன்னாபின்னா என்று பேச ஆரம்பித்தாள். "சும்மா இரு!" என்று அதட்டினாள் மாமியார்.

மீனாட்சி ஒரு விழி விழித்தாள். பிறகு "ஆமாம், சும்மா இருப்பேன்! என்னை வீட்டை விட்டுத் துரத்தி விட்டாயோ இல்லையோ? விடுவேனா உன்னை?" என்றாள். மறுபடி, "நீ குழந்தை பெற்றுவிட்டாயா? யாருடைய குழந்தை இது? கிளம்பு! ஓடு! ஆற்றில் விழுந்து சா!" என்று பேயாகக் கத்தினாள் மீனாட்சி.

கண்கள் பயங்கரமாகச் சுழன்று உடல் விறுவிறு வென்று கட்டைபோல் ஆயிற்று. கொஞ்ச நேரம் அப்படியே கிடந்தாள். பிறகு படுக்கையை விட்டு எழுந்து ஓட ஆரம்பித்தாள்.

"ஐயோ, அவளுடைய பிசாசம்மா இது!" என்றாள் சீதம்மாள் நடுநடுங்கி.

"சுவாமி, அம்மனே, உனக்கு எது வேண்டுமானாலும் கொடுக்கிறேன். மாரியம்மா, எங்களைக் காப்பாற்று!" என்று கதறினாள் பார்வதியம்மாள்.

மாரியம்மன் கோயில் பூசாரிக்குச் சொல்லி யனுப்பி ஒரு கோழியைப் பலி கொடுக்க ரகசியமாய்ப் பார்வதியம்மாள் ஏற்பாடு செய்தாள்.

ஜோசியம் சீதாராமையர் வந்து மந்திரம் ஜெபித்து விபூதி கொடுத்தார். விபூதியைக் கையில் வாங்கிப் படுக்கைமேல் வைத்துக்கொண்டு மீனாட்சி கொஞ்சம் சாந்தமானாள். விபூதியின் சக்தியைக் கண்டு எல்லாரும் சந்தோஷப்பட்டார்கள்.

" பூசிக்கொள் " என்றான் நடேசன்.

" பூசிக் கொள்கிறேன் " என்று வெற்றிலை மேல் வைத்திருந்த விபூதியைக் கையில் எடுத்துக் கொண் டாள்.

திடீர் என்று விபூதியை ஊதி இறைத்துப் போட்டு " ஹா ! ஹா !" என்று கதறினாள்.

" விடுவேனா உன்னை ? அந்த மாமியாரைக் கூப் பிடு. அவளுக்குச் செய்கிறேன் வேலை ! விபூதியைக் கொடுத்து ஏமாற்றப் பார்த்தாளா ?" என்று உன் மத்தச் சிரிப்புச் சிரித்தாள்.

" ஐயோ பாவி, ஆற்றில் விழுந்து செத்தவள் தான் இது. கொண்டு வா, துடைப்பக் கட்டையை " என்றாள் பார்வதி.

சீதம்மாள் துடைப்பக் கட்டையைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

பார்வதியம்மாள் அதை வாங்கி மீனாட்சியை இரண்டு மூன்று அடி தலையில் அடித்தாள்.

"ஐயோ, ஐயோ, அடிக்கவேண்டாம். நான் போய்விடுகிறேன். வேண்டாம், வேண்டாம்" என்று கதறினாள் மீனாட்சி.

"போ! போ!" என்று மறுபடியும் அடிக்க ஆரம்பித்தாள் பார்வதியம்மாள்.

"போதும் போதும்" என்று தடுத்தான் நடேசன்.

"உனக்குத் தெரியாது, நடேசா! நீ தூரப் போ!" என்று கத்தினாள் பார்வதியம்மாள்.

* * *

இவ்வாறு ஐந்து நாள் பிசாசு வேட்டை நடந்தது. ஒன்றும் பயனில்லை. பைத்தியம் அதிகமாயிற்று.

"இது சூதிகா வாயு" என்றார்கள் சிலர்.

"இது ஒரு கறுப்பு" என்றார்கள் வேறு சிலர்.

"ஐயோ, இது அவள் தான்" என்றாள் சீதம்மாள்.

"கோழி கொடுத்தது போதாது. அம்மன் பெரிய பலி கேட்கிறது, வெள்ளாடு கேட்கிறது" என்றான் பூசாரி ரகசியமாகப் பார்வதியம்மாளிடம். அதற்கும் பார்வதியம்மாள் நடேசனுக்குத் தெரியாமல் ஏற்பாடு செய்தாள். ஆனால் ஒரு நன்மையும் ஏற்படவில்லை.

"இதுவும் என் தலை விதியா, ஈசனே!" என்று நடேசன் அலறி அலறித் திகைத்துக் கிடந்தான்.

* * * *

நாலு அமாவாசை தீர்ந்தால் சரியாய்ப்போகும் என்று விபூதி கொடுத்த ஜோசியம் சீதாராமய்யர் சொன்னபடி நாலு மாதம் கழித்து மீனாட்சிக்குச் சுகப்

பட்டுவிட்டது. எல்லாம் ஒரு பெரிய கனவுபோல் தீர்ந்தது. இப்போது வீட்டில் ஒரு புது அமைதியும் பக்தியும் ஏற்பட்டது. லக்ஷ்மியைப்பற்றி ஓரளவு எல்லாருக்கும், பார்வதியம்மாளுக்குங்கூட மரியாதை உண்டாயிற்று. அவளைப்பற்றிப் பேசுவதை நிறுத்தி விட்டார்கள். மீனாட்சி புருஷனிடம் மிக்க அன்பாகவும் புத்திசாலித்தனமாகவும் நடந்துகொண்டாள். தான் ஏதோ மெய்மறந்து தவறுகள் செய்துவிட்டதாக அவளுக்கு ஒரு வெட்கம். எப்படியோ தப்பினோம் என்று அதைப்பற்றி ஒன்றும் பேசாமல், எல்லாரும் சாமர்த்தியமாக நடந்துகொண்டார்கள்.

* * * *

ஒரு வருஷத்திற்குப் பின் மீனாட்சி மறுபடியும் கர்ப்பம் தரித்தாள். பார்வதி ரொம்ப ஜாக்கிரதையாகக் கோயில்களுக்குப் பகிரங்கமாகவும் ரகசியமாகவும் வேண்டிக்கொண்டு பூஜை பலி எல்லாம் நடத்தினாள். பிரசவ காலம் நெருங்கியதும் நடேசன் பக்கத்து ஊரான பாகலூரில் பாதிரியார் நடத்திவந்த ஆஸ்பத்திரியில் பிரசவம் பார்க்கும் மருத்துவச்சியைத் தருவிப்பதற்கு ஏற்பாடு செய்தான். உள்ளூர் மருத்துவச்சி போன தடவை உதவியதில் பிசகு ஆயிற்று. இந்தப் பிரசவத்திற்குத் தேர்ச்சிபெற்ற மருத்துவச்சி வருவது நலம் என்று எல்லாருமே ஆட்சேபனை சொல்லாமல் ஒப்புக்கொண்டார்கள்.

* * * *

மீனாட்சியின் இரண்டாவது பிரசவம் யாதொரு கஷ்டமுமின்றி முடிந்தது. ஆண் குழந்தை பிறந்தது.

பிரசவத்தின்போது பக்கத்தில் ஆஸ்பத்திரி மருத்து வச்சி இருந்தாள். ஒரு மாதம் வரையில் தினம் ஒரு தடவை வந்து பார்த்துப் போனாள். தாய்க்குப் புத்தி மாறுாட்டம் ஏதும் உண்டாகாமல் குழந்தைக்குப் பால் கொடுத்து வந்தாள். சென்ற தடவைபோல் ஏதாவது கோளாறு உண்டாகுமோ என்று நடேசன் மிகவும் பயந்திருந்தான். அப்படி எதுவும் உண் டாகாமல் எல்லாம் சரியாக நடந்ததில் அவனுக்கு மிக்க மகிழ்ச்சி. எங்கேயோ கடன் வாங்கி மருத்துவச் சிக்குப் பத்து ரூபாய் கொடுக்கப் போனான். "வேண் டாம்" என்று அவள் மறுத்து விட்டாள்.

"என்னால் இவ்வளவுதான் கொடுக்க முடியும் தாயே! கோபித்துக் கொள்ளவேண்டாம். எடுத்துக் கொள்ளவேண்டும்" என்று வற்புறுத்தினான்.

"வேண்டாம், இந்தப் பிரசவத்திற்கு நான் பணத் திற்காக வரவில்லை. அன்பு காரணமாகவே வந்தேன்" என்று சொல்லிவிட்டு, மீனாட்சியின் பெண் குழந்தை யைத் தூக்கி எடுத்து விளையாட்டுக் காட்டிக்கொண் டிருந்தாள்.

கொஞ்ச நேரம் கழித்து, "நான் போய் வரு கிறேன், மீனாட்சி" என்று விடை பெற்றுக்கொண்டு போய்விட்டாள்.

மருத்துவச்சி தன்னுடன் பேசியபோது நடேச னுக்கு முதல் மனைவி நினைவு வந்தது. அதைப்பற்றி ஞாபகப்படுத்திக்கொள்ளக் கூடாது என்று மனதை ஸ்திரப்படுத்திக்கொண்டான்.

ரு

"சாந்திதேவி! அந்த வீட்டில் நீ போயிருந்த போது உன்னை யாரும் கண்டு கொள்ளவில்லையா?" என்றார் பாகலூர் ஆஸ்பத்திரிப் பாதிரியார். சாந்தி தேவி என்பது லக்ஷ்மியின் புதுப் பெயர்.

"ஆஸ்பத்திரி வேஷம் காப்பாற்றிற்று. பெண்டு களுக்குக் கொஞ்சங்கூடத் தெரியவில்லை. பிரசவ ஸ்தி ரிக்கு என் அடையாளமே தெரியாதல்லவா? புருஷர் என்னை உற்றுப் பார்க்கவில்லை. மரியாதையாக விலகி நின்றார். கடைசி நாள் நான் பேசியபோது மட்டும் கொஞ்சம் ஏதோ சந்தேகப்பட்டது போலிருந்தது. ஆனால் என் முக்காட்டை இழுத்து முகத்தைப் பாதி மூடிக்கொண்டு சமாளித்துவிட்டேன்."

"சரி, உன் மனம் நிலையிலிருக்கிறதா?"

"இருக்கிறது, அப்பனே! நோயாளிகளுக்கு சிச் ருஷை செய்வதில் எனக்குச் சாந்தி ஏற்பட்டிருக்கிறது. நீங்கள் என்னை ஆற்றிலிருந்து எடுத்துப் போட்டுக் காப்பாற்றாம லிருந்தீர்களானால் நான் பிசாசாகத் தானே போயிருப்பேன், அந்த மாட்டுக்காரப் பையன் சொன்னபடி!"

பாதிரியார் சிரித்தார். "பிசாசு கிசாசு ஒன்றும் கிடையாது. அது மூடர்கள் பேச்சு. ஆனால் நீ சந் தோஷமாக இருக்கிறாயா?" என்றார்.

"சந்தோஷமில்லை. ஓரளவு சாந்தி அடைந்திருக் கிறேன், அவ்வளவு போதும். கடவுளும் நீங்களும் இருக்கிறீர்களல்லவா?" என்றாள்.

"புருஷனிடம் போயிருக்க உனக்குச் சம்மதமா? நான் எல்லாம் விவரமாகச் சொல்லி ஏற்பாடு செய்ய முடியும்" என்ருர்.

"வேண்டாம், அப்பனே! அந்த அறியாப் பெண் சுகமாக இருக்கிருள். அந்தச் சுகத்தை நான் ஏன் போய்க் கெடுக்க வேண்டும்? இந்த நோய்ச் சிசுருஷை வேலையில் எப்படியோ நான் காலந்தள்ளி வருகிறேன்" என்ருள்.

"புருஷனிடம் போயிருக்கப் பிரியம் இல்லாவிட்டால், ஏன் நீ ஞான ஸ்நானம் செய்து எங்களோடு ஒன்ருக இருக்கக்கூடாது?" என்ருர் பாதிரியார்.

"அனுமார் கோபித்துக் கொள்வார்!" என்று சொல்லி அவள் சிரித்தாள்.

* * * *

அடுத்த தீபாவளியன்று 'சாந்தி தேவி' ஒரு கட்டுப் பட்டாசும் ஒரு பெரிய பொட்டணம் மிட்டாயும் கொஞ்சம் பூவும் வாங்கி ஒரு பையில் போட்டுக் கொண்டு மீனுட்சியின் ஊருக்குப் போனுள். வீட்டு வாசலில் மீனுட்சியின் குழந்தை விளையாடிக்கொண்டிருந்தது.

"கமலா, இந்தா உனக்குப் பட்டாசு" என்ருள். குழந்தை ஓட்டமாக ஓடி வந்தாள். பிரசவம் பார்த்த மாமியின் அடையாளத்தைக் கண்டு கொண்டாள். பட்டாசும் மிட்டாயும் கையில் வாங்கிக்கொண்டு பூவைச் சூட்டத் தலையைக் காண்பித்தாள். லக்ஷ்மி

யும் புஷ்பத்தைச் சூட்டிக் குழந்தைக்கு ஒரு முத்தம் கொடுத்து வீட்டுக்குள் அனுப்பினுள்.

"அம்மா! அம்மா!" என்று கூப்பாடு போட்டுக் கொண்டு கமலம் தாயாரிடம் போய் விஷயத்தைச் சொன்னுள்.

"அந்த மருத்துவச்சி ரொம்ப நல்லவள் போலிருக்கிறது!" என்ருள் மீனுட்சி, மாமியாரிடம்.

பார்வதியம்மாளும் நடேசன் வீட்டுக்கு வந்ததும் ஆஸ்பத்திரி மருத்துவச்சி அன்று வந்து குழந்தைக்குப் பட்டாசும் மிட்டாயும் கொடுத்துப் போனுள் என்று சொல்லிச் சந்தோஷப்பட்டாள்!

# ஜகதீச சாஸ்திரிகள் கனவு

---

க

இரங்கூன் ஜகதீச சாஸ்திரிகள் தமது ஐம்பத்திரண்டாவது வயதில் தாம் பிறந்த ஊராகிய திருவிடைமருதூருக்குத் திரும்பி வந்தார். அவர் முதலில் பாரிஸ்டர் சுப்பய்யரின் சமையற்காரனாக இரங்கூனுக்குப் போனார். சில காலத்துக்கெல்லாம் சமையல் வேலையை விட்டு இரங்கூனில் குடியேறியிருந்த பிராமணர்களுக்குப் புரோகிதம் செய்து வைக்கத் தொடங்கினார். புரோகித குடும்பத்தில் பிறந்தவராதலால், அவருக்குக் கொஞ்சம் மந்திரங்கள் தெரிந்திருந்தன. தெரியாததற்கு, அச்சடித்த புத்தகங்களை வாங்கி வைத்துக் கொண்டு சமாளித்து வந்தார்.

பரிசாரகத் தொழிலிலும், வைதிகத்திலும் சம்பாதித்த பொருளை வட்டிக்கு விட்டு விருத்தி செய்து வந்தபடியால் நாளடைவில் பணக்காரரானார். அவரிடம் லக்ஷம் ரூபாய் வரையில் ரொக்கம் உண்டு என்று ஜனங்கள் சொல்லிக்கொண்டார்கள்.

இரங்கூனிலிருந்த காலத்தில் சாஸ்திரிகள் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று விரும்பியது உண்டு. ஆனால் அந்த விருப்பம் நிறைவேறவில்லை. இப்போது வயது தாண்டிவிட்டபடியால் அந்த எண்ணத்தை விட்டுவிட்டார். திருவிடைமருதூரில் கொஞ்சம் நிலம் வாங்கிக்கொண்டு, போகிற வழிக்காக யாராவது ஒரு பையனைச் சுவீகாரம் செய்துகொண்டு, தம் வாணுளைக் கழித்து விடுவது என்று தீர்மானித்திருந்தார். ஆனால், அவர் திரும்பி வந்த வருஷத்தில் நேர்ந்த மகாமகத்துக்காகக் கும்பகோணம் போயிருந்தபோது ஏற்பட்ட ஒரு சம்பவம், அவரது வாழ்க்கையில் பெரிய மாறுதல் ஏற்படுவதற்குக் காரணமாயிற்று.

ஜகதீச சாஸ்திரி தங்கியிருந்த வீட்டில், அவரைப் போலவே மகாமக ஸ்நானத்துக்கு வந்த நாகேசுவர ஐயரும், அவருடைய மூன்று புதல்விகளும் தங்கியிருந்தார்கள். விசாரித்ததில், நாகேசுவரய்யர் வைர வியாபாரி என்றும், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி ஒன்றின் ஏஜண்ட் என்றும் தெரியவந்தது. அவர் பிறந்த தேசம் வடஆற்காடு ஜில்லா. வெகுகாலம் தெலுங்கு தேசத்திலும், பிறகு கொஞ்சநாள் கல்கத்தாவிலும் வாசம் செய்தவர். அவருடைய குமாரத்திகளில் மூத்தவர்கள் இருவருக்கும் விவாகம் ஆகிவிட்டது. கடைசிப் பெண்ணுக்குக் கலியாணம் ஆகவில்லை. அவளுக்கு வயது பதினான்கு. பார்வைக்கு இலட்சணமாயிருப்பாள். பிடில் அற்புதமாய் வாசிக்கத் தெரியும். வயது ஐம்பத்திரண்டு ஆனபோதிலும், ஜகதீச சாஸ்திரி நல்ல திட சரீரமுடையவரா யிருந்தார். அவரைப் பார்த்த

வர்கள் முப்பத்தெட்டு, நாற்பது வயதுக்குமேல் மதிப்பிடமாட்டார்கள் என்று நாகேசுவரய்யர் அபிப்பிராயப்பட்டார். ஆகவே, கலியாணப் பேச்சு ஏற்பட்டது.

நாகேசுவரய்யர் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிக்குச் சேரவேண்டிய பணத்தைச் செலவழித்துவிட்டு அதை ஈடு செய்ய முடியாமல் தவித்துக்கொண்டிருந்ததாய்த் தெரியவந்தது. மேற்படி பாக்கி தீர்ப்பதற்காக ஜகதீச சாஸ்திரிகள் அவருக்கு ரூபா 6,000 கொடுத்து விடுவதென்றும், கலியாணத்தை ஆர்ப்பாட்டம் எதுவுமில்லாமல் திருப்பதியில் உடனே நடத்திவிடுவதென்றும் ஏற்பாடாயிற்று. அவ்வாறே பணம் கொடுக்கப்பட்டு, கலியாணமும் நடந்தேறியது. நாகேசுவரய்யர் அவசர காரியமாய்க் கல்கத்தாவுக்குப் போய்விட்டார். அதற்குப் பிறகு அவரிடமிருந்து எவ்விதத் தகவலும் இல்லாதது ஜகதீச சாஸ்திரிகளுக்குக் கொஞ்சம் வியப்பாயிருந்தது. ஆனால், அவர் அதைப் பொருட்படுத்தவில்லை. தமது இளம் மனைவியை அழைத்துக்கொண்டு இரங்கூன் சென்றார்.

உ

இரண்டு வருஷத்துக்குள் ஜகதீச சாஸ்திரிக்கு ஒரு புதல்வன் பிறந்தான். முதுவயதில் பிறந்த குழந்தையானபடியால் சாஸ்திரிகள் மகனை அருமையாய் வளர்க்கலானார்.

இரண்டு மூன்று வருஷத்துக்குப் பிறகு, ஊரில் அவர் மனைவியின் நடத்தையைப்பற்றிப் பேச்சு உண்டாயிற்று. இது சாஸ்திரிகளின் காதுவரைக்கும்

எட்டியது. எனினும், அவர் ஒன்றும் செய்வதற்கு வழியில்லாமல் இருந்தார். கடைசியாக ஒருநாள் சாஸ்திரியார் வீட்டுக்குத் திரும்பிவந்தபோது மனைவியைக் காணவில்லை. பிடிலையும், அணிந்திருந்த நகைகளையும், பெட்டியிலிருந்த பணத்தையும் எடுத்துக் கொண்டு, கிழவனுரைப் பரிதபிக்க விட்டுவிட்டுக் காணுமல் போய்விட்டாள் அவள்.

பையனுக்கு இப்போது வயது ஏழு. பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தான். அவனுடைய படிப்பு முதலிய விஷயங்களில் சாஸ்திரியார் மனதைச் செலுத்திஞர். முன்போல், சில முக்கியமான நண்பர்களின் வீடுகளில் புரோகிதமும் செய்துவந்தார். இவ்வாறு சிறிது சிறிதாக, சாஸ்திரி தமது துக்கத்தை மறந்து காலங்கழித்து வந்தார்.

இராமச்சந்திரன், இதுவே பையன் பெயர், நன்ருய்ப் படித்துப் பத்தொன்பதாம் வயதில் கல்கத்தா பி. ஏ. பரீட்சையில் தேறிஞன். அவனை அழைத்துக் கொண்டு சாஸ்திரிகள் 1930-ம் வருஷத்தில் மறுபடியும் தமது ஜன்மதேசம் வந்தார்.

ஜகதீச சாஸ்திரிக்கு மாமா பிள்ளை ஒருவர் மயிலாப்பூரில் பிரசித்தி பெற்ற வக்கீலா யிருந்து வந்தார். அட்வகேட் ஜெனரல் பதவி காலியாஞல், அவருக்குத்தான் கிடைக்கும் என்று சொல்லிக் கொண்டார்கள். அவர் பெயர் ஸி. வி. சீதாராமய்யர். கப்பலை விட்டிறங்கிய ஜகதீச சாஸ்திரிகள், இவருடைய வீட்டில் இரண்டு நாள் தங்கிஞர். சீதாராமய்யரின் மனைவி இராமச்சந்திரனைப் பார்த்தாளோ

இல்லையோ, தன்னுடைய பெண் பார்வதியை அவனுக்குத்தான் கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டாள். "இதைவிட நல்ல வரன் எங்கே கிடைக்கப் போகிறது? பையன் பி. ஏ. தேறியிருக்கிறான். ஐ. சி. எஸ். பரீட்சைக்குச் சீமைக்கு அனுப்பலாமே?" என்று சீதாராமய்யரிடம் மனைவி சொன்னபோது, அவருக்கும் அது பிடித்தமாயிருந்தது. சாஸ்திரிகளிடம் விஷயத்தைத் தெரிவித்தார். அவருக்கும் சம்மதமாயிருந்தது. ஆனால், ஒரே ஒரு இடையூறு குறுக்கே நின்றது. அதுதான், புதிதாக அப்போது நிறைவேறியிருந்த சாரதா சட்டம். பெண்ணுக்குப் பதினொரு வயதுதான் ஆகியிருந்தபடியால் சட்டத்தை மீறாமல் கலியாணம் நடத்த முடியாது. அட்வகேட் ஜெனரல் பதவியை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் ஒருவர் சட்டத்துக்கு விரோதம் செய்யமுடியுமா?

ஆனால், சீதாராமய்யரின் மனைவிக்கு இவ்வளவு நல்ல மாப்பிள்ளையைக் கைநழுவ விடுவதில் பிரியமில்லை. கலியாணம் இப்போது நடக்காவிட்டாலும் தஸ்தவேஜி மூலமாய் நிச்சயதார்த்தம் செய்துவிட வேண்டுமென்று வற்புறுத்தினாள். அவ்வாறே, சீதாராமய்யர் தம்முடைய செலவில் பையனை ஐ. சி. எஸ். பரீட்சைக்குச் சீமைக்கு அனுப்ப வேண்டியதென்றும, மூன்று வருஷங் கழித்துக் கலியாணம் செய்துவிட வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. பெண் கறுப்பாயிருந்தபடியால் பையனுக்குமட்டும் அவ்வளவு திருப்தியில்லை. ஆனால் தகப்பனார் வார்த்தையை முன்னிட்டும், சீமைக்குப்போக ஆசையாயிருந்தபடியாலும், அவன் ஆட்சேபிக்கவில்லை.

௩

இராமச்சந்திரன் சீமைக்குப் பிரயாணமான பிறகு, ஜகதீச சாஸ்திரி திரும்பவும் இரங்கூனுக்குச் சென்றார். ஆனால், இந்தத் தடவை அவர் மனம் அங்கு நிம்மதியாயில்லை. புதல்வன்பேரிலும், ஓடிப்போன மனைவியின்பேரிலும் அடிக்கடி ஞாபகம் சென்றது.

மனநிம்மதி யில்லாமையால் தேக திடமும் குறைந்துபோயிற்று. உடம்பில் ஏதோ வியாதி யென்று எண்ணி டாக்டரைக் கேட்டார். உடம்புக்கு ஒன்றுமில்லையென்றும், சொந்த நாட்டுக்குத் திரும்பிப் போய்விடுவது நல்லதென்றும் டாக்டர் சொன்னார். சாஸ்திரிகளுக்கும் இது உசிதமாய்த் தோன்றியபடி யால், கடைசிமுறையாக இரங்கூனைவிட்டு இந்தியா வுக்குப் பிரயாணமானார்.

கப்பலில், எதிர்பாராத ஒரு சம்பவம் நேர்ந்தது. இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்த ஒரு ஸ்திரீ, காணாமற்போன தமது மனைவியைப்போல் இருந்ததாக அவருக்குத் தோன்றியது. கொஞ்சம் வித்தியாசம் இருந்தது வாஸ்தவந்தான். ஆனால், அவள் போய் இப்போது பதினைந்து வருஷங்களுக்குமேல் ஆகி விட்டதல்லவா? சென்னைக்குச் சமீபமாக வருவதற் குள் அந்த ஸ்திரீ தமது மனைவியாய்த்தா னிருக்க வேண்டுமென்று சாஸ்திரிகள் முக்காலே மூன்று வீசம் பங்கு நிச்சயமாக எண்ணினார். கப்பல் துறைமுகத் துக்கு வந்துசேர்ந்தது. அந்த ஸ்திரீ தன் சாமான்களு டன் இறங்குவதற்குத் தயாராய் நின்றபோது ஜகதீச சாஸ்திரிகள் அவள் எதிரில்போய் நின்றார். ஒருவரை

யொருவர் ஒரு கணநேரம் உற்று நோக்கினார்கள். "அங்கப்ப நாயக்கன் தெருவு, 614-ம் நம்பர் வீட்டில் நான் தங்குவேன். என்னுடன் பேச வேண்டுமானால் அங்கே வாருங்கள்" என்று அந்த ஸ்திரீ சொன்னாள். "நீ தானா? நான் நினைத்தது சரிதான்" என்று சொல்லி சாஸ்திரி சிரித்தார்.

"ஆமாம்! நான்தான்" என்று அவளும் சிரித்தாள்.

௩

சாஸ்திரிகள், சம்மந்தி சீதாராமய்யர் வீட்டில் மிக்க உபசாரங்கள் செய்யப்பெற்றுச் சுகமாக இரண்டு நாள் இருந்தார். தமிழ்நாடெங்கும் பஞ்சமர்களுக்குக் கோயிலைத் திறக்கும் விஷயத்தைப்பற்றியே பேச்சாயிருந்தது. "சநாதன தர்மம் போய்விட்டது" என்று சீதாராமய்யர் வீட்டில் எல்லோரும் சொன்னார்கள். சாஸ்திரிகளுக்கும் அப்படித்தான் தோன்றிற்று.

"சாரதா சட்டம் செய்யும்போது நீங்கள் எல்லாம் ஏன் சும்மாயிருந்தீர்கள்? அதனுடைய பலன் தான் இது" என்று சீதாராமய்யர் மனைவி சொன்னாள்.

"உளறுதே! அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?" என்று சீதாராமய்யர் கேட்டார். "எல்லாம் ஒன்றுதான். சாஸ்திரத்துக்கு விரோதமாக ஒன்று நடந்தால் பிறகு எல்லாவற்றிற்கும் இடங்கொடுத்துப் போய்விடுகிறது" என்றாள் அம்மாள்.

"ரொம்ப வாஸ்தவம்" என்றார் ஜகதீச சாஸ்திரிகள். சீதாராமய்யரிடம் தொழில் பழகும் வக்கீல் ஒருவர் அங்கிருந்தார். "ஆமாம் நீங்கள் கப்பலேறி இரங்கூனுக்குப் போனீர்களல்லவா? அதிலிருந்துதான் எல்லாவற்றிற்கும் இடங்கொடுத்துவிட்டது" என்று அவர் மெதுவாகச் சொன்னார்.

"இது என்ன சம்பந்தமில்லாத பேச்சு? ஜீவனார்த்தமாக இரங்கூன் போவதும், கோயில்களில் பறையர்களை விடுவதும் ஒன்றுதானா?" என்று சீதாராமய்யர் ஆத்திரமாய்ப் பேசினார்.

"சாஸ்திரத்தில் நாலு வர்ணங்கள் தானே சொல்லியிருக்கிறது? ஐந்தாவது வர்ணம் கிடையாதே. இந்த ஜனங்களை நாலாவது வர்ணமாகப் பாவித்து நடத்தினால் என்ன மோசம் முழுகிவிடும்?" என்று சின்ன வக்கீல் கேட்டார்.

ஜகதீச சாஸ்திரிகள் "இங்கிலீஷ் மொழிபெயர்ப்புகளைப் படித்துவிட்டு சாஸ்திரங்களைக் கரைகண்டது போல் பேசுகிறீர்கள். ஆதி சிருஷ்டி நாலு வர்ணந்தான். அதற்குப் பிறகு வர்ணக் கலப்பு ஏற்பட்டு சங்கர சாதி உற்பத்தியாயிற்று. பிரதிலோமச் சேர்க்கைகளின் பலனாய் சாதிச் சண்டாளர்கள் உண்டானார்கள்."

சின்ன வக்கீல், "பிரம்மாவுடைய எண்ணம் சாயாமல் போச்சுபோலிருக்கிறது. பறையன், பள்ளன், சக்கிலியன் எல்லாரும் கெட்டுப்போன பிராமணஸ்திரீகளின் சந்ததிகள் என்றா சொல்லுகிறீர்கள்?"

சாஸ்திரிகள் "அப்படியெல்லாம் நோண்டிப் பார்த்தால் சரிப்படாது. தலைமுறை தலைமுறையாக அவர்களைச் சண்டாளர்கள் என்று வைத்து நடத்தி வந்திருக்கிறோம். இதற்கெல்லாம் ருசு கேட்கக்கூடாது. நாம் பிராமணர்கள் என்பதற்கு ருசு என்ன?"

இதற்குள் கோர்ட்டுக்குப் போக நேரம் ஆகிவிட்டது. கூட்டம் கலைந்ததும், ஜகதீச சாஸ்திரி அங்கப்ப நாயக்கன் தெரு, 614-ம் நம்பர் வீட்டுக்குச் சென்றார்.

௫

அன்று மாலை ஜகதீச சாஸ்திரி சென்ட்ரல் ஸ்டேஷனில் டிக்கட் வாங்குமிடத்தில் நின்று காசிக்கு டிக்கட் கேட்டார். காலையில் அவரைப் பார்த்ததற்கு இப்போது பத்து வயது அதிகமானவராகக் காணப்பட்டார்.

"காசிக்கு எந்த மார்க்கமாய்ப் போகிறீர்கள், தாதா?" என்று டிக்கட் குமாஸ்தா கேட்டான்.

"எந்த மார்க்கமாயிருந்தாலும் சரிதான், சுருக்கு வழியாய்க் கொடுங்கள். சீக்கிரம் கங்கையில் ஸ்நானம் செய்து பாவங்களைப் போக்கிக்கொள்கிறேன்" என்றார் சாஸ்திரிகள்.

ஜகதீச சாஸ்திரி அங்கப்ப நாயக்கன் தெரு, 614-ம நம்பர் வீட்டில் தமது மனைவியைக் கண்டு தெரிந்து கொண்ட விவரங்கள் அவருக்கு அவ்வளவு வைராக்கியத்தை உண்டுபண்ணிவிட்டன.

ஜகதீச சாஸ்திரியின் மாமனார் நாகேசுவர அய்யர் உண்மையில் ஐயருமல்ல; வைர வியாபாரியுமல்ல. அவரது உண்மைப் பெயர் பரியாரி நாகன். அஸிஸ்டெண்ட் அக்கவுண்டண்ட் ஜெனரல் தியாகராஜ அய்யர் அவனைக் கல்கத்தாவுக்குத் தம்முடன் அழைத்துச் சென்றார். அங்கே அவன் ஸலூன் வைத்து நடத்திக் கொண்டிருக்கையில் ஓர் அநாதைக் கைம்பெண்ணைச் சேர்த்துக்கொண்டு வாழ்ந்து வந்தான். பிறகு மோசத் தொழில்களில் புகுந்து கெட்டுப் போனான். இவர்களுக்குப் பிறந்த பெண்தான் ஜகதீச சாஸ்திரியின் மனைவி. நாகேசுவரய்யர் என்கிற பரியாரி நாகன், ஜகதீச சாஸ்திரியின் கலியாணத்திற்குப் பிற்பாடு, ஏதோ ஒரு மோசடி வழக்கில் ஏழு வருஷம் தண்டனையடைந்து இப்போது லாகூர் சிறைச்சாலையில் கைதியாயிருந்தான்.

ஜகதீச சாஸ்திரியின் மனைவி இரங்கூனில் அவரை விட்டுப் பிரிந்த பிறகு சில நாட்கள் இங்குமங்கும் அலைந்து, கடைசியாக, சினிமா கம்பெனி ஒன்றில் சேர்ந்து நிறையப் பணம் சம்பாதித்து வந்தாள். தனக்குப் பணத்திற்குக் குறைவில்லையென்றும், கூடியவரையில் சந்தோஷமாய்க் காலங் கழிப்பதாகவும், உதவி ஏதுவும் தேவையில்லையென்றும் தெரிவித்தாள்.

"நானும் என் தகப்பனும் சேர்ந்து உங்களை ஏமாற்றினோம். பகவான்தான் எங்களை மன்னிக்க வேண்டும்" என்றாள்.

ஜகதீச சாஸ்திரிகளுக்குத் தம் அழகிய மனைவியிடம் அன்பு அதிகரித்தது. குழந்தையைப்போல்

அழுதார். "இந்தப் பாழும் சாதிகளை யார் சிருஷ்டித்தது? சுவாமி ஒருநாளும் சிருஷ்டித்திருக்கமாட்டார். போனதெல்லாம் போகட்டும். நாம் மறுபடியும் இந்த ஊரைவிட்டு இரங்கூனுக்குப் போய்ச் சௌக்கியமாயிருக்கலாமே?" என்றார்.

"ஐயோ! வேண்டாம். நீங்கள் என்னைத் தொடுவதற்குக்கூட நான் தகுதியற்றவள்; நான் கட்டிக்கொண்டிருக்கிற பாவம் பதினாலு தலைமுறைக்கும் தீராது. காசிக்குப் போய் கங்கையில் ஸ்நானம்செய்து என்னுடன் வாழ்ந்த பாவத்தைத் தீர்த்துக்கொள்ளுங்கள்" என்றாள் சாஸ்திரியின் மனைவி. அவ்வீட்டைவிட்டு வெளியே வந்ததும் கிழவர் பெரிய பயங்கரத்தில் ஆழ்ந்தார். சீமையில் படித்துக்கொண்டிருந்த தமது பையனை நினைத்துக் கொண்டார். சில மாத காலத்தில் அவன் திரும்பி வருவான்; கலியாணம் நடக்க வேண்டும். அவன் இந்த துன்மார்க்க ஸ்திரியின் புதல்வன் என்றுமட்டும் தெரிந்துவிட்டால்? — அவன் என்ன சாதி? பையன் என்ன சாதி? சீதாராமையரும், அவர் மனைவியும் என்ன சொல்வார்கள்? — சாஸ்திரிகளின் தலை சுழன்றது. தள்ளாடிக்கொண்டே சென்று ஸ்டேஷனை அடைந்தார்.

௬

சாஸ்திரிகள் ரயில் வண்டியில் பிரயாணம் தொடங்கிய இரண்டாம் நாள் இரவு, பக்கத்திலிருந்த பிரயாணிகள் இரக்கங்கொண்டு கிழவருக்குப் படுக்க இடங் கொடுத்தார்கள். களைப்புற்றிருந்த சாஸ்திரி

கள் விரைவில் தூங்கிவிட்டார். தூக்கத்தில் ஒரு பயங்கரமான கனவு கண்டார்.

* * * *

இராமச்சந்திரன் சீமையிலிருந்து திரும்பிவந்தான். பார்த்தால் பிராமணப் பையனாக இல்லை. சாபம் பெற்ற திரிசங்குவைப்போல் பறைப்பையனாய் வந்து சேர்ந்தான்! ஐ. சி. எஸ். பதவி ஒன்றுமில்லை. கூலிக்காரப் பையனாயிருந்தான். ஆனால் - கனவின் மாயை - சாஸ்திரிகள் முன்னைவிட அதிகமாக அவனிடம் அன்பு கொண்டிருந்தார்.

சீதாராமய்யரும், அவருடைய மனைவியும், தங்களை வீட்டை விட்டுத் துரத்துவதாகக் கண்டார். தோட்டக்காரன், மோட்டார் டிரைவர், தோட்டி முதற்கொண்டு அவர்களை ஏளனமாகப் பேசி, வீட்டுக்கு வெளியே துரத்தியடித்தார்கள். தெருவில் கூட்டம் சேர்ந்துவிட்டது. சாஸ்திரிகள் பிள்ளையுடன் எப்படியோ தப்பியோடினார்.........

சாஸ்திரிகள் இப்போது தமது சொந்தக் கிராமத்தில் இருந்தார். அவர் ஒரு பறைப்பையனைத் தம் வீட்டில் ஒளித்து வைத்திருக்கிறார் என்று ஊராருக்குத் தெரிந்து போயிற்று. அவர்கள் கூட்டமாய் வந்து அவரையும் அவர் பையனையும் அக்கிரகாரத்தை விட்டு ஓட்டினார்கள்.........

சாஸ்திரிகள் மறுபடியும் தம் பிள்ளையுடன் சென்னைக்கு வந்தார். அங்கு ஒரு மோட்டார் பஸ்ஸில் ஏறினார்கள். கண்டக்டர் வந்து "இந்த பையன் என்ன சாதி?" என்று கேட்டான். கழுத்தில் ருத்திராட்ச

மாலையுடன் பஸ்ஸில் உட்கார்ந்திருந்த ஒரு கிழப் பிரா மணர், "ஐயோ, இவன் பிரதிலோம சந்ததி, சண் டாளன்!" என்று கூச்சலிட்டார். "அவனை இறக்கி விடு" என்று வண்டியிலிருந்த எல்லோரும் கத்தினார் கள். பஸ்காரன் பையனை இழுத்துக் கீழே இறக்கி னான். சாஸ்திரிகளும் உடனே குதித்து இறங்கினார். வெட்கம் பொறுக்க முடியாமல் பக்கத்திலிருந்த ஒரு சந்தில் போய் இருவரும் ஒளிந்து கொண்டார்கள்.......

மறுபடியும் கனவு திடீரென்று மாறியது. மயி லாப்பூரில் சீதாராமையரின் ஆபீஸ். "என் குழந் தையை உங்களிடம் குமாஸ்தா வேலைக்கு வைத்துக் கொள்ளக்கூடாதா?" என்று சாஸ்திரிகள் சீதா ராமையரைக் கெஞ்சிக் கேட்டார்......

"அதெப்படி முடியும்? என் சம்சாரம் சண்டை பிடிப்பாளே?" என்றார் சீதாராமையர். அச்சமயம் சீதாராமையர் மனைவி அங்கு வந்து சேர்ந்தாள். ஜகதீச சாஸ்திரி பயத்தால் நடுநடுங்கினார்.

"பறைப்பையன் எங்கள் ஆபீஸில் உட்கார்ந்து வேலை செய்வதா? ரொம்ப நன்றாயிருக்கிறது! எங்க ளுக்கு வேண்டாம். பணத்தைக் கீழே வையும்?" என்று சொல்லிச் சீதாராமையரின் மனைவி தஸ்தா வேஜை எடுத்து நீட்டினாள். அது, இராமச்சந்திரன் கலியாணத்தைப்பற்றிய தஸ்தாவேஜு. சீதாராமையர் அதுவரை 15,000 ரூபா இராமச்சந்திரனுக்காகச் செலவு செய்திருந்தார். அதைத் திருப்பிக் கொடுக்கும் படி சாஸ்திரிகளைக் கேட்டார்கள்.

காட்சி மறுபடியும் மாறியது. ஒரு மடாதிபதி காஷாயதாரியாய், கையில் திரிதண்டத்துடன் மான் தோல் ஆஸனத்தில் வீற்றிருந்தார். "சுவாமி! என் மகனை பிராமணனாக்க முடியாதா?" என்று சாஸ்திரிகள் கேட்டார். காஷாயதாரி உச்சஸ்வரத்தில் சொல்லுகிறார்: "முடியவே முடியாது. சாதிச் சண்டாளனுக்குப் பிராயச்சித்தம் இல்லை. அவனுடைய நீச உடம்பு எரிந்து சாம்பலான பிறகுதான் சண்டாளத்துவம் நீங்கும். இந்த ஜன்மத்தில் தன் குலதர்மத்தைச் சரிவரக் கடைப்பிடித்து வந்தானானால், அடுத்த ஜன்மத்தில் கொஞ்சம் உயர்ந்த குலம் சித்திக்கலாம். ஆனால் அனேக ஜன்மம் எடுத்த பிறகுதான் பிராமணனாக முடியும்."

ஜகதீச சாஸ்திரி கோபாக்கிராந்தராகிக் கூச்சலிட்டார். "அட பாவி! நீ சந்நியாசியா? நம்பிக்கைத் துரோகக் கேஸை மறந்தாயா? பொய் விண்ணப்பங்கள் போட்டாயே! குடிக்கூலிக்கு எடுத்த சாமானை விற்றாயே! ஜயிலுக்குப் போகவேண்டியவன் அபராதத்தோடு தப்பித்துக் கொண்டாயே! அதற்கெல்லாம் ஒன்றுமில்லையோ?"

மடாதிபதியின் கண்கள் கோபத்தால் சிவந்தன. "பிரஷ்டா! உன்னைச் சபித்தேன்! என் பூர்வாசிரமத்தைப்பற்றிப் பேசிவிட்டாய்!" என்று சொல்லிக் கொண்டு தண்டத்தைத் தூக்கி அடிக்க வந்தார். சாஸ்திரி ஓடி வாசற் கதவில் தலையை முட்டிக் கொண்டார்.

* * * *

தூங்கிக் கொண்டிருந்த கிழவர் ரயில் பலகையிலிருந்து புரண்டு கீழே விழுந்தார். அந்த அதிர்ச்சியில்

கண் விழித்தார். பக்கத்திலிருந்தவர்கள் அவரைப் பார்த்துச் சிரித்தார்கள்.

எ

மறுநாள் இரவும் சாஸ்திரிகளுக்குத் தூக்கத்தில் இதே மாதிரி மகனைப்பற்றிய கனவுகள் வந்தன. கண்ணை மூடினால் உடனே சொப்பனந்தான்.

* * * *

சாஸ்திரிகள் மறுபடியும் தம் புதல்வனுடன் அலைந்து கொண்டிருந்தார். பசி எடுத்து ஒரு காப்பி ஹோட்டலுக்குள் இருவரும் சென்றார்கள். பரிசாரகன் இலையில் இட்டிலி கொண்டுவந்து இரண்டு பேருக்கும் வைத்தான். சாப்பிட ஆரம்பிக்கும்போது அங்கே உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவர், "அந்தப் பையன் யார்?" என்று கேட்டார். சாஸ்திரிகள் திடுக்கிட்டுப் பதில் சொல்லாமல் இருந்தார். "அவன் சண்டாளன்" என்று ஒரு குரல் கேட்டது. உடனே எல்லோரும் சேர்ந்து "சண்டாளன்! சண்டாளன்! துரத்துங்கள் வெளியே!" என்று கத்தினார்கள். பரிசாரகன், பையன்முன் இருந்த இட்டிலியை எடுத்து எச்சில் தொட்டியில் எறிந்துவிட்டு, பையனைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினான். "என் மகன்! என் மகன்!" என்று கத்திக்கொண்டு சாஸ்திரிகள் அவன் பின்னோடு வெளியேறினார்.

கும்பகோணம் ராவ்பஹதூர் நரசிம்மாச்சாரியார் டில்லி சட்டசபை அங்கத்தினர். "நீங்கள் டில்லிக்குப்

போகும்போது என் பையனைக் குமாஸ்தாவாக அழைத்துக்கொண்டு போங்களேன். பையன் பி. ஏ. படித்திருக்கிறான். என்னுடைய பாவத்தினால் திடீரென்று பறைப்பையனாகி விட்டான்" என்றார்.

"முடியாது, சாஸ்திரிகளே! டில்லியில் நம்ம ஊர்க்காரர்கள் சாதி வித்தியாசம் அதிகமாய்ப் பார்ப்பதில்லை என்பது வாஸ்தவந்தான். ஆனாலும் பறைப் பையனை வீட்டுக்குள் எப்படி வைத்துக்கொள்ள முடியும்? சூத்திரப் பையனாயிருந்தாலும் பாதகமில்லை" என்றார் நரசிம்மாச்சாரியார். "அப்படியானால் அவனை சூத்திரப்பையனாய் செய்துவிடட்டுமா?" என்று சாஸ்திரிகள் ஆவலுடன் கேட்டார்.

"நான் எப்படியப்பா சூத்திரப்பையனாக முடியும்? நான்தான் சங்கர சாதியாச்சே? நீங்கள் தானே அப்படிச் சொன்னீர்கள்?" என்றான் பையன்.

"ஐயோ, வாஸ்தவந்தான். சாஸ்திரங்களை யாராவது கொளுத்திச் சாம்பலாக்கமாட்டார்களா?" என்று சாஸ்திரி கத்தினார்.........

"அப்பா! அப்பா! ரயில் போர்ட்டர் வேலைக்குப் போய்விடுகிறேன். அங்கே யாரும் என்னைத் தொந்தரவு செய்யமாட்டார்கள்" என்றான் இராமச்சந்திரன்.

"அதையும் பார்க்கலாம், குழந்தாய்!" என்றார் சாஸ்திரிகள். உடனே இராமச்சந்திரன் ரயில் போர்ட்டராக மாறினான். முதல் முதல் அவன் தூக்கிய பெட்டிக்கு நாலு அணா கிடைத்தது. அடுத்த

தடவை அவன் இன்னொருவருடைய பெட்டியையும் மூட்டையையும் தூக்கிக்கொண்டு கிளம்பியபோது, ஒரு பையன் ஓடிவந்து, " சாமி! சாமி! அவன் பறைப் பையன் " என்றான்.

பெட்டி மூட்டைகளின் சொந்தக்காரர் ஒரு பிராமண உத்தியோகஸ்தர். அவர், " அட பயலே! எப்படியடா என் மூட்டையைத் தொட்டாய்? " என்று கத்திக்கொண்டே குடை நுனியால் பையன் முதுகில் குத்தினார். அவன் பெட்டியையும் படுக்கையையும் கீழே போட்டுவிட்டு ஓடினான்.........

சாபத்துக்காளான பிள்ளையுடன் சாஸ்திரிகள் மீண்டும் அலையலானார். ஆகாயவெளியில் எங்கிருந்தோ " சண்டாளன்! சண்டாளன்! " என்னும் சப்தம் வந்துகொண்டிருந்தது. மரங்களின் இலைகள் ஆடும் ஓசை 'சண்டாளன்' 'சண்டாளன்' என்பது போலத் தோன்றிற்று. பட்சிகளும் 'சண்டாளன்' 'சண்டாளன்' என்று பாடின.

பையனுடன் அலைந்து அலைந்து, கிழவர் களைப்புற்றுப் போனார். கால் வலித்தது. தாகம் தொண்டையை வறட்டிற்று. சமீபத்தில், குளம் கிணறு ஒன்றையும் காணோம்.

" குழந்தாய்! ரொம்பத் தாகமாயிருக்கிறது. கொஞ்சம் தண்ணீர் வாங்கிக்கொண்டு வருகிறாயா? " என்று சாஸ்திரிகள் சொன்னார்.

" நான் கேட்டால் யார் கொடுப்பார்கள், அப்பா! " என்றான் ராமச்சந்திரன்.

"வாஸ்தவந்தான், குழந்தாய்! நாம் சாகவேண்டியதுதான்."

"சாகவாவது! அப்பா, எழுந்து நடங்கள். சீமைக்குப் போவோம். அங்கே சாதித் தீட்டுக் கிடையாது."

"சீமைக்கு எப்படிப் போவது? நாம் இன்னும் விருத்தாசலத்தில்தானே இருக்கிறோம்?" என்றார் சாஸ்திரிகள்.

"அதோ ஒரு படிக்கிணறு இருக்கிறது. இறங்கித் தண்ணீர் குடிக்கலாம்" என்று பையன் அழைத்துக்கொண்டு போனான். பயந்து நடுங்கிக்கொண்டே கிணற்றில் இறங்கினார்கள். அங்கு ஒருவரும் இல்லை. இருவரும் தாகம் தணியும்படி தண்ணீர் குடித்தார்கள். மறுபடியும் படியிலேறி வெளியே வந்துகொண்டிருக்கையில், கிழவி ஒருத்தி அங்கே வந்தாள். அவர்களைப் பார்த்ததும், "ஐயோ! இதென்ன? யாரோ பறைப்பையன் வந்து ஊர்க்கிணற்றைத் தீட்டாக்கிவிட்டானே, பாவி!" என்று கூச்சலிட்டாள்.

உடனே அங்கு ஒரு கூட்டம் சேர்ந்துவிட்டது. எல்லாரும் சேர்ந்து இராமச்சந்திரனை அடிக்க வந்தார்கள். சாஸ்திரிகள் பையனைக் கையைப்பிடித்து அழைத்துக்கொண்டு ஓடினார். தூரத்தில் ஒரு கோயில் தென்பட்டது. "சுவாமி! பகவானே! நீதான் காப்பாற்ற வேண்டும்" என்று சத்தமிட்டுக்கொண்டு கோயிலை நோக்கி ஓடினார். ஆனால் கோயில் அருகில வந்ததும், சந்தேகம் வந்துவிட்டது.

"பகவானே! எல்லாரும் என் பையனைச் சண்டாளன் என்றார்களே! உன்னுடைய கோயிலுக்குள்

ளாவது நாங்கள் வரலாமா ? உன்னைத் தவிர எங்களுக்குக் கதி வேறு யார்?" என்று கதறினர்.

"வரலாம், அனைவருக்கும் தாயும் தகப்பனும் நான்" என்று கோயிலுக்குள்ளிருந்து அசரீரிபோல் ஒரு சப்தம் வந்தது.

சாஸ்திரிகளும் பையனும் உள்ளே நுழைந்தார்கள். "அப்பா! கடைசியாக அடைக்கலத்திற்கு ஓர் இடம் கிடைத்தது" என்று பெருமூச்சுவிட்டார் சாஸ்திரிகள்.

அதற்குள்ளாக "ஐயோ! சண்டாளன் கோயிலுக்குள் வந்துவிட்டானே" என்று கூவிக்கொண்டு அர்ச்சகர் ஓடிவந்தார். இன்னும் பலரும் எங்கிருந்தோ மளமளவென்று வந்து அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"பறைப்பையனுக்கு என்ன தைரியம்? அடியுங்கள்! உதையுங்கள்!" என்ற கூக்குரல் எழுந்தது.

"ஐயோ! அவன் பறையன் அல்ல; என் பிள்ளை, என் பிள்ளை" என்று சாஸ்திரிகள் கத்தினர்.

அந்தச் சமயத்தில் சாஸ்திரியின் மனைவி அங்கு எவ்வாறோ வந்துசேர்ந்தாள். "அது பொய்! கிழவனை நம்பாதிர்கள்! அவன் என் பிள்ளை. நான் சங்கர சாதி. பையன் சண்டாளன்தான்" என்று அவள் கூவினள்.

"அடி பாவி! துரோகி! சண்டாளி!" என்று சாஸ்திரிகள் கூச்சலிட்டார். பிறகு கூட்டத்தை நோக்கி, "பகவான் அசரீரியாக வாக்குக் கொடுத்

தாரே, உள்ளே வரலாமென்று சொன்னாரே '' என்று கத்தினார்.

"போய், போய்; அசரீரியாவது ஒன்றாவது ? பறைப்பையனை உதையுங்கள், கொல்லுங்கள் '' என்று கத்திக்கொண்டு ஜனங்கள் ராமச்சந்திரன்மீது விழுந்து தாக்கினார்கள்.

* * * *

"ஐயோ '' என்று கத்திக்கொண்டு சாஸ்திரி தூக்கத்திலிருந்து எழுந்து உட்கார்ந்தார். அவரைத் தட்டி எழுப்பிய டிக்கட் கலெக்டர், "ஏன் தாத்தா அலறுகிறீர் ? டிக்கட்டைக் காட்டும் '' என்றான்.

நல்ல வேளை, எல்லாம் கனவுதான். என்றாலும், சாஸ்திரிகளின் உடம்பு வெகுநேரம் நடுங்கிக் கொண்டிருந்தது. ரயில் ஓடும் சத்தங்கூட அவர் காதில் 'சண்டாளன், சண்டாளன்' என்பதுபோல ஒலித்தது.

அ

## மங்களம்

சில நாட்களுக்குப் பின் இராமச்சந்திரன் சீமையிலிருந்து திரும்பி வந்து கர்நூலில் அஸிஸ்டெண்ட் கலெக்டரானான். ஜகதீச சாஸ்திரியின் மனைவி வெளியிட்ட விவரங்கள் இராமச்சந்திரனுக்காவது, சீதாராமய்யருக்காவது ஒன்றும் தெரியாது.

கிழவரைக் காணேமே என்று எல்லாரும் பரிதபித்துச் சிலநாள் பேசிக்கொண்டார்கள். திடீரென்று வைராக்கியம் பிறந்து காசி யாத்திரை போய் அங்கே சந்நியாசம் வாங்கிக்கொண்டார் என்று சிலர் சொன்னார்கள் ; கங்காநதியில் முழுகி இறந்துபோனார் என்று வேறு சிலர் சொன்னார்கள்.

கொஞ்சநாள் பார்த்தும் அவர் வராமற்போகவே, உடன்படிக்கையில் கண்டபடி, சிதாராமய்யரின் புதல்விக்கும், அஸிஸ்டெண்ட் கலெக்டர் ஜே. ஆர். சந்திராவுக்கும் விவாகம் சிறப்பாக நடந்தேறியது.

# பட்டாசுக் கட்டு

"அப்பா, பட்டாசு!" என்று வீரன் மகன் அழுதால், வீரன் எங்கிருந்து பட்டாசு வாங்கிவர முடியும்? அக்கிரகாரத்திலும் முதலியார் தெருவிலும் குழந்தைகள் தீபாவளிக்கு மூன்று நாள் முன்னிருந்தே பட்டாசு சுட ஆரம்பித்தார்கள். வீரன் மகன், தெருவில் நாலு மார் தூரம் எட்டி நின்று பார்த்துக்கொண்டிருந்தான். வெடிக்காத பட்டாசுகளைப் பொறுக்கப் போனான். "போ!" என்று அதட்டித் துரத்தினார்கள்.

மறுநாள் ஊரிலுள்ள பல வீடுகளிலும் 'பட்! பட்!' என்று பட்டாசு சத்தம் கிளம்பிற்று. வீரன் மகனுக்கு அடங்காத ஆசை. ஏன் எல்லார் வீட்டிலும் பட்டாசு, தன் அப்பன் வீட்டில் மட்டும் கிடையாது என்று அவன் மனதில் தோன்றிய கேள்விக்குப் பதில் அவனுக்குப் புலப்படவில்லை. அப்பனைக் கேட்கவும் அவனுக்குப் பயம்.

சேரிக்குத் திரும்பிப் போகவே மனம் வரவில்லை. பசியானாலும் வெகுநேரம்வரை நின்றுகொண்டு ஊர்க்

குழந்தைகள் பட்டாசு சுடுவதையே பார்த்துக்கொண்டிருந்தான்.

"எட்டி நில்!" என்றார் தெருவில் போகிற ஓர் ஐயர்.

வீரன் மகன் நடுங்கி ஓடிப்போய் ஒரு சந்தில் சுவரை ஒட்டிக்கொண்டு பதுங்கினான்.

ஏன் இப்படிப் பதுங்கவேண்டும் என்கிற கேள்வி வீரன் மகனுக்குத் தோன்றிற்றோ இல்லையோ, எப்படி நம்மால் சொல்ல முடியும்? குழந்தைகள் மனதில் தோன்றும் எண்ணங்கள் யாருக்குத் தெரியும்? பக்கத்தில் ஒரு நாய்க்குட்டி. அதுதான் தன் இனம் என்று அதை மெதுவாகத் தடவிக் கொடுத்துக்கொண்டு, ஐயர் போகும்வரையில் அங்கே இருந்துவிட்டுப் பிறகு வெளியே வந்தான்.

வெகுநேரம் கழித்துச் சேரியிலுள்ள தன் குடிசைக்குச் சென்றான்.

"அப்பா, எனக்குப் பட்டாசு வாங்கித் தரமாட்டாயா?" என்று வீரனைக் கேட்டான். பளீர் என்று ஓர் அடி கன்னத்தில் விழுந்தது. பையன் கிறுகிறு வென்று சுருண்டு கீழே விழுந்தான்.

"குடித்துப் போட்டுக் குழந்தையை ஏன் அடிக்கிறாய்?" என்று தாய் சீறிக்கொண்டு வந்தாள். "கள்ளுக்குப் போட்ட காசைக் குழந்தைக்கு ஒரு கட்டுப் பட்டாசுதான் வாங்கித் தரக்கூடாதா? கேட்டதே பாவமா? ஏன் அடித்துக் கொல்லுகிறாய்?" என்று குழந்தையிடம் ஓடிப்போய், தூக்கிப் பிடித்தாள்.

"அம்மா, பட்டாசு" என்றான் மறுபடியும்.

"சும்மா இரு. பறைப்பையனுக்குப் பட்டாசு என்னத்திற்கு?" என்று தாய் சொல்லிவிட்டு அடுப் பண்டை போய்விட்டாள்.

"மறுபடி கேட்டாயானால் கொன்று போட்டுவிடு வேன், தெரியுமா ?" என்று அதட்டினான் வீரன்.

உ

துரைசாமி ஐயங்கார் வீட்டில் பெரிய தடபுடல். மாப்பிள்ளை பட்டணத்திலிருந்து பெட்டியும் படுக்கை யுமாக வந்து இறங்கினார். இவர் துரைசாமி ஐயங்கா ருடைய மூன்றாவது பெண்ணின் கணவர். பேர் செல்ல மய்யங்கார், பி. ஏ. சென்ற சித்திரை மாதம் விவாகம் வெகு விமரிசையாய் நடந்தது; ரூபாய் நாலாயிரம் செலவு. இதுதான் முதல் தீபாவளி. மைத்துனன்மார் இரண்டு பையன்களுக்குமாக வாங்கிக்கொண்டு வந் திருந்த பட்டாசுக் கட்டு இருபதையும், மத்தாப்புத் தினுசுகளையும அந்தக் குழந்தைகளுக்கு எடுத்துக் கொடுத்துவிட்டு, மாமியாரைப் பார்க்கப் போனார். கிட்டுவும், சீனுவும் - மைத்துனர், முறையே ஏழுவயது, நான்கு வயது - பட்டாசுக்கட்டுகளைப் பங்கு போட்டுக் கொண்டார்கள். மஞ்சள் கட்டாகவே தனக்கு வேண் டும் என்று சீனு அழுதான். கிட்டு கொடுக்கமாட்டேன் என்று சண்டை போட்டான்.

"பாவம்! குழந்தைக்கு மஞ்சள் கட்டுக் கொடடா" என்றாள் கமலம். இவள்தான் கலியாணப் பெண்.

பிறகு குழந்தைகளுக்குள் சமாதானம் செய்து வைத்து, "இப்போது சுடக்கூடாது. நாளைக்குத் தான் தீபாவளி. எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்துவிட்டுச் சுடலாம்" என்று சொல்லி, கமலம் தாயாரண்டை போய்விட்டாள்.

"இப்பவே சுடுவேன்" என்றான் கிட்டு.

"நான் சுடமாட்டேன்" என்றான் சீனு.

"நான் ஒரு கட்டுச் சுட்டுவிட்டு மீதியை நாளைக்கு வைத்துக்கொள்வேன்" என்றான் கிட்டு.

இருவரும் பட்டாசுக் கட்டுகளைத் தூக்கிக் கொண்டு தாயாரிடம் போனார்கள்.

"அம்மா! பத்திரமாக வைத்திரு" என்று சீனு தன் பங்குக் கட்டுகளைத் தாயார் மடியில் போட்டான். மாப்பிள்ளை வந்திருக்கும் ஆனந்த சாகரத்தில் மூழ்கியிருந்த சிதம்மாள் குழந்தையைக் கட்டி முத்தமிட்டு, 'சீனு, நல்ல பையன்' என்று சொல்லி எழுந்து வெள்ளிச் சாமான் வைத்திருந்த அலமாரியில் பட்டாசுக் கட்டுகளை வைத்துவிட்டு மாப்பிள்ளையை விசாரிக்கப் போனாள்.

௩

தீபாவளி நாள் வந்தது. "ஐயோ! எல்லாம் தூக்கிக்கொண்டு போய்விட்டானே! ஆயிரம் ரூபாய் வெள்ளிச் சாமானும் போச்சே" என்று கதறினாள் சிதம்மாள்.

"கைப்பெட்டியைக் காணவில்லையே, பாங்கியில் வாங்கி வந்த நோட்டெல்லாம் அதிலே வைத்திருந்தேனே" என்று கத்தினார் துரைசாமி ஐயங்கார்.

"போலீசுக்குப் போய்ச் சொல்லவேண்டும்" என்றார் மாப்பிள்ளை செல்லமய்யங்கார்.

"எத்தனை வைத்திருந்தீர்" என்று கேட்டார் சீதம்மாள் தம்பி ஆராவமுதையங்கார்.

"அம்மா, பட்டாசு எல்லாம் எங்கே?" என்றான் சீனு.

"சும்மா இரு. பட்டாசு எல்லாம் திருடன் கொண்டுபோய் விட்டான்" என்று சீனு காதில் கிட்டு மெள்ளச் சொன்னான்.

"கிட்டு, திருடன் என்றால் யார்?" என்றான் சீனு.

"கரேலென்றிருப்பான். வீட்டுக்கு உள்ளே மெள்ள வந்து இராத்திரி நாம் தூங்கும்போது சாமான் எல்லாம் கொண்டுபோய் விடுவான்" என்றான் கிட்டு.

"நேற்று வந்தானா?" என்றான் சீனு. கிட்டு தலை அசைத்தான்.

"எல்லாப் பட்டாசும் கொண்டுபோய் விட்டானா?" என்று சொல்லிச் சீனு அழ ஆரம்பித்தான்.

"அழாதே! குழந்தாய்! அந்தத் திருடனைப் பிடித்து உதைக்கலாம்" என்று சீதம்மாள் குழந்தையைத் தடவிக் கொடுத்தாள்.

"குழந்தையின் பட்டாசைக்கூடக் கொண்டு போய் விட்டான் பார்த்தாயா, பாவித் திருடன்!" என்றாள் கமலம்.

கைப்பெட்டியை வீடெல்லாம் தேடிப் பார்த்து விட்டுக் கிடைக்காமல் துரைசாமி ஐயங்கார் தலை மேல் கையை வைத்துக்கொண்டு ஒரு மூலையில் உட்கார்ந்துவிட்டார்.

"போனது போனதுதான். இனிக் கிடைக்கப் போகிறதா? வாருங்கள் ஸ்நானம் செய்ய" என்று சீதம்மாள் மாப்பிள்ளையை அழைத்தாள்.

"இல்லை, சாவடியூருக்கு உடனே போய்ப் போலீஸ் ஸ்டேஷனில் தெரியப்படுத்தி விடவேண்டும். வாருங்கள், மாமா" என்று செல்லமய்யங்காரும் மாமா கிருஷ்ணய்யங்காரும் வெளியே போனார்கள்.

"ஒன்று கூடவிடாமல் எல்லா வெள்ளிச் சாமான்களையும் எடுத்துப் போய்விட்டானே, நான் எப்படி மாப்பிள்ளைக்கு விருந்து பண்ணப்போகிறேன்?" என்று மறுபடியும் அலறினாள் சீதம்மாள்.

ச

வீரன் மகன் பட்டாசு சுட்டுக்கொண்டிருந்தான். சேரியில் மற்றக் குழந்தைகள் எல்லாம் சுற்றிக்கொண்டு கை தட்டிக் கூப்பாடு போட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஏது பட்டாசு?

எப்படியோ தெரியவில்லை, தீபாவளி யன்று காலை பட்டாசுக் கட்டுகள் நான்கு கொண்டுவந்து வீரன் தன் மகனிடம் 'சுடு' என்று கொடுத்தான்.

பையன் ஒரே குதியாய்க் குதித்து, "அம்மா! நெருப்புக் கொடு" என்று ஓடினன்.

* * *

தீபாவளிக்கு அடுத்த சனிக்கிழமை யாரோ இருவர் வந்து வீரனைக் கூப்பிட்டுக்கொண்டு போனார்கள். போனவன் பிறகு திரும்பி வரவில்லை. பெண் சாதியும் மகனும் அலறிக்கொண்டு ஊருக்குள் வாத்தியாரண்டை ஓடினர்கள். "விண்ணப்பம் போட்டுப் பார்க்கிறீர்களா?" என்று அழுதாள்.

"அவர்கள் போலீஸார். உன் புருஷன்மேல் கன்னக் களவு கேசு" என்றார் வாத்தியார் மகாலிங்கம் பிள்ளை.

"ஐயோ கெட்டேனே!" என்று தலைமேல் அடித்துக்கொண்டாள்.

கள்ளுக்கடையில் கிடைத்த செய்தியின் மேல் போலீஸார் உடுப்பில்லாமல் சேரிக்கு வந்து குப்பனை இட்டுக்கொண்டு போய், பிறகு திரும்பிவந்து சேரியில் விசாரித்தார்கள். குப்பையில் கிடந்த பட்டாசுத் துண்டுகளைப் பார்த்து, "ஏது பறைச்சேரியில் பட்டாசு?" என்று விசாரித்தார்கள். வீரன் மகன் சுட்டான் என்று சில குழந்தைகள் சொல்லின. எரிந்து போன பட்டாசுத் துண்டுகளையெல்லாம் வாரிக் கொண்டு போனார்கள்.

பிறகு, வீரனைச் சாவடியூருக்குக் கொண்டுபோய் ஸ்டேஷனில் 'விசாரித்தார்கள்'. 'விசாரிப்பது' என்றால்தான் தெரியுமே!

'அடிக்காதீர்கள், சாமி, சொல்லி விடுகிறேன்' என்றான் வீரன்.

*   *   *

மறுநாள் தலையூரில் வேங்கடன், சென்னராயன் என்ற இரு குறவர்களையும் பிடித்துப் போனார்கள். அடுத்தநாள் பக்கத்து ஊரில் குப்பன் ஆசாரி வீட்டில் சோதனை போட்டார்கள். சில வெள்ளி சாமான்கள் கிடைத்தன. பிறகு குப்பன் ஆசாரியை விசாரித்தார்கள். இரண்டுநாள் கழித்துக் குப்பன் ஆசாரி மாமனார் வீட்டைச் சோதனைப் போட்டதில் நோட்டுகளாக ஐந்நூறு ரூபாயும் சில வெள்ளிச் சாமான்களும் அகப்பட்டன.

௫

வீரன் மகன் சாட்சிக் கூண்டில் நிற்கிறான்.

"உன் அப்பன் உனக்குப் பட்டாசு கொடுத்தானா?"

"ஆமாங்கோ — இல்லைங்கோ—சாமி" என்றான் சிறுவன்.

"தைரியமாய்ச் சொல்! பயப்படாதே" என்று இன்ஸ்பெக்டர் அதட்டிக் கேட்டார்.

"நான் பட்டாசு அப்பனைக் கேட்டேன். ஒரு அடி கன்னத்தில் போட்டான். நான் அடி தாங்காமல் கீழே விழுந்தேன். நான் பட்டாசு சுடவேயில்லை, சத்தியம்" என்றான் பையன்.

"அப்படித்தானுங்கோ, சாமி! எல்லாரும் பொய் சொல்கிறார்கள்" என்று கோர்ட்டில் ஒரு மூலையில் ஜனக் கூட்டத்திற்கு இடையில் நின்றுகொண்டு திடீர் என்று கத்தினாள் தாய். "பிடி அவளை!" என்றார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

உடனே இரண்டு போலீஸ்காரர்கள் பாய்ந்தார்கள். வீரன் மனைவியை இழுத்துக்கொண்டு மாஜிஸ்ட்ரேட் மேஜைக்குப் பக்கத்தில் கொண்டுபோய் நிறுத்தினார்கள்.

"ஜாக்கிரதை! சாட்சிக்குச் சொல்லித் தரவா இங்கே வந்தாய்?" என்று மாஜிஸ்ட்ரேட் அதட்டின அதட்டில் வீரன் மனைவி மூர்ச்சை போகும்மாதிரி நடுநடுங்கினாள்.

"கொண்டுபோ வெளியே" என்றார்கள் மாஜிஸ்ட்ரேட்டும், இன்ஸ்பெக்டரும் ஒரே மூச்சில்.

பிறகு விசாரணை நடந்தது. பட்டாசுகளைப்பற்றிப் பையன் இரண்டு மூன்று விதமாய் மாற்றி மாற்றிச் சொன்னான்.

"போதும்" என்றார் மாஜிஸ்ட்ரேட்டு.

பிறகு இன்ஸ்பெக்டர் வெகுநேரம் பேசினார்.

* * * *

ஒரு வாரம் கழித்து மாஜிஸ்ட்ரேட்டு வீரனையும் தலையூர்க் குறவர்களையும் விடுதலை செய்துவிட்டார். இரண்டு ஆசாரிகளுக்குமட்டும் தண்டனை. "வீரன் போலீஸாரிடம் சொன்னதை மட்டும் வைத்துக் கொண்டு குறவர்களைத் தண்டிக்க முடியாது" என்று தீர்ப்புச் சொல்லிவிட்டார்.

வீரன் பேரிலும் போதிய சாட்சியம் கிடையாது. சேரியில் எப்படிப் பட்டாசு வந்தது என்பது மிகவும் சந்தேகத்திற்கு இடமாயிருப்பினும், துரைசாமி ஐயங்கார் வீட்டில் களவுபோன பட்டாசுதான் சேரியில் குப்பையில் கிடந்த துண்டுகள் என்று நிச்சயமாக யாரும் சாட்சி சொல்லவில்லை என்கிற காரணத்தைக் கொண்டு வீரனையும் விடுதலை செய்துவிட்டார்.

௬

"ஏண்டா, வேங்கடா, அந்த மடப்பயல் தவிர, வேறு யாராவது பட்டாசுக் கட்டை எடுத்துப் போவானா? அதனாலல்லவோ இத்தனை எழவு ஏற்பட்டது" என்றான் சென்னராயன்.

"அப்பவே நான் சொன்னேன். வேறு ஏதாவது ஒரு சாமான் எடு என்று. நான் சொல்லச் சொல்ல அந்தப் பட்டாசுக் கட்டுகளை யெல்லாம் வாரி வாரி மூட்டை கட்டிக்கொண்டிருந்தான். அதற்குள் வீட்டிற்குள் யாரோ 'ஊம்' என்று கத்தினார்கள். நாம் போகவேண்டியதாச்சு" என்றான் வேங்கடன்.

"ஜாதிக்கு இயலாத தொழிலில் எவனும் போகக கூடாது. நாம் இவனைச் சேர்த்துக்கொண்டு போனது நமமுடைய தவறு" என்றான் சென்னராயன்.

முதல் நாள் பையன் பட்டாசுக்காக அழுததும், வீரன் குடி வெறியில் பையனை அடித்ததும் அந்தக் குறவர்களுக்குத் தெரியாது.

வீரன் சேரிக்குத் திரும்பி வந்தான். ஜெயிலில் வேளைக்கு வேளை ஆகாரம் கொடுத்து வந்தார்கள். வீட்டிலோ சோற்றுக்கு வழியில்லை. சட்டியைத் தூக்கிக் கொண்டு குடியானத் தெருவுக்குப் போனாள் வீரன் மனைவி. இருந்தாலும், புருஷன் வீட்டுக்குத் திரும்பி வந்தான் என்கிற மகிழ்ச்சியைப் பசிப் பிணியும் மறைக்க முடியாது.

மறுபடி வீரன் மகன் பட்டாசுக்காக அழமாட்டான். யாராவது பட்டாசு சுடுவதைக் கண்டால் தூரப் போய்விடுவான்.

# அன்னையும் பிதாவும்

---

க

சேலம் ஜில்லா கோக்கலையைச் சேர்ந்த அர்த்தநாரி என்ற ஹரிஜன வாலிபன், ஸ்ரீயுத மல்கானியுடன் டில்லிக்குப் போனான். ஸ்ரீயுத மல்கானி அகில இந்திய ஹரிஜன சேவா சங்கத்தின் காரியதரிசி. தென்னாட்டில் சுற்றுப் பிரயாணத்திற்காக வந்தவர், சேலத்தில் இப் பையனைக் கண்டு வெகு சந்தோஷப்பட்டுத் தம்கூடவே டில்லிக்குக் கூட்டிக்கொண்டு போய்விட்டார். அங்கே அவனைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து, ஆறு வருஷம் தம் வீட்டிலேயே வைத்துக்கொண்டு அவனை மிக்க அன்போடு பார்த்து வந்தார். பிறகு டில்லியிலேயே ஒரு பிரபல வியாபாரக் கம்பெனித் தலைவருக்குச் சொல்லி, அந்த ஆபீசில் மாதம் அறுபது ரூபாய் சம்பளத்தில் ஓர் உத்தியோகத்தில் அவனைச் சேர்த்தார். பார்வைக்கு ஆள் நன்றாக இருந்ததோடு, வேலையில் யோக்கியமாகவும் சுறுசுறுப்பாகவும் இருந்தபடியால்,

வெகுசீக்கிரமாகச் சம்பளம் உயர்ந்தது. இருபத்துநாலு வயது ஆகுமுன் மாதம் நூற்றைம்பது ரூபா சம்பளமாயிற்று. கொஞ்ச காலத்திற்குப் பிறகு, பெங்களூரில் அதே கம்பெனியைச் சேர்ந்த பெரிய நெசவு மில்லில் ஒரு வேலை காலியாயிற்று. மாதம் இருநூறு ரூபாய் சம்பளம். அதற்கு அர்த்தநாரியை அனுப்பினார்கள்.

பெங்களூர் போய் அந்த வேலையில் அமர்ந்து, அவன் இரண்டு வருஷம் சந்தோஷமாய்க் கழித்தான். அர்த்தநாரிக்கு அடுத்த மேல் உத்தியோகஸ்தரின் பெயர் கோவிந்தராவ். இவர் சீமைக்குப் போய் மான்செஸ்டரில் இரண்டு வருஷகாலமிருந்து பயிற்சிபெற்றவர். அவரும் அர்த்தநாரியும் ஏறக்குறைய சம வயது. அர்த்தநாரியின் குணமும் நடத்தையும் அவருக்கு மிகவும் பிடிக்கவே, இருவரும் நெருங்கிய நண்பர்களானார்கள். கோவிந்தராவுக்கு ஒரு தங்கை, பங்கஜம். தமையனும் தங்கையும் வெகு பிரியமாக இருந்தார்கள். பங்கஜம் பத்து வயதா யிருந்தபோதே, தாயார் தகப்பனார் இருவரும் இறந்துவிட்டார்கள். இப்போது பங்கஜத்திற்கு வயது இருபது. இன்னும் விவாகமாகவில்லை. அர்த்தநாரி வீட்டுக்குக் கோவிந்தராவ் போகும்போதும், அவர் வீட்டுக்கு அர்த்தநாரி வரும்போதும், பங்கஜமும் கூடவே இருந்து பேசிப் பழகுவாள். பழகப் பழகப் பங்கஜத்திற்கும் அர்த்தநாரிக்கும் சிநேகபாவம் முற்றினதைக் கோவிந்தராவ் கண்டு, மகிழ்ச்சியே அடைந்தார். "ஏன் இவர்கள் இருவரும் விவாகம் செய்துகொண்டு சுகமாய் இவ்விடமே இருக்கக் கூடாது?" என்று பலதடவை யோசிப்பார்.

உ

ஒருநாள் கோவிந்தராவ் தங்கையைப் பார்த்து, "பங்கஜம், நீ கலியாணம் செய்துகொள்வதுபற்றி யோசித்திருக்கிருயா ?" என்ருர்.

"அதற்கென்ன ? செய்துகொண்டாலாச்சு" என்ருள் பங்கஜம்.

"அப்படியாஞல், நம் அர்த்தநாரியைக் கலியாணம் செய்துகொள்ளலாமா ?"

இந்தக் கேள்வி பங்கஜத்திற்கு யாதோர் அருவருப்பும் தரவில்லை. ஆஞல், பதில் சொல்லாமல் வேறு ஏதோ பேச்சு எடுத்து விஷயத்தை மெள்ள நழுவ விட்டாள்.

சில வாரங்கள் கழித்து, ஒருநாள் ஏதோ சந்தர்ப்பம் நேரிட்டதையொட்டி, கோவிந்தராவ் இந்தக் கேள்வியை மறுபடி கேட்டதற்கு, "ஏன் கோபு, என் மேல் உனக்கு வெறுப்புத் தோன்றிவிட்டதா ? நான் உனக்குப் பாரமாய்ப் போனேன்போல் இருக்கிறது" என்று சிரித்துக்கொண்டு சொல்லிப் பிறகு அழ ஆரம்பித்தாள்.

"பைத்தியமே ! பாரமாவது, வெறுப்பாவது ! யாரையாவது கலியாணம் செய்துகொள்ளப் போகிருயா, இல்லையா ? உனக்கு அது இஷ்டமில்லாமற் போஞல் சொல் ; அதுவும் எனக்குச் சந்தோஷந்தான். நாம் என்றும் கூடவே பிரியாமல் இருக்கலாம்" என்று சொல்லி அவள் கண்களைத் துடைத்தார். மறுபடியும், "அம்மா செத்துப்போனுள். நான்தானே

இதையெல்லாம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும்?" என்றார்.

"ஏற்பட்டால் செய்துகொள்கிறேன். அதற்கென்ன இப்போது?" என்றாள் பங்கஜம்.

"நீங்கள் இருவரும் பிரியமாயிருக்கிறீர்களே! நாம்தான், சாதி குலம் கவனிப்பதை விட்டுவிட்டோமே! ஏன் அர்த்தநாரியை நீ விவாகம் செய்துகொள்ளக்கூடாது?" என்றார்.

"சாதியைப்பற்றி என்ன இருக்கிறது? ஆனால் அவர் மனம் எப்படியோ?" என்றாள் பங்கஜம்.

"அவர் மனம் என்ன? உன்னைப்போல் ஒருத்தி மனைவியாகக் கிடைக்க அவர் தவம் செய்யவேண்டும்" என்றார் கோவிந்தராவ். தன் தங்கைக்குச் சமானம் உலகத்தில் யாருமில்லை யென்பது கோவிந்தராவின் அபிப்பிராயம்.

பிறகு, அர்த்தநாரியிடம் விஷயம் சொன்னபோது, அவன் சந்தோஷத்திற்கு அளவே யில்லை. ஆனால், ஒரு நிமிஷம் கழித்துத் திடீர் என்று முகம் கறுத்தது. "இது எப்படி முடியும், கோவிந்த ராவ்?" என்றான்.

"ஏன், என்ன தடை?" என்று கேட்டார் கோவிந்தராவ்.

"நான் எந்த சாதி, நீங்கள் எந்த சாதி!" என்றான் அர்த்தநாரி.

"சாதியைப்பற்றி என்ன பேச்சு" என்று கோவிந்தராவ் சிரித்தார். "முதலியார் என்ன, பிராமணனென்ன? நாம் இதையெல்லாம் தள்ளிவிட்டு ரொம்ப நாளாயிற்று. நீங்கள் இருவரும் சம்மதித்துப்

பிரியப்பட்டு முடிந்தால் சாதியைப்பற்றி என்ன கவலை ?"

தான் கோயமுத்தூர் ஜில்லா 'சைவ' முதலியார் என்று அர்த்தநாரி அதற்குமுன் சொல்லி வந்திருந தான். ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் கவுரவத்திற்காக இந்தப் பொய் முதலில் சொல்லி, அதைப் பிறகு மாற்ற முடியாமல் உண்மையை மறைத்தே வந்தான். இப போது தன் குலத்தை உள்ளபடி சொல்ல வெட்கப பட்டான். தில்லியிலிருக்கும்போது அங்கே சிலருக்கு அவன் சரித்திரம் தெரியும். பெங்களூரில் யாருக்கும அவன் பூர்வோத்தரம் தெரியாது.

"பங்கஜத்தின் மனம் எப்படி ?" என்றான் அர்த்த நாரி.

"பங்கஜம் உம்மிடம் பிரியமாகத்தான் இருக் கிறாள். நான் கேட்டதற்குப் பதில் சொன்னதில், சம மதித்தவள் போல்தான் தோன்றுகிறது" என்றார்.

"நான் கேட்டுத் தெரிந்து கொள்வதுதானே முறை ?" என்றான் அர்த்தநாரி.

"ஆம்" என்றார் கோவிந்தராவ்.

இவ்வாறு விஷயம் ஒத்திவைக்கப்பட்டது. பங்க ஜத்தினிடம் உண்மையைச் சொல்லிவிடத் தீர்மா னித்து, எவ்வாறு முடிந்தாலும் சரியென்று எண்ணி னான். ஆனால், பிறகு அந்தத் தீர்மானத்தை நிறை வேற்றும் தைரியம் வரவில்லை.

"என்னத்திற்காக நான் இதைச் சொல்லவேண் டும்? சொன்னால் என்மேல் பங்கஜத்திற்கும் கோவிந்த ராவுக்கும் வெறுப்பு உண்டாகும். சாதி வித்தியாசம்

பார்ப்பதில்லை என்று அவர்கள் சொல்லுகிறார்கள். ஆயினும், நான் பறையன் என்பது தெரிந்தால் ஒரு காலும் சம்மதியார்கள். தவிர, பொய் சொன்னவனாவேன் '' என்றிவ்வாறு தனக்குள் ஆலோசிக்கலானான்.

மறுநாள் மறுபடியும் யோசித்து, உண்மையைச் சொல்லிவிடலாம் என்று கோவிந்தராவின் வீட்டுக்குப் போனான். ஆனால் போகும்போது, " நாம் இருவரும் பிரியப்பட்டிருக்கும்போது, இந்தச் சாதிப் பிரச்னைக்கு என்ன இடம் ? இந்த அநியாயத்தை நாம் ஏன் இடங் கொடுத்து வளர்க்க வேண்டும் ? இந்தச் சாதியை யார் நிர்மாணித்தார்கள் ? அது சுத்தப் பொய்யல்லவா ? அவளிடம் நான் ஏன் அதை ஒரு பொருளாகக் கருதிச் சொல்லவேண்டும் ? அதைச் சொல்லிக் காரியம் முழுதும் கெட்டுவிடவா செய்வது ? அவர்களும் சாதியைப் பற்றிக் கவலையில்லை என்று சொல்லிவிட்டார்கள். அதற்குமேல் நான் ஏன் அதைப்பற்றிப் பேச வேண்டும்?" என்று மனதைச் சமாதானப் படுத்திக்கொண்டு உண்மையை மறைக்கத் தீர்மானித்தான்.

" பங்கஜம், உண்மையில் உனக்கு இஷ்டமா ? நாமிருவரும் கூடி வாழலாமா ?" என்று மட்டும் கேட்டான்.

" உங்களுக்கு இஷ்டமா ?" என்றாள் பங்கஜம்.

௫

அர்த்தநாரியின் தகப்பனார் முனியப்பனும், தமையன் ரெங்கனும், தாயார் குப்பாயியும் கோக்கலைச் சேரியிலேயே இருந்தார்கள். அர்த்தநாரி தில்லியிலிருந்து

போதும், பிறகு பெங்களூருக்கு வந்த பின்னும், மாதம தவருமல், இருபது ரூபாய் அவர்களுக்கு அனுப்பி வந் தான். அவர்களும் அதைக்கொண்டு வெகு சந்தோஷ மாய்க் குடும்பம் நடத்தி வந்தார்கள். பையனுக்கு என்ன சம்பளம் என்பது அவர்களுக்குத் தெரியாது. மாதம் மாதம் இருபது ரூபாய் அவர்களுக்குப் பெரிய குபேர சம்பத்தாக இருந்தது. ஆனல் முனியப்பனுக்கு வெகுநாளாய்க் குடிப் பழக்கம். மாதம் மாதம் தவரு மல் பணம் வர, குடி இன்னும் அதிகமாய்விட்டது ; இது ரெங்கனுக்குப் பிடிக்கவில்லை. ஆயினும் அவனை தடுக்க முடியவில்லை. தடுத்தாலும் என்ன பயன் ? ரெங்கன் ஒரு பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயராக இருந்தான். அவனுக்கு இன்னும் கலியாணமாகவில்லை. ஓர் இடம் பார்த்துச் செய்துகொள் என்று தாயார் வற் புறுத்துவாள். இப்போது வேண்டாம், கொஞ்சநாள் போகட்டும், என்று தள்ளிப் போட்டுக்கொண்டே வந்தான்.

அர்த்தநாரி பெங்களூருக்கு வந்தபின், வருஷத் திற்கு இரண்டு தடவை கோக்கலைக்கு வந்து தன் தாய், தகப்பன், அண்ணன் இவர்களைப் பார்த்துப போவான். தகப்பனர் குடிப்பதைப் பார்த்து அர்த்தநாரியின் வெட்கத்திற்கும் வெறுப்புக்கும் அளவேயில்லை. வீட்டிலுள்ள அசுத்தமும் அவனைத் தாங்க முடியவில்லை. வந்து ஓரிரண்டு நாளிருந்து விட்டுச் சீக்கிரம் திரும்பிப் போய்விடுவான்.

"உன்கூட நாங்களும் வந்து விடுகிறோம்" என் பான் தகப்பன்.

"முடியலே முடியாது. உன்னைக் கண்டால் என்னை வேலையிலிருந்து நீக்கிவிடுவார்கள்" என்பான் அர்த்தநாரி

"ஆமாம், அப்பா, நாமெல்லாம் அங்கே போகப் படாது" என்பான் ரெங்கனும்.

செலவுக்கு அனுப்பி வந்தபடியால் இதைப்பற்றி அதிகம் விவாதம் செய்யமாட்டார்கள். இப்படியே நடந்து வந்தது.

தான் பங்கஜத்தை விவாகம் செய்துகொண்டு மறுபடியும் வடக்கே போய்விடலாம் என்பது அர்த்த நாரியின் யோசனை.

"இவ்வளவு அன்பாக இருந்தாலும் நான் பறை யன் என்று இவர்களுக்குத் தெரிந்துவிட்டால் காரியம் நிச்சயமாய்க் கெட்டுவிடும். ஒருவேளை அப்படியில்லை யென்றாலும், ஐயோ, என் தாயையும் தகப்பனையும் அவர்கள் வாழ்வையும் நடவடிக்கையையும் இவர்கள் நேராகக் கண்டால், அப்புறம் பங்கஜம் என்னைக் கண் ணெடுத்துக்கூடப் பார்க்கமாட்டாள்" என்று அர்த்த நாரி தனக்குள் சொல்லிச் சொல்லிப் பயந்து தன் பொய்யை உறுதிப்படுத்திக் கொள்வான். சீக்கிரமே விவாகத்தை முடித்துக்கொண்டு வடக்கே எங்கேயா வது ஓர் இடத்துக்குப் போய்விட வேண்டும் என்று தீர்மானித்தான். இது சம்பந்தமாய்த் தன் முதலாளி கம் பெனிக்குக் கடிதங்கள் எழுதி, தில்லிக்காவது, வடக்கே வேறு எங்கேயாவதுள்ள அவர்கள் மில்லுக்கு மாற்றி விடுமாறு வற்புறுத்தி கேட்டுக்கொண்டான்.

௬

ஒருநாள் திடீரென்று பங்கஜம், "அர்த்தநாரி, உங்கள் அம்மாவைப் பார்க்கவேண்டும் என்று எனக்கு ஆசை. ஒரு வாரம் ஓய்வு எடுத்துக்கொண்டு எல்லோரும் கோயமுத்தூர், உதகமண்டலம் முதலிய இடங்கள் சுற்றி வரலாம் என்று யோசனை. என்ன சொல்லுகிறீர்கள்?" என்றாள்.

"அடுத்த மாதம் முதல் வாரம் சௌகரியமாக விருக்கும். ஆபீசிலும் அதிக வேலையில்லை" என்றார் கோவிந்தராவும்.

அர்த்தநாரிக்கு நெஞ்சு அடித்துக்கொண்டது. "அதற்கென்ன, செய்யலாம். ஆனால், எங்கள் ஊரில் இப்போது அதிக காலரா உபத்திரவம் என்று கடிதம் வந்திருக்கிறது" என்றான். எப்படியாவது தப்பித்துக் கொள்ள எண்ணி இவ்வாறு பொய் சொன்னான்.

அதைக் கேட்டதும் பங்கஜம் திடுக்கிட்டு, "ஐயோ, காலராவா? உங்கள் ஜனங்களை வேறு ஊருக்குப் போகச் சொன்னீர்களா? இங்கே வரச் சொல்லுங்களேன்" என்றாள்.

"அதைத்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்றான் அர்த்தநாரி.

"பிறகு மூன்று நாள் கழிந்தது. அர்த்தநாரிக்கு ஒரு கடிதம் வந்தது, தமையன் ரெங்கனிடமிருந்து.

"தம்பி அர்த்தநாரிக்கு ஆசீர்வாதம்.

இவ்வூரில் விஷ பேதி மிக்க கொடூரமாயிருக்கிறது. பல பேர் இறந்து போய்விட்டார்கள். எங்

களுக்கு மிகவும் பயமாயிருக்கிறது. அப்பா பழைய மாதிரிதான். என்ன சொன்னாலும் கேட்கிறதில்லை. நீ இம்மாதம் அனுப்பிய பணமெல்லாம் செலவழிந்து போயிற்று. இப்போது முப்பது ரூபாய் அனுப்பினால் வீட்டைப் பூட்டிவிட்டுச் சேலம் போயிருக்கலாம் என்று யோசனை. இந்த பேதிப் பயம் நீங்கிய பின் திரும்பி வரலாம்.

இவை,

ரெங்கன்.''

இதைப் படித்ததும் அர்த்தநாரிக்கு ஆச்சரியமும் திகைப்பும் உண்டாயின. ''இதென்ன, நான் எண்ணிய எண்ணமோ, சொன்ன பொய்யோ, இவ்வாறு விபரீதமாக உண்மையாய்விட்டது. இது ஒரு தெய்வ பரீக்ஷையோ என்னவோ தெரியவில்லை'' என்று அர்த்தநாரி தனக்குள் சொல்லி ஒன்றும் தோன்றாமலிருந்தான். பணம் மறுநாள் அனுப்பலாம் என்று எண்ணினான்.

அன்றிரவு அர்த்தநாரிக்குத் தூக்கம் வரவில்லை. கெட்ட எண்ணங்கள், வெட்கப்படக்கூடிய எண்ணங்கள், அவன் மூளையைக் கலக்கிக் கொண்டிருந்தன. தன் தகப்பனாரைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் அவனுக்கு வெறுப்பு உண்டாகும். அவன் இந்த விஷபேதியில் இறந்து தீர்ந்து போனால் விசனமில்லை என்று அடிக்கடி அவன் மனதில் ஒரு எண்ணம் தோன்றும். சீ! இது பாவம் என்று உடனே மறு எண்ணம் தோன்றும். இப்படி இரவெல்லாம் படுக்கையில் புரண்டு தூக்கமில்லாமல், மறுநாள் காலை எழுந்து பச்சைத் தண்ணீரில் குளித்தான். தபால்காரன் கடிதங்கள்

கொண்டுவந்தான். எதிர்பார்த்தபடி ஊரிலிருந்து மற்றொரு கடிதம் வந்திருந்தது. கை நடுங்கக் கடிதத்தைப் படித்தான்.

" அப்பாவுக்குப் பேதி கண்டிருக்கிறது. எப்படி யாகுமோ, பயமாயிருக்கிறது. மாரியாயி காப்பாற்ற வேண்டும் ! கையில் ஒரு காசுமில்லை.

ரெங்கன்."

கடிதம் படித்து முடிந்ததும் அர்த்தநாரி முகம் கறுத்தது. வெகுநேரம் வரையில் நாற்காலியில் உட்கார்ந்தபடியே இருந்தான். அன்றும் பணம் அனுப்ப வில்லை.

௫

மறுநாளும் பணம் அனுப்பவில்லை. அன்று ஒரு கடிதமும் வரவில்லை.

" ஊரில் காலரா சமாசாரம் என்ன ? " என்றாள் பங்கஜம்.

" அப்படியேதானிருக்கிறதாம்" என்றான் அர்த்த நாரி.

" காப்பிக்குச் சர்க்கரை போதுமா ? " என்றார் கோவிந்தராவ்.

" போதும், வெகு நன்றாயிருக்கிறது" என்றான் அர்த்தநாரி. பிறகு தன் வீட்டுக்குத் திரும்பிப் போனதும் ஒரு கடிதம் வந்து காத்திருந்தது.

"அம்மாவுக்கும் பேதி கண்டிருக்கிறது. நீ பணம் அனுப்பவில்லை. திக்கில்லாமல் சாகிறோம். உடனே வரவும்.

ரெங்கன்."

அன்றும் அர்த்தநாரி பணம் அனுப்பவில்லை. இதற்குள் மனதைக் கல்லாகச் செய்துகொண்டு விட்டான்! "அவமானத்திற்குக் காரணமாயிருக்கும் என் இழி பிறப்பு இத்துடன் மறைந்துபோகும். இது, சுவாமியே எனக்குத் தரும் விடுதலைபோல் காண்கிறது. அவன் செயலுக்குமேல் என்ன தருமம், என்ன நியாயம்? அதை நான் ஏன் தடுக்கவேண்டும்; அப்பனும் அம்மாவும் இறந்துவிட்டால், நான் பங்கஜத்தைக் கலியாணம் செய்துகொள்ள யாதொரு தடையுமில்லை" என்று அர்த்தநாரி தனக்குள் சொல்லிக்கொண்டான்.

திடீரென்று, "சீ! இப்படி எண்ணுவது மகா பாவம்" என்று யாரோ திட்டியதுபோல் தோன்றிற்று. திரும்பிப் பார்க்க, பங்கஜம் வந்து பின்னால் நின்றாள்! விஷயம் தெரிந்துபோயிற்று என்று திடுக்கிட்டான். உடனே மறுபடி மதி தெளிந்தது; சமாளித்துக்கொண்டான். யாரும் பேசவில்லை. தன் மனதிலுண்டான பிரமை என்று தெரிந்துகொண்டான்.

"சத்தமில்லாமல் எப்படி வந்து விட்டாய் உள்ளே?" என்றான்.

பங்கஜம் நகைத்து, "கதவை மூன்றுதரம் தட்டித் தான் வந்தேன். ஏதோ யோசனையிலிருக்கிறீர்கள்? நான் வந்தது உங்களுக்குத் தெரியவில்லை" என்றாள்.

" நான் ஊருக்குப் போகவேண்டும். காலரா அதிகமாயிருக்கிறதாம். அப்பா, அம்மாவுக்கு ஏற்பாடு செய்து வரவேண்டும் " என்றான்.

" முந்தியே செய்திருக்கவேண்டும். இப்போ நீங்கள் அங்கே போனால் வெகு ஜாக்கிரதையா யிருக்க வேண்டும். அவ்விடம் தண்ணீர் குடிக்கக்கூடாது, சாப்பிடக்கூடாது " என்றாள்.

அன்றிரவே அர்த்தநாரி சேலம் போனான். ஆனால், சேலத்தில் ரயிலிறங்கி கோக்கலைக்கு உடனே போகாமல் இஷ்டமங்கும் காலம் கழித்துவிட்டு நாலு நாட்களுக்குப் பின் போனான். இவன் போவதற்குள் தாயார் இறந்துவிட்டாள். கூடவே, ரெங்கனுக்கும் பேதிகண்டு அவனும் இறந்துவிட்டான். குடிகாரத் தகப்பன் மட்டும் எப்படியோ தப்பிப் பிழைத்து மிஞ்சினான்.

" என்னைப் பெங்களூருக்கு அழைத்துப் போ. இனி இங்கே நான் என்ன செய்யமுடியும் ? " என்று தகப்பன் அர்த்தநாரியை மிகவும் கெஞ்சினான். அர்த்தநாரி கேட்கவில்லை. " முடியாது " என்று ஒரே பிடிவாதமாய்ச் சொல்லிவிட்டான். " உனக்கு வேண்டிய பணம் அனுப்புகிறேன். நீ இந்த ஊரிலேயே இரு. என்கூட வரவேண்டாம். அழைத்துப் போக முடியாது " என்று சொன்னான். தகப்பன் திக்கற்ற குழந்தைபோல் கெஞ்சினான்.

" இங்கே என்னால் இருக்க முடியாது " என்று சொல்லி விம்மி விம்மி அழுதான். எவ்வளவு அழுதாலும் அர்த்தநாரி கேட்கவில்லை. " பங்கஜத்தை

விட்டுவிட முடியுமா?" என்று அர்த்தநாரி தனக்குள் சொல்லிக்கொண்டு, தகப்பனர் அழுததைக் கவனிக்க வில்லை. மறுநாள் அர்த்தநாரி, தகப்பனர் கையில் ஒரு பத்து ரூபாய் நோட்டைக் கொடுத்துவிட்டுச் சேலம் போய்விட்டான்.

சா

"என்ன செய்துவிட்டேன்! பெற்ற தாயையும அண்ணனையும் கொன்றுவிட்டேன். ஏன் இப்படிச் செய்தேன்? என்னைப்போல் ஒரு பாவி உலகத்தில் உண்டா? தகப்பனை இப்படி நான் தள்ளிவிடலாமா? பங்கஜத்திற்கு என்ன சொல்வேன்?"

இவ்வாறு பல எண்ணங்களில் மூழ்கி ரயிலில் தூக்கமில்லாமல் அர்த்தநாரி பெங்களூர் போய்ச் சேர்ந்தான். மயக்கம் தட்டினமாதிரி ரயிலடியி லிருந்து வீட்டுக்குக் கால்நடையாகவே போனன். படுக்கை சாமான்களை ஒரு வண்டியில் வைத்து வீட்டுக்குக் கொண்டுபோகச்சொல்லி, தான் நடந்து சென்றான்.

வீட்டுக்குப் போய் கதவைத் தாள் போட்டுக் கொண்டு படுத்தான். கோவிந்தராவுக்காவது பங் கஜத்திற்காவது தான் திரும்பிவந்த சமாசாரம் சொல்லி யனுப்பவில்லை; ஆபீசுக்கும் போகவில்லை.

இராத்திரி மூட்டைகட்டி, ஒருவருக்கும் சொல் லாமல் மறுபடியும் ரயிலுக்குப் போய்ச் சேலத்திற்கு டிக்கட்டு வாங்கினன்.

சேலம் போனதும், கோக்கலையில் ஓர் ஆதித்திரா விடன் கிணற்றில் விழுந்து செத்துவிட்டதாகச் சிலர்

பேசிக்கொண்டிருந்த சங்கதி அவன் காதில் பட்டது. சோக்கலே சேர்ந்ததும், இவ்வாறு செத்துப்போனது தன் தகப்பன்தான் என்று தெரிந்தது. போலிஸ் ஸ்டேஷனில் பிரேதத்தை வைத்து எழுதிக்கொண்டிருப்பதாக யாரோ சொன்னார்கள். ஆனால், அவ்விடம்போகாமல், சேலம் திரும்பிப்போய், மறுபடியும் ரயில் ஏறினன்.

* * *

" பங்கஜம், நீ என்னைப்பற்றி இனி மறந்துவிட வேண்டும் " என்றான் அர்த்தநாரி.

" மறந்துவிடலாம் பின்னே, இப்போது ஊரில் என்ன சமாசாரம் சொல்லுங்கள் " என்றாள் பங்கஜம்.

" எல்லாரும் இறந்துவிட்டார்கள் ; நான் செய்ய வேண்டியதைச் செய்யாததால் இறந்துவிட்டார்கள். பங்கஜம் ! எனக்கு வாழ்வு பிடிக்கவில்லை. உத்தியோகத்தை விட்டுவிட்டு ஊருக்குப் போகிறேன். நீ என்னை மறந்துவிட வேண்டும் ! " என்றான்.

அவன் முகத்தை இரண்டு மூன்று தரம் பங்கஜம் பார்த்தாள். பார்த்துவிட்டுப் பயந்து போனாள். உடனே தன் அண்ணனுக்கு சங்கதி தெரியப்படுத்தச் சென்றாள்.

அர்த்தநாரிக்குச் சுரம் கண்டது. முதலில் டாக்டர் 'டைபாய்ட்' என்றார். பத்து நாள் கழித்து 'மூளை ஜுரம்' என்றார். பலநாள் படுத்த படுக்கையாக இருந்தான். கோவிந்தராவும் பங்கஜமும் இடைவிடாமல் படுக்கையண்டை இருந்து பார்த்துக்கொண்டு வந்து, நான்காவது வாரம் சுரம் இறங்கிற்று.

"இனிப் பயமில்லை" என்றார் டாக்டர்.

பிறகு சிலநாள் கழித்துச் சுரம் முற்றிலும் தணிந்து எழுந்து உட்கார்ந்தான்.

* * * *

"நான் பறையன், பாதகன். உண்மையில் தீண்டத் தகாதவன், பொய்யன். எனக்கு விவாகம் வேண்டாம். என்னை நீங்கள் மறந்துவிட வேண்டும்" என்ருன் அர்த்தநாரி.

பங்கஜம் நகைத்தாள். "நீர் எந்தச் சாதியாயிருந்தால் என்ன? நாம் இருவரும் ஏன் பிரிய வேண்டும்?" என்று சமாதானப்படுத்தினுள்.

அர்த்தநாரி ஒப்புக்கொள்ளவில்லை. "சாதியைப் பற்றி நீ தயங்கமாட்டாய். அது எனக்குத் தெரியும். ஆனுல் நான் கொலைபாதகன். என் தகப்பனையும் தாயாரையும் கொன்றவன்" என்று கதை முழுவதும் சொன்னுன்.

உடம்பு நன்ருய்க் குணமானதும், அர்த்தநாரி, தன் வேலைக்கு ராஜிநாமா எழுதிக் கொடுத்துவிட்டுக் கோக்கலைக்குப் போய்விட்டான். இப்போது கோக்கலைச் சேரியில், மாரியம்மன் கோயிலில், பள்ளிக்கூடம் வைத்திருக்கும் 'சாமியார்' அர்த்தநாரிதான்.

# திக்கற்ற பார்வதி

---

## 'ஆய்வராத' வண்டி

### க

கறுப்பனை வேறே வைத்தார்கள். 'வேறே வைப்பது' என்றால், குடியானவர்களுக்குள் ஒருவனுக்கு விவாகம் செய்து மனைவி வீட்டுக்கு வந்ததும் அவனும் அவன் மனைவியும் வசிக்க ஒரு தனிக் குடிசை போட்டுக் கொடுத்து விடுவார்கள். புருஷனும் மனைவியும் பாடுபட்டு உழைத்துச் சீவனம் செய்யவேண்டும். இது ஒரு நல்ல வழக்கமாகும். உடலுழைப்பு அறியாத 'உயர்' வகுப்பாரில் இன்னும் இருந்துவரும் ஏகக் குடும்ப ஏற்பாடு பலவித பிணக்குக்கு இடமாயிருத்தல் யாவரும் அறிந்ததே. கறுப்பனின் பெற்றோர் முதுமை வயது அடைந்திருந்தனர். அவர்கள் ஊருக்குள் பிதிரார்ஜித வீட்டில் வசித்தனர். கறுப்பனுடைய அண்ணன் காட்டுக் கொட்டாயில் இருந்தான். இப்போது கறுப்பன் தனிக் குடித்தனம்செய்ய ஆரம்பித்ததும், குடும்ப நிலத்தை மூன்று பகுதியாகப் பிரித்தனர்.

மூத்த மகன் தன் நிலத்தையும், தகப்பன் பங்கையும் பயிரிட்டான். கறுப்பனுக்கு ஒரு பங்கு கொடுக்கப்பட்டது. எல்லோரும் சேர்ந்து வேலை செய்து அவனுக்கு ஒரு மண் குடிசை கட்டிக் கொடுத்தார்கள். ஆடு மாடுகளும் பங்கு போடப்பட்டன. கறுப்பனுக்கு ஒரு ஜதைக் காளை மாடும், இரண்டு வெள்ளாடுகளும் கொடுத்தார்கள். கறுப்பன் வயது முப்பது. நல்ல திடகாத்திரன். அவன் பெண்சாதி பார்வதியோ அந்த கிராமத்திற்குள் எல்லாரையும்விட அழகும் சுறுசுறுப்பும் வாய்ந்தவள். ஏழைக் குடியானவப் பெண்ணானாலும், இராஜாத்தியொத்த முகக்களை. எறும்பும் தேனீயும் சோம்பினாலும் அவள் வேலை செய்வதில் ஓயமாட்டாள்; அவ்வளவு சுறுசுறுப்புள்ள பெண். பார்வதி, தன் புதிய குடிசையில் அங்கேயே பிறந்து வளர்ந்தவள்போல வேலை செய்துகொண்டு இடையிடையே கறுப்பனைப் பார்த்துப் புன்னகை புரியும் போது அவனும் தனக்கு உலகத்தில் ஒரு குறையுமில்லை யென்று எண்ணி உள்ளம் பூரித்தான்.

பார்வதி தாய் வீட்டிலிருந்து கொஞ்சம் பணம் கொண்டு வந்திருந்தாள். அதைக்கொண்டு கறவை எருமை ஒன்று வாங்கினார்கள். காலாகாலத்தில் மழை பெய்தது; கறுப்பனும் கஷ்டப்பட்டு வேலை செய்து, வயற்காட்டில் நன்றாய் விளைந்தது. பார்வதி முகஞ் சுளியாமல் பகல் முழுவதும் வேலை செய்வாள். அவளுக்குக் கறுப்பனும், காளை மாடுகளும், வயலும், எருமையுந்தான் எல்லாப் பாக்கியமும். கொஞ்சம் அவகாசம் நேர்ந்தால், தன் தாயார் வீட்டிலிருந்து கொண்டு வந்திருந்த இராட்டினத்தில் நூல்நூற்கத் தொடங்கு

வாள். இரவுநேரம் நிலாக் காய்ந்தால் அவளுடைய கொழுந்தியும் வருவாள். இருவரும் பேசிக்கொண்டே நெடுநேரம் நிலாவில் நூல் நூற்பார்கள்.

பார்வதியின் எருமை நல்ல கறவை ஜாதி. அதி காலையில் தயிர் கடைவாள். பின்னர், வீடு மெழுகி, சுத்தம் செய்துவிட்டு முதலிமார்கள் தெருவில் மோர் விற்றுவரப் போவாள். சந்தையன்று நெய்யும் காய்ச்சி விற்பாள். இப்படி வாரத்திற்கு ஏறக்குறைய மூன்று ரூபாய் அவளுக்குக் கிடைத்து வந்தது.

அடுத்த வருஷம் கறுப்பன் பெரிய யோசனை செய்யலானான். அவன் பார்வதியிடம் சொன்னான் : "நம்முடைய காடு சின்னது. நம்மிருவருக்கும் எப் போதும் வேலை இருப்பதில்லை. ஒரு வண்டி வாங்கி அதில் ஏன் இரண்டு பணம் சேர்க்கக்கூடாது ? அப் போது மாட்டுக்கு வருஷ முழுவதும் வேலை இருக்கும். பெரியப்பன் மகன் இராமனைப் பார். அவன் வண்டி ஓட்டி, வாரத்தில் இரண்டு மூன்று ரூபாய்க்குக் குறை யாமல் சம்பாதிக்கிறான். சில சமயம் நாலு ரூபாயும் கிடைக்கிறது. உன் நெய்ப் பணத்துடன் இன்னும் கொஞ்சம் போட்டு ஒரு வண்டி வாங்கிவிட்டால் என்ன ? வீரன் உடுமலைப் பேட்டைக்குக் குடி போய் விடுகிறானாம். கடன் தீர்ப்பதற்காக நிலத்தை விற் கிறான். அவனுடைய வண்டியை மலிவாக வாங்கிவிட லாம்."

பார்வதி :—வேண்டாம், வேண்டாம். வீரன் வண்டி நமக்கென்னத்திற்கு ? அந்த ஆய்வராத வண்டி நமக்கு வேண்டாம். அத்துடன் துரதிஷ்டம் கூடவரும்.

மேலும், கடன் வாங்கியாவது வண்டி வாங்காவிட்டால் என்ன? நமக்கு இப்போது என்ன குறை?"

கறுப்பன் :—"உளறுதே! குடிகாரன், கள்ளைக் குடித்து அவன் கெட்டுப் போனான். வண்டியில் துரதிஷ்டம் என்ன வந்தது? நல்ல கெட்டியான வண்டி, இருபது ரூபாய் கடன் வாங்கினால் கெட்டா போய்விடுவோம்? நம்மால் திருப்பிக் கொடுக்க முடியாமல் போகாது."

"என் பணத்தைப் போட்டுக் காதுப்பொன் பண்ணிக்கொள்ள வேண்டுமென்று இருந்தேன்" என்றாள் பார்வதி.

"இந்த அசட்டுத்தனந்தானே வேண்டாமென்கிறேன்; இராஜாத்தி போலிருக்கிறாய்; நகை போட்டுக் கொண்டால் உன் அழகைக் கெடுத்துக் கொள்வாய்."

கறுப்பன் கூறியது உண்மைதான். நகைகள் - அதிலும் காதைத் தோள் வரையில் இழுக்கும் இந்த நகைகள் - போடுவதால் அழகு குறையும் என்பதில் சந்தேகமில்லை.

"பெண் பிள்ளைகள் எதற்காவது ஆசைப்பட்டால் நீங்கள் இப்படித்தான் சொல்வீர்கள். சீலை கட்டும் பெண் பிள்ளைக்கு என்ன தெரியும்? மாமாவை யோசனை கேட்டுக்கொண்டு உங்களுக்கு எது நல்லதென்று தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள். என்னைக் கேட்பானேன்?" என்றாள் பார்வதி.

கறுப்பன் வண்டி வாங்கவேண்டுமென்று பிடிவாதமாயிருந்தபடியால் அவன் தகப்பன் அதற்கு மாறு

சொல்லவில்லை. ஒருவாரம் ஆவதற்குள் வண்டி வாங்கியாயிற்று. அதற்குக் கையிலிருந்த தொகை போகப் பாக்கி நாற்பது ரூபாய், மிட்டாதார்க் கவுண்டனிடமிருந்து கறுப்பன் கடன் வாங்கினான்.

உ

## கள்

கறுப்பன் அடிக்கடி வாடகைக்கு வண்டி ஓட்டிக் கொண்டு போவான். தூரத்து வாடகையின்மேல் போனால் ஒரு பகல் ஓர் இரவு முழுதும், சில சமயம் அதற்கு மேலுங்கூட, ஊருக்குத் திரும்பிவரமாட்டான். அவனுடைய பெரியப்பன் மகன் இராமனும் அவனுடன் வண்டி ஓட்டிக்கொண்டு போவது வழக்கம். ஒரு வருஷம் ஆவதற்குள் இவன் கறுப்பனைக் கள் குடிக்கப் பழக்கிவிட்டான். அப்புறம், வண்டி ஓட்டிக் கொண்டு போனால் கள்ளுக்கடை நுழையாமல் வருவதில்லையென்று ஏற்பட்டது. வண்டியில் வருமானம் நாளுக்குநாள் குறைந்தது. மாடுகளுக்கும் நல்ல தீனி கிடைக்கவில்லை. ஒருநாள் கறுப்பன் கொஞ்சம் போதையோடு வீட்டுக்கு வந்ததைக் கண்டு பார்வதி திடுக்கிட்டுப் போனாள். அதுவரையில் அவளுக்குச் சங்கதி தெரியாது.

" ஐயோ! குடியைக் கெடுத்து விட்டாயே? " என்று அலறினாள்.

" வாயை மூடு! உன் பணத்தை எவன் திருடிவிட்டான்? " என்றான் கறுப்பன்.

பார்வதிக்குக் கோபம் பொங்கிற்று. "நீ கள்ளு குடித்துவிட்டு வந்திருக்கிறாய்" என்றாள்.

"ஆமாம்! அப்படித்தான். உங்கப்பன் வீட்டுப் பணமில்லையே? யார் என்னைக் கேட்கிறது?" என்றான் கறுப்பன்.

"வீட்டில் நுழையாதே. பெரிய வீட்டுக்குப் போ. நான் இன்றைக்குச் சமைக்கவில்லை" என்றாள் பார்வதி. அருவருப்பினால் அவள் முகம் விகாரமடைந்தது.

"உன் முகத்தைச் சுடு. உன் நாற்றச்சோறில்லாவிட்டால் செத்தா போய்விடுவேன்?" என்று சொல்லிக் கறுப்பன் அவளை அடிக்கப்போனான்.

* * * *

இதன்பிறகு அடிக்கடி இப்படி நேரலாயிற்று. சில சமயம் கறுப்பன் பார்வதியை நன்றாய் அடித்தும் விடுவான். பார்வதி குழந்தையை எடுத்துக்கொண்டு (இதற்குள் அவளுக்கு ஒரு குழந்தை பிறந்திருந்தது) தன் கொழுந்தியின் வீட்டுக்குப் போவாள். அங்கே எல்லோரும் கூடி யோசனை செய்வார்கள். நிலைமை வரவர மோசமாகி வந்தது. மாடுகள் கிழமாகி பாரவண்டி இழுக்கத் தகுதியற்றவையாயின. கறுப்பன் அவற்றைச் சந்தையில் நஷ்டத்துக்கு விற்றான். புதிய ஜதை வாங்குவதற்குக் கையில் பணம் இல்லை. இனிமேல் கள்ளுக்கடைப் பக்கமே போகிறதில்லையென்று பார்வதியிடம் சத்தியம் செய்துகொடுத்து, பால் தயிர் விற்றும், நூல் நூற்றும் அவள் சேர்த்து வைத்திருந்த பணத்தைப் பிடுங்கிக்கொண்டான். பிறகு புருஷன் இறந்த தன் அக்காளிடமிருந்தும்

கொஞ்சம் கடன் வாங்கிப் போட்டுப் புதிய ஜதை மாடு வாங்கினான்.

* * * *

மூன்று மாதங்கள் சென்றன. மிட்டாதார் தமக்குச் சேர வேண்டிய பணத்திற்கு ஆள் அனுப்பினார். வாய்தா கொடுக்க வேண்டுமென்று கறுப்பன் கெஞ்சினான். ஒருமுறை, இரண்டுமுறை, மூன்றுமுறையும் வாய்தா கொடுக்கப்பட்டது. ஆனால், நாலாவது முறையில் மிட்டாதாரருடைய ஆள்கள் வந்து காளை மாடுகளில் ஒன்றைப் பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். மிட்டாதாரிடம் ஓடினான் கறுப்பன். ஒருமாதத் தவணை கொடுக்கும்படி காலில் விழுந்தான்.

"ஒரு நாள்கூடத் தரமாட்டேன்; செருப்பால் அடி, குடிகாரப் பயலே! வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கவில்லை. உன்னை யாரடா புது மாடு வாங்கச் சொன்னது?" என்றார் மிட்டாதார்.

"அப்படிச் சொல்லக்கூடாது. எஜமான் எங்களை அப்பனைப்போல் காப்பாற்றி வந்திருக்கிறீர்கள். ஒரே ஒரு வாய்தா கொடுங்கள், கட்டாயம் பணம் கொண்டு வந்து கட்டிவிடுகிறேன்."

"அதெல்லாம் வீண். இனி ஒரு நிமிஷங்கூடப் பொறுக்க முடியாது. புதன்கிழமைச் சந்தைக்கு உன் மாட்டை அனுப்பப் போகிறேன்."

கறுப்பன், "ஐயோ சாமி! அப்படிச் செய்தால் என் குடி கெட்டுவிடும். வேண்டாம் அப்பா!" என்று சொல்லித் தன் மாட்டண்டை போனான்.

"துரத்து வெளியே! மாட்டை விடாதே. போய்ப் பணம் கொண்டு வா. இல்லாவிட்டால் மாட்டைக்

கண்டிப்பாய்ப் புதன்கிழமைச் சந்தையில் விற்றுப் போடுவேன்" என்றார் மிட்டாதார்.

"வேண்டாம்! நான் அப்படிச் சுத்தக் காவடியல்ல. கொஞ்சம் தவணை கொடுத்தால் உங்கள் பணம் போகாது" என்று மன்றாடினான் கறுப்பன்.

"முடியவே முடியாது" என்று மிட்டாதார் கண்டிப்பாய்ச் சொன்னார்.

"வட்டி கொடுத்துவிடுகிறேன். வட்டியுடன் வாங்கிக்கொள்ளுங்கள்" என்றான் கறுப்பன்.

"செருப்பாலடி, நாயே! வட்டியாம், வட்டி! இவன் எனக்கு வட்டி கொடுக்கப்போகிறானும்! கந்துத் துலுக்கனிடம் போய்க் கடன் வாங்கிவந்து தீர்த்து விட்டு மறுவேலை பார். நாளைக்குப் பணம் வராவிட்டால் மாட்டை வந்த விலைக்குச் சந்தையில் விற்று விடச் செய்வேன்" என்று மிட்டாதார் கோபமாய்ச் சொல்லி உள்ளே போய்விட்டார்.

"வேறு வழியில்லை, கறுப்பா! காதர்சாகிபினிடம் போய்த்தான் ஆகவேண்டும். அவன்தான் உனக்குப் பணங்கொடுத்து உதவக்கூடும்" என்றார் மிட்டா குமாஸ்தா.

ந

## கடன்

கறுப்பன் தன் தந்தையிடம் போய், அண்ணனைக் கடன் கொடுக்கச் சொல்லும்படி மன்றாடினான். அண்ணனும் கிழவன் சொற்படி தம்பிக்கு உதவி செய்ய விரும்பினான். ஆனால், அவன் மனைவி அதற்குச் சம்மதிக்கவில்லை.

"அவனுக்குப் பணங் கொடுத்தால் திரும்பியே வராது. கந்து சாயபினிடம் போய் வாங்கிக்கொள்ளட்டுமே? நம்முடைய வயிற்றுப்பாடே கஷ்டமாயிருக்கிறது. இந்த வருஷம் மழை பெய்யுமோ பெய்யாதோ? அடுத்த வருஷம் இந்தக் காலத்தில் கஞ்சிக்குக் கம்பு இல்லாவிட்டால் யார் கொடுப்பார்கள்?" என்று அவள் தன் புருஷனிடம் சொன்னாள்.

கடைசியாகக் கறுப்பன் காதர்கானிடமே சென்றான். அவ்வூரில் மிட்டாதார் உள்பட எல்லாருடைய வரவு செலவும் காதர்கானுக்குத் தெரியும்.

"உனக்குத் தெரியாது, அப்பனே! மிட்டாதாருக்கு இப்போது தொல்லை அதிகம். அவர்கூட என்னைப் பணங் கேட்டிருக்கிறார்" என்றான் காதர்கான்.

கறுப்பன் :— பெரிய மனிதர்களுடைய தொல்லைகள் எப்படியாவது தீர்ந்துவிடும். என்னுடைய மாடு போய்விட்டால் நான் எப்படிப் பிழைப்பு நடத்துவது? இந்த சமயம் நீங்கள்தான் எனக்கு உதவ வேண்டும்.

காதர்கான் :—அதெப்படி முடியும்? கையிலிருக்கும் பணமெல்லாம் மிட்டாதாருக்குக் கொடுப்பதாய்ச் சொல்லிவிட்டேனே?

கறுப்பன் :— ஐயோ, அப்படிச் சொல்ல வேண்டாம் சாயபு! நான் கெட்டே போய்விடுவேன். ஏழைக்கு உதவி செய்யவேண்டாமா? மிட்டாதாரைப் பற்றி என்னிடம் ஏன் சொல்லுகிறீர்கள்?

காதர்கான் :— உண்மைதான்; ஏழைக்கு உதவி செய்ய வேண்டியதுதான். ஆனால், அவருக்கு வாக்குக் கொடுத்தாய் விட்டதே என்று பார்க்கிறேன்.

இவ்வாறு நீண்ட நேரம் பேச்சும் வேண்டுதலும் நடந்த பிறகு, சாயபு சம்மதித்தான். கறுப்பன் 45 ரூபாய் பெற்றுக்கொண்டு, 60 ரூபாய்க்கு பத்திரம் எழுதிக் கொடுத்தான் மாதம் ஐந்து ரூபாயாகப் பன்னிரண்டு மாதத்தில் செலுத்திவிட வேண்டுமென்று ஒப்பந்தம். வட்டி கிடையாது. ஆனால், எந்த மாதமாவது பணங் கட்டத் தவறினால் ஒரு ரூபாய் அபராதம்.

"கறுப்பா! உன்னை நம்பிப் பணங் கொடுத்தேன். நன்றாக உழைத்து வேலை செய்கிறாய், பணம் சம்பாதிக்கிறாய். ஒழுங்காகத் தவணை தவறாமல் கொடுத்துவா. குடிப்பதை விட்டுவிடு. நீ நல்ல மனிதன். மனைவி, குழந்தை இருக்கிறார்கள். இனியும் குழந்தைகள் பிறக்கும். குடித்தாயோ, அடியோடு அழிந்து போவாய்" என்று காதர்கான் இதோபதேசம் செய்தான்.

கறுப்பன் :—உண்மை, எஜமானே! அந்தச் சனியனை இனிமேல் தொடுவதில்லை. நான் பட்டதெல்லாம் போதும். சமயத்திற்கு நீங்கள் உதவி செய்தீர்கள். இந்த நன்றியை எப்போதும் மறக்கமாட்டேன்.

கடனைத் தீர்த்துவிட்டுக் கறுப்பன் மாட்டை ஓட்டிக்கொண்டு வந்தான். பாக்கிப் பணத்தைப் பார்வதியின் கையில் கொடுத்தான்,

"அடியே இங்கே பார். இனிமேல், கள், சாராயம் தொடுவதில்லை. சத்தியம் செய்திருக்கிறேன். எனக்குப் பணம் எதுவும் வேண்டாம். அதை நீ என்ன வேண்டுமானாலும் செய்துகொள். சம்பாதிப்பது எல்லாவற்றையும் உன்னிடமே கொண்டுவந்து கொடுக்கப் போகிறேன்" என்றான்.

பார்வதி நல்ல காலம் பிறந்துவிட்டதென்று எண்ணினாள். ஆனந்தமடைந்தாள். தேகத்தில் புதிய பலம் தோன்றிற்று. முன்னைவிட உற்சாகத்துடன் வேலை செய்யத் தொடங்கினாள்.

ச

## கூலி வேலை

காட்டில் இப்போது வேலை கிடையாது. சும்மா இருக்கப் பார்வதிக்கு முடியவில்லை. "ஏதாவது வேலை பார்க்கவேண்டும். புருஷன் கடனாளியாயிருக்கும்போது நான் எப்படிச் சும்மா இருக்கலாம்?" என்று எண்ணினாள். காதர்கான் தன் வீட்டிற்குச் சேர்ந்தாற்போல் இன்னொரு வீடு கட்டத் தொடங்கியிருந்தான். அங்கே கொத்து வேலை பலமாக நடந்துகொண்டிருந்தது. இன்னும் மூன்று, நாலு பெண்களுடன் சேர்ந்து பார்வதி அங்கே கூலிக்கு வேலை செய்ய ஆரம்பித்தாள்.

அவள் அதிகாலையில் எழுந்து வீடு பெருக்கிச் சுத்தம் செய்வாள். பிறகு பால் கறந்துவிட்டு மோர் கடைவாள். உடனே மோரை எடுத்துக்கொண்டு ஊருக்குள் போவாள். தன்னிடம் மோர் வாங்கும் வீட்டுக்காரர்கள் தன்னைத் தாமதப்படுத்தாமல் விரைவில் அனுப்பிவைக்குமாறு கெஞ்சிக் கேட்டுக் கொள்வாள். அவர்களும் அப்படியே செய்வார்கள். பிறகு அவள் வீடு திரும்பிக் கூழ் குடித்துவிட்டுக் குழந்தைக்குப் பால்கொடுப்பாள். அதன்பின் குழந்தையைக் கொழுந்தி வீட்டில் விட்டுவிட்டு, வீடு கட்டும்

வேலைக்குப் போவாள். மத்தியான்னம் அவசர அவசர மாய் வந்து பழங்கூழ் குடித்துவிட்டுக் குழந்தைக்குப் பால் கொடுத்துத் திரும்பி ஓடுவதற்கே சாவகாசம் இருக்கும். சூரியன் அஸ்தமித்த பிறகுதான் கொத்து மேஸ்திரி வேலையிலிருந்து விடுவான். இருட்டும் சமயத்தில் வீட்டுக்கு வந்து சமைப்பாள். இவ்வள வையும் அவள் உற்சாகமாகச் செய்துவந்தாள். வேலை கஷ்டந்தான். ஆனால், தினத்துக்கு இரண்டணு கூலி கிடைத்தது. கஷ்ட காலத்தில் நாள் ஒன்றுக்கு இரண்டணு கிடைப்பது அதிகமல்லவா ?

கணவன் இனிக் கள் குடிக்கமாட்டான், புது மனிதனுகிவிட்டான், என்னும் நம்பிக்கையே பார் வதிக்கு இவ்வளவு உற்சாகம் அளித்தது. கறுப்பனும் இரண்டொரு மாதம் கள்ளுக்கடைக்குப் போகாம லிருந்தான். அதற்குப் பின் அவன் பழைய கறுப்பனே யானுன். சம்பாதிக்கும் பணமெல்லாம் மறுபடியும் வந்தவழி தெரியாமல் போக ஆரம்பித்தது. பார்வதி யிடம் ஒரு தம்பிடிகூட வந்து சேருவதில்லை. இரண்டு மூன்று நாள் வெளியிலேயே காலங்கழித்துவிட்டு மாட்டுக்குக் கொஞ்சம் தீனி வாங்கிக்கொண்டு வந்து சேர்வான். கொஞ்சப் பணத்துக்கு ஏதாவது பொய் சொல்வான். சில நாளைக்குப்பின் இப்படி ஏமாற்ற முயல்வதையும் விட்டுவிட்டான். பார்வதியும் கேட் பதை யொழித்தாள். ஆனால், அவள் மட்டும் வீட்டி லும் கூலிக்கும் இராப்பகலாய் உழைத்துவந்தாள்.

ஒருநாள் காதர்கான் வந்து தவணைப் பணத்திற் காகச் சண்டையிட்டான். வார்த்தை தடித்தது. மேஸ்

திரியின்கீழ் வேலை பார்த்தவளாகையால் கடுமையான மொழிகள் கேட்பது பார்வதிக்கு வழக்கமாய்த்தான் போயிருந்தது. ஆனால், அவள் இதுவரை கேட்டறியாத ஆபாச வசைச்சொற்களை அன்று கேட்டாள். உள்ளே சென்று பானையைத் திறந்து காசுகாசாகச் சேர்த்து வைத்திருந்த பணத்தை எடுத்துக்கொண்டு வந்து அவன்முன் எறிந்தாள். கறுப்பன் அவ்வப்போது சுறண்டிக்கொண்டு போயும் அவ்வளவு பணம் மிச்சம் பிடித்து வைத்திருந்தாள்.

பார்வதி அன்று முழுதும் அழுதுகொண்டிருந்தாள். மறுநாள் அவளுக்கு உடம்பு சரியில்லாதிருந்தும் வழக்கம்போல் வேலைக்குப் போனாள். கடன்கார நாயபுவின் நாணமற்ற கொடுமொழிகளை அவளால் மறக்க முடியவில்லை. முன்னெல்லாம் ஆண் பெண் என்கிற நினைவே இல்லாமல் தைரியமும் உற்சாகமும் உள்ள அவள், இப்போது மாறிவிட்டாள். அவளுடன் வேலை செய்த ஆண்மக்களின் பேச்சுக்களைக்கேட்டு இப்போது அவள் நடுங்கினாள். பயம் அதிகரிக்கவே துஷ்டர்களுடைய காமக் கண்களின் வேட்டையும் அதிகரித்தது. காதர்கானுடைய மகன், வீடு கட்டும் வேலையை மேற்பார்வை செய்துவந்தான். அவன் கண்ணும் பேச்சும் சில சமயம் அவளுக்குத் தொந்தரவாக இருந்தன.

அவள் கூலிவேலை செய்ய ஆரம்பித்ததிலிருந்து குழந்தையைச் சரியாகக் கவனிக்க முடியவில்லை. பாவம்! வரவர மெலிந்துவந்த அந்தக் குழந்தைக்கு ஒருநாள் சுரமும் இருமலும் வந்தது. கிராமங்களில் ஏழைகளுக்கு மருந்தேது, மாயமேது? ஒன்றிரண்டு சூடுபோட்டுப் பார்த்தார்கள். ஒருவாரம், பார்க்கச்

சகியாத வேதனை அனுபவித்துவிட்டு, பிறகு அது கண்ணை மூடிற்று. கறுப்பன் பெண்பிள்ளைபோல் விம்மி விம்மி அழுதான். "அழாதே, அப்பா! ஆண்டவன் கொடுத்தான். ஆண்டவன் எடுத்துக்கொண்டான். நாம் என்ன செய்யலாம்?" என்று அவனுடைய தகப்பன், கிழவன், தேறுதல் கூறினான்.

"மாமா! தெய்வம் என்னை ஏன் இப்படிப் படுத்துகிறது! நான் யாருக்கும் எவ்விதத் தீங்கும் செய்ததில்லையே?" என்று பார்வதி கதறினாள்.

கிழவன் :— அசடே, அழாதே. உனக்கு வயதாகி விட்டதா, என்ன? இன்னும் ஏழெட்டுக் குழந்தை பெறுவதற்குக் காலமிருக்கிறது. காட்டில் போடும் விதைகள் எல்லாம் முளைத்துக் கதிர்விடுவதுண்டா? அதற்காக நாம் துக்கப்படுகிறோமா?

பார்வதி :— இனிமேல் எனக்குக் குழந்தை வேறு வேண்டுமா? பூமியில் சுகம் துக்கம் எல்லாம் அனுபவித்து விட்டேன். ஆண்டவன் என்னைக் கொண்டு போகவேண்டும். அவ்வளவுதான்.

கிழவன் சிரித்தான். "உன் புருஷனுக்குப் புத்தி சொல்லிக் கையிலுள்ள அரைக்காசு ஒருகாசைக் கள்ளுக்கடையில் தொலைத்துவிடாமல் பார்த்துக்கொள். இந்தத் துக்கத்தை மறந்து இன்னும் குழந்தைகள் பெற்றுச் சந்தோஷமா யிருப்பாய். மாரியாயி உன்னைக் கைவிடமாட்டாள்" என்றான்.

"அந்தப் பாழும் விஷத்தை இனி நான் தொடுவதில்லை. தொட்டால் நாசமாய்ப் போவேன். என் தலைமேல் ஆணை" என்று கறுப்பன் சபதம் செய்தான்.

## ரு

## மோசம்

பார்வதிக்கு இன்னும் நல்ல காலம் வரவில்லை. அவளுடைய துன்பங்கள் இன்னும் ஒழிந்தபாடில்லை. அடுத்த புதன்கிழமையன்று இராமாபுரம் சாராயக் கடை வழியாய்ச் சென்றுகொண்டிருந்தபோது கறுப்பன் தான் செய்துகொடுத்த சத்தியத்தை மறந்து விட்டான். திருப்பூருக்கு மூட்டைகள் ஏற்றிக்கொண்டு போன கறுப்பன் மற்ற வண்டிக்காரர்களுடன் திரும்பி வந்துகொண்டிருந்தபோது சாராயக்கடை வாயி லண்டை வந்ததும் வண்டியை நிறுத்தி, "அடே யாரடா தண்ணிபோடப் போகிறவன்? எனக்கு வேண்டாமப்பா, அந்தச் சனியனுக்கு நான் போக வில்லை" என்றான்.

"வேண்டாவிட்டால் காசை இறுக்கி முடிந்து கொண்டு போயேன். ஏன் கத்துகிறாய்?" என்று சொல் லிக்கொண்டே வேறொரு வண்டிக்காரன் வண்டியி லிருந்து குதித்துக் கடைக்குள் நுழைந்தான். கறுப்பன் சற்றுத் தயங்கி நின்றுவிட்டுப் பிறகு தானும் சென் றான். உள்ளே நுழையும்போது, "இதுதான் கடைசித் தடவை" என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டு போனான்.

அடுத்த சந்தையன்றும் இதே கதைதான். "ஏதோ கையில் காசு இருக்கும்போது ஏன் கவலையற்று உற்சாகமாய் இருக்கக் கூடாது?" என்று கூட வந்தவனிடம் அவன் சொன்னான்.

"அது கெட்டது தள்ளு; பணம் என்ன கூடப் பிறந்ததா? நாம் பாடுபட்டுச் சம்பாதிக்கும் காசை

நம் இஷ்டப்படி செலவழிப்பதற்கு யார் தடைசெய் வது?'' என்றான் அந்தத் தோழன்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த மற்றொருவன், "சரியான பேச்சு, இந்த உலகம் நிற்பதில்லை. எல்லாம் பொய், இன்றைக்கிருப்பவரை நாளைக்குக் காணோம். ஆயிரம் வருஷம் வாழப்போகிறவர் யார்? கண்ணை மூடிவிட்டால் அப்புறம் அந்தப் பணம் உன்னுடையதா, என்னுடையதா?'' என்று வேதாந்தம் பேசினான்.

"இல்லவே இல்லை. உன்னுடையதுமல்ல, என்னுடையதுமல்ல. எல்லாம் இந்த சாராயக் கடைக்காரனதுதான்!'' என்று நாலாவது வண்டிக்காரன் கத்தினான். இதைக் கேட்டதும் எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள்.

"அட போடா மூடன்களா? எல்லோரும் ரொம்பப் படித்தவர்கள் மாதிரி பேசுகிறீர்கள். இந்தச் சாராயம் உள்ளே போகும்போது எப்படித் தகதகவென்று போகிறது'' என்றான் மற்றொருவன்.

"அடே இந்தச் செட்டிமார்களை உதைக்கவேண்டுமடா! இந்தத் திருட்டுப் பசங்கள் நம்மை நன்றாய் ஏமாற்றிவிடுகிறார்கள். வாடகை எல்லாம் குறைத்துவிட்டார்கள்'' என்றான் கறுப்பன்.

இம்மாதிரி இருட்டுகிற வரையில் பேசிக்கொண்டிருந்துவிட்டு, பிறகு வண்டியண்டை போவார்கள்.

காதர்கான் தவணைப் பணத்துக்கு வரும் நாளாகிவிட்டது. அவன் வருவதற்குள் பணத்தைப்

போய்க் கொடுத்துவிட்டு வரும்படி பார்வதி கறுப்ப னிடம் சொல்லிக்கொண்டிருந்தாள்.

" அவன் கெட்டான். அந்தப் பயல் வரட்டும். ஏதாவது மிஞ்சி அக்கிரமமாய்ப் பேசினல் மண்டையை உடைத்துவிடுவேன் " என்ருன் கறுப்பன்.

ஆனல், வேறு வேலை அதிகமாயிருந்ததோ என் னவோ, சாயபு பல நாளைக்கு வரவேயில்லை. கறுப்ப னும் அதை மறந்துவிட்டான்.

ஒருநாள் காலை, காதர்கான் மகன் இஸ்மேல் வந் தான். ஆனல் பணங்கேட்பதற்குப் பதிலாக, " இராமா புரத்துக்கு மிளகாய் மூட்டை ஏற்றிச் செல்லுகி ருயா ? " என்று கேட்டான்.

" குமரக் கவுண்டனுக்கு வைக்கோல் ஏற்றிப் போகவேண்டும். ஒரு வாரத்திற்கு முன்பே சொல்லி யிருக்கிருன் " என்ருன் கறுப்பன்.

" அதெல்லாம் முடியாது கறுப்பா. குமரக் கவுண் டன் வைக்கோலுக்கு அவசரமில்லை. எங்கள் மூட்டை நீ கொண்டுதான் போகவேண்டும். இன்று மூட்டை அனுப்பாவிட்டால் எங்களுக்கு நல்ல கிராக்கி போய் விடும் " என்ருன் இஸ்மேல்கான்.

கறுப்பன் கடைசியில் சம்மதித்தான். சாயபு தவ ணைப் பணம் கேட்கக்கூட மறந்திருக்கும்போது, எப்படி அவன் சொல்வதை மறுப்பது ?

சாயங்காலம், பார்வதி தனியாக வீட்டில் சமையல் செய்துகொண்டிருந்தபோது இஸ்மேல்கான் மறுபடி யும் வந்தான். வீட்டுக்கு வெளியில் நின்றுகொண்டே " கறுப்பன் வந்துவிட்டான ? " என்று கேட்டான்.

" இன்னும் வரவில்லை " என்றாள் பார்வதி.

" ஆமாம், இவ்வளவு சீக்கிரம் வந்துவிடுவானா ? வழியில் சாராயக்கடையல்லவா இருக்கிறது ?" என்று சொல்லிக்கொண்டே இஸ்மேல் உள்ளே நுழைந்தான்.

" ஆமாம், என்னைப்போன்ற ஏழைப் பெண்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொள்ள வேண்டுமல்லவா ? அதற்காகத்தான் சாராயக்கடை இருக்கிறது " என்றாள் பார்வதி.

அவள் சொல்லாமலே இஸ்மேல் உட்கார்ந்தான். கறுப்பன் வரும்வரையில் அவன் காத்திருப்பான்போல் இருக்கிறதென்றெண்ணிப் பார்வதி தன் வேலையைப் பார்த்தாள்.

இஸ்மேல் பேச்சு வளர்க்கத் தொடங்கினான். " இருக்கட்டும், உன் புருஷனிடம் உனக்குச் சலித்துப் போகவில்லையா ? " என்று கேட்டான்.

" அதெப்படி ஐயா ? கட்டிய புருஷனிடம் நன்மையோ, தீமையோ, அனுபவிக்கத்தானே வேண்டும்?" என்று பார்வதி திரும்பிப் பாராமல் கூறினாள்.

" உண்மைதான். என்ன இருந்தாலும் புருஷன். கட்டிய புருஷனை விட்டுவிட முடியுமா ? " என்றான் இஸ்மேல்.

சற்றுப் பொறுத்து, "பாவம், உன்னைப்போன்ற லட்சணமான பெண் ஒரு குடிகாரனைக் கட்டிக்கொண்டு கஷ்டப்படவேண்டியிருக்கிறதே ! என்ன துர்ப்பாக்கியம் ? " என்று இரக்கமாகக் கூறினான்.

பார்வதி பதில் சொல்லவில்லை. பின்னர் இஸ்மேல் அவளுடைய கஷ்டங்களைப்பற்றி விசாரித்தான். இப்

படியே பேச்சு வளர்ந்துகொண்டு போயிற்று. கொஞ்ச நேரம் கழித்து, இஸ்மேல், கறுப்பன் வரவுக்குக் காத்திராமலே எழுந்து போய்விட்டான்.

மறுநாளும் இஸ்மேல் வந்து கறுப்பனுக்கு ஏதோ வேலை கொடுத்து அனுப்பினன். அன்று மாலையும் முன்போல் வந்து சேர்ந்தான். வரும்போது கொஞ்சம் பனைவெல்லம் கொண்டுவந்து பார்வதியிடம் கட்டாயப் படுத்திக் கொடுத்தான். அவ்வெல்லம் ஒரு மூப்பன் தனக்குக் கொடுத்ததென்றும், காசு கொடுத்து வாங்கியதல்லவென்றும் கூறினன்.

"உன்னைப் பார்க்கும்போது ஏனே எனக்கு ஒரு விதச் சந்தோஷம் உண்டாகிறது" என்றுன் இஸமேல்.

"இதெல்லாம் என்னத்திற்கோ தெரியவில்லையே" என்று பார்வதி தனக்குள் பயந்தாள். "நான் கிட்ட நெருங்கும்போது நீ ஏன் நடுங்குகிருய்? கடன் பணத்திற்காக உன்னைத் தொந்தரவு செய்வேனென்று பயப்படுகிருயா? நீ மட்டும் கொஞ்சம் சந்தோஷமாய்ப் பேசினல் எனக்குப் பணம் இலட்சியமே இல்லை. பணத்துக்கென்ன, எவ்வளவோ கிடக்கிறது" என்ருன் இஸ்மேல்.

இந்தக் கதையை வளர்த்துவானேன்? பார்வதி பலநாள் உறுதியாக இருந்தாள்; அவன் வலையில் விழாமலிருந்தாள்; கடைசியில் ஏமாந்து போனுள். இரக்கமற்ற துஷ்டனுடைய கொடிய பார்வைக்கு ஆளான ஒரு பெண்பிள்ளை, கஞ்சிக்குக் கஷ்டப்பட்டுக் கொண்டு ஆதரவற்றிருப்பவளானல், அவன் வெற்றி பெறுவதற்குக் கேட்பானேன்? பார்வதி தன் கற்பை இழந்தாள்.

௬௯

## கோபம்

சீரம்பூர் கள்ளுக்கடையிலே உள்ளே போகாத சாதிகளுக்குக் கள் ஊற்றுவதற்காக ஏற்பட்ட துவாரத்துக்கருகில் வெளியே பறையரும் சக்கிலியரும் ஏகக்கூட்டமாய் நின்று இரைச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். கடையின் உட்புறத்தை நரகக்குழி யென்று கூறலாம். எச்சிலும் ஆபாசமும் அழுக்கும் அங்கே நிறைந்திருந்தன. ஈக்கள் ஏகமாய் மொய்த்தன. பழைய கள்ளின் நாற்றம் வீசிக்கொண்டிருந்தது. ஜனங்கள் அங்கங்கே கூட்டங் கூட்டமாய்க் கூச்சலிட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

"அடே பழனி! இன்னொரு முறை அப்படிச் சொன்னால் பல்லைத் தட்டிவிடுவேன்" என்றான் கறுப்பன்.

பழனி :—பல்லை உடைத்து விடுவாயா? அடே அப்பா! இவன் சூரத்தனத்தைப் பாருங்கடா! கட்டிய பெண்டாட்டியை நேராய் வைக்கமுடியாதவனுக்கு வீருப்பில் மட்டும் குறைவில்லை!

இது கேட்டதும் கறுப்பன் தன் மொந்தையை அவன் முகத்தின்மீது வீசி எறிந்தான். அடிபட்டவன் மூக்கிலிருந்து இரத்தம் சொட்டிற்று.

"அடா முட்டாள்களா! கள்ளைக் கீழே கொட்டுகிறீர்களே! மோசக்காரப் பெண்களுக்காக நல்ல அருமையான கள்ளை, யாராவது வீணுக்குவார்களா? பெண்களை நம்பக்கூடாது, அப்பா! நம்பக்கூடாது" என்று இடையில் ஒருவன் கத்தினான்.

"ஐயோ! பழனி செத்துப்போனுன்" என்று இன்னொருவன் கூவிக்கொண்டே போய், அடிபட்டவன் முகத்தில் வழிந்த இரத்தத்தைத் துடைத்தான். பழனிக்கு அதிகக் காயம் படவில்லை. அவன் கோபத்துடன் எழுந்து ஒரு செங்கல்லை எடுத்துக் கறுப்பன் மீது வீசி எறிந்தான். கறுப்பன், தலையை வளைந்து கொடுத்து அடிபடாமல் தப்பினுன்.

கடைக்குள் சண்டை போடக்கூடாதென்று கடைக்காரன் கூச்சல் போட்டான்.

கறுப்பன் வெளியே ஓடினுன். அவனைப் பிடிக்கப்போன பழனி வாயிற்படி தடுக்கிக் கீழே விழுந்தான். கறுப்பன் வண்டியிலேறி உரத்த குரலில் திட்டிக்கொண்டே வண்டியை ஓட்டினுன்.

வழக்கத்தைவிடச் சீக்கிரமாகவே கறுப்பன் அன்று வீடுபோய்ச் சேர்ந்தான். வீடு உட்புறம் தாளிடப்பட்டிருந்தது.

"ஏய்! கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு உள்ளே என்ன செய்கிருய்? எத்தனை நேரம் நான் காத்திருப்பது? கதவைத் திற. மாட்டுக்குத் தண்ணீர் காட்டு" என்று கறுப்பன் கத்தினுன்.

உள்ளே காலடிச் சத்தம் கேட்டது. கதவு திறக்கச் சிறிது தாமதம் ஆயிற்று. கறுப்பன் கத்திக் கொண்டேயிருந்தான்.

சிறிது நேரங் கழித்துப் பார்வதி கதவைத் திறந்து வெளியே வந்து கறுப்பன் முன்பு நின்றுகொண்டு, "கொஞ்சம் இங்கே வந்து எருமையைப் பார். அதற்கு என்னமோ தெரியவில்லை. உதைக்கிறது. பால் கறக்கமாட்டேனென்கிறது" என்ருள்.

"எருமை நாசமாய்ப் போகட்டும். எனக்குத் தாகமாயிருக்கிறது. கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா" என்று சொல்லிக்கொண்டே கறுப்பன் வீட்டினுள்ளே தடுமாறி நுழைந்தான்.

உள்ளே இருந்த இஸ்மேல், சுவர் ஓரமாய் வெளியே நழுவிவிட முயன்றான்.

"ஓகோ! வீட்டிற்குள்ளே துலுக்கப்பயல் என்ன செய்கிறான்? அடி, தேவடியாள் மகளே!" என்று கத்திக்கொண்டு கறுப்பன் பக்கத்தில் கிடந்த மண்வெட்டியை எடுத்துப் பார்வதிமேல் வீசி எறிந்தான்.

பிறகு, ஒரு வெட்டரிவாளை எடுத்து, ஓடிக்கொண்டிருந்த இஸ்மேல்மீது பலங்கொண்ட மட்டும் ஓங்கி வெட்டினான். இஸ்மேல் அந்த அடியில் கீழே விழுந்துவிட்டான். அவன் மண்டையிலிருந்து இரத்தம் ஆறாக ஓடியது. பிறகு கறுப்பன் பார்வதிமீது பாய்ந்தான். அவள் மைத்துனன் வீட்டை நோக்கி ஓடினாள். கறுப்பன் கொஞ்சதூரம் அவளைத் தொடர்ந்து போனான். பிறகு இந்தச் சத்தத்தைக் கேட்டு அக்கம்பக்கத்து ஜனங்கள் வருவது கண்டு திரும்பினான். அப்போது கீழே விழுந்த இஸ்மேல் எழுந்திருக்க முயன்றுகொண்டிருந்ததைப் பார்த்து ஒரு பெரிய கூச்சல் போட்டுக்கொண்டு அவனை வெட்டிச் சின்னாபின்னமாக்குவதற்காக ஓடிவந்தான். ஆனால், இதற்குள் அங்கு வந்து கூடிவிட்ட ஜனங்கள் அவனைத் தடுத்து நிறுத்திக் கையிலிருந்த அரிவாளைப் பிடுங்கிக் கொண்டார்கள்.

எ

## நரகம்

இராமாபுரம் போலீஸ் ஸ்டேஷனில் கறுப்பனும் பார்வதியும் தனித்தனி அறையில் அடைக்கப்பட்டிருந் தார்கள்.

போலீஸ் சேவகர்கள் அனைவரும் அவள் இருந்த அறைக்கு வெளியே குறுக்கும் நெடுக்குமாய்ச் சென்று அவளைப் பார்த்துப் புன்னகை புரிந்தனர். அவளுடன் பேசுவதற்குச் சந்தர்ப்பம் செய்துகொண்டு எல்லோரும் பேசினார்கள். ஆனால், அவளோ அள வில்லாத் துயரக் கடலில் ஆழ்ந்திருந்தாள். அவள் மனம் குழம்பித் தத்தளித்தது. காட்டில் யதேச்சை யாகத் திரிந்துகொண்டிருந்த மிருகம் ஒன்றை, முதன் முதலாகப் பிடித்துக் கூட்டில் அடைத்ததும் அதன் மனோநிலை எத்தகையதா யிருக்குமென்று உங்களால் கற்பனை செய்து பார்க்க முடியுமா? போலீஸ் வலையில் முதல் தடவை அகப்பட்டுக்கொண்ட ஒரு குடியானவ ஸ்திரீயின் துன்பத்தை அதற்கே ஒப்பிடக்கூடும். கறுப்பனும் தன் அறையில் திகைத்துக் கிடந்தான்.

" உண்மையைச் சொல்லிவிடு. அப்போதுதான் உன்னைத் தப்புவிக்க எங்களால் ஏதேனும் செய்யக் கூடும் " என்றார் சப்இன்ஸ்பெக்டர்.

கறுப்பன் :—" ஒளிப்பதற்கு என்ன இருக்கிறது ? எனக்கு ஒன்றுமே தெரியாது. வெள்ளிக்கிழமை தான் நான் கருமாண்டூரிலிருந்து திரும்பிவந்தேன்."

இன்ஸ்பெக்டர் :—"அந்தப் புரட்டெல்லாம் பலியாது, அப்பன். உன் பெண்சாதி எல்லாம் சொல்லி விட்டாள்."

கறுப்பன் :—" சண்டாளி சொல்லிவிட்டாளா? எல்லாம் அந்தப் பாவியால் வந்த வினைதான்."

இன்ஸ்பெக்டர் :—" ஆமாம், உண்மை. எல்லாம் பெண்களால்தான் வருகிறது. நல்லது; இப்போது ஒன்றும் ஒளியாமல் சொல்லிவிடு. பயப்படாதே."

கறுப்பன் :—"நான் என்ன சொல்கிறது? எல்லாந் தான் அவள் சொல்லிவிட்டாள் என்கிறீர்களே."

இன்ஸ்பெக்டர் :—" உண்மைதான். ஆனால், உன் வாயால் சொல்லவேண்டும். இல்லாவிடில் ஏழு வருஷம் கடுங்காவல், தெரியுமா பயலே ?"

" ஏழு வருஷம் ஆனாலும் சரி, நான் ஒன்றும் சொல்லப்போவதில்லை" என்று உறுதியாகச் சொன்னான் கறுப்பன்.

" நயமாய்க் கேட்டால் வேளாளப் பயல் இப்படித் தான் சொல்வான். அவனை ...(இங்கு எழுதத் தகுதியற்ற சித்திரவதையைக் குறிப்பிட்டு) செய்யவேண்டும். அப்போதுதான் உண்மையைக் கக்குவான்" என்று பக்கத்திலிருந்த ஹெட்கான்ஸ்டபில் கூறினான்.

" ஆமாம், அப்புறம் அவனை நன்றாய் விசாரியுங்கள்" என்றார் சப் இன்ஸ்பெக்டர். " விசாரணை" என்னும் வார்த்தையை அவர் சிலேடையாய் அழுத்திச் சொன்னார்.

பார்வதியையும் விடவில்லை.

"இங்கே பார், பெண்பிள்ளை. நீ ஒன்றும் செய்யவில்லைபோல் தோன்றுகிறது. உண்மை சொன்னால் தப்பித்துக் கொள்ளலாம். வியாழக்கிழமை சாயங்காலம் காதர்கானும் அவன் மகனும் உன் வீட்டுக்கு வந்தார்களா?" என்று ஹெட் கான்ஸ்டேபில் கேட்டான்.

"தகப்பனும் பிள்ளையுமா? இல்லவே இல்லை" என்றாள் பார்வதி.

"நல்லது, இஸ்மேல் மாத்திரம் தனியாக வந்தானல்லவா?" என்று ஹெட்கான்ஸ்டபில் கூறி அருகிலிருந்த சேவகர்களைப் பார்த்துக் கண் சிமிட்டினான்.

"எஜமான்களே! இப்படி யெல்லாம் பேசாதீர்கள். என் வீட்டுக்குத் துலுக்கன் ஏன் வருகிறான்? பெண் பிள்ளையைப் பார்த்து இப்படிப்பட்ட அவமானமான சங்கதிகளைக் கேட்கலாமா? என்னை வீட்டுக்கு அனுப்புங்கள். மாமன், மாமி எல்லோரும் அங்கேயிருக்கிறார்கள். அவர்களைக் கேட்டால் எல்லாம் சொல்வார்கள்."

"வீட்டுக்கு அனுப்ப வேண்டுமா? அவ்வளவு அவசரம் வேண்டாம், அம்மே, உண்மையைச் சொல்லிவிட்டால் வீட்டுக்குப் போகலாம். இல்லாவிட்டால் போக முடியாது, இங்கேதான் இருக்க வேண்டும்."

"ஐயோ கடவுளே!" என்று பார்வதி கதறினாள்.

"நயமாகக் கேட்பதெல்லாம் இவளிடம் பலியாதப்பா, இவள் பலே கைகாரி; எத்தனையோ ஆண் பிள்ளைகளைக் கெடுத்தவளாயிற்றே" என்றான் ஹெட் கான்ஸ்டபில்.

"எஜமான்களே! நீங்களெல்லாம் பெண்டு பிள்ளைகளைப் படைக்கவில்லையா? ஒன்றுமறியாத ஏழையின்மீது கருணை செய்யுங்கள். நானும் உங்கள் கூடப் பிறந்ததாக நினையுங்கள்" என்றாள் பார்வதி.

"அடே, இரும்பைக் காய்ச்சி எடுத்துக்கொண்டு வா" என்று ஹெட்கான்ஸ்டபில் கூவினான்.

"சாமி, சாமி! என் புருஷனைக் கேட்டுக்கொள்ளுங்கள். அவர்கள் எல்லாம் சொல்வார்கள், இந்தத் திக்கற்ற பெண்பிள்ளையை ஏன் வதைக்கிறீர்கள்?" என்று பார்வதி அலறினாள்.

"உன் புருஷனைக் கேளாமலா இருப்போம்? அவனைக் கேட்டதும், எல்லாம் சொல்லிவிட்டான். நீதான் ஒளிக்கிறாய்" என்றார் சப்இன்ஸ்பெக்டர்.

பார்வதி, மிகுந்த மனவேதனையுடன், "எல்லாம் சொல்லிவிட்டதா?" என்றாள்.

"ஆம், ஆம், எல்லாம் உன்னால் வந்த வினைதான் என்று அவன் சொல்லிவிட்டான்."

பார்வதி கையைப் பிசைந்துகொண்டு "ஐயோ கடவுளே!" என்று கதறினாள். பின்னர்த் தொப்பென்று தரையில் விழுந்தாள்.

"அழுவதிலே உபயோகமில்லை, அம்மே! இதனெல்லாம் எங்களை ஏய்த்துவிட முடியாது. பலே பாசாங்குக்காரியா யிருக்கிறாயே? எத்தனை ஆண்பிள்ளையை இப்படித் தலை மொட்டை அடித்திருக்கிறாய்?"

"நீங்கள் எல்லாம் என் கூடப் பிறந்தவர்களைப் போன்றவர்கள், அப்படிப் பேசாதீர்கள். அந்த மனிதன் வந்து தவணைப் பணம் கேட்டான்."

" ஆகா, வழிக்கு வருகிறுயா ?" என்றுன் ஹெட் கான்ஸ்டபில். சப்இன்ஸ்பெக்டர் பக்கம் திரும்பி, "ஏன், நான் சொல்லவில்லையா ?" என்றுன். பிறகு பார்வதியை நோக்கிச் சொன்னுன்: "ஏ, பெண்பிள்ளை ! இதோ பார், உண்மையைச் சொன்னுயோ விட்டு விடுவோம். பெண் பிள்ளையை ஜெயிலுக்கனுப்ப எங்களுக்கு ஆசையா என்ன ? உன் புருஷனுக்கும் சொற்ப தண்டனையுடன் போய்விடும். அதற்கு நாங்கள் உத்தரவாதம்."

" இன்றிரவு என்னை வீட்டுக்கனுப்புங்கள், ஐயா! நாளை எல்லாம் சொல்லி விடுகிறேன்" என்றுள் பார்வதி.

" நல்லது, அவள் போகட்டும். உண்மை சொல்லி விடுவாள்போல் காண்கிறது" என்றுர் சப்இன்ஸ்பெக்டர்.

" வீட்டுக்குப் போய்விட்டால் அப்புறம் உண்மை வராது" என்றுன் ஹெட்கான்ஸ்டபில்.

சப் இன்ஸ்பெக்டர் கான்ஸ்டபில் காதண்டை வந்து, "ஆனுல், அவளை நாம் கைது செய்யவில்லையே! இராத்திரி எப்படி ஸ்டேஷனில் வைத்திருக்க முடியும் ?" என்று இரகசியமாகச் சொன்னுர்.

"நல்லது, ஐயா! அப்படியானுல் அவளை இப்போது பந்தோபஸ்துடன் அனுப்பி நாளை மறுபடியும் கொண்டுவரச் சொல்லவேண்டியதுதான்."

" ஏ, பெண்பிள்ளை, உள்ளது உள்ளபடி சொல்லி விடு. இல்லாவிட்டால், தெரியுமா ?" என்று அதட்டினுர்.

அ

## உலகம்

கறுப்பனுடைய தகப்பன் தன் மூத்த குமாரனிடம் கெஞ்சி ஒரு வக்கீல் பேசி அமர்த்தச் செய்தான். செலவுக்காகக் கறுப்பனுடைய வண்டியை விற்றார்கள். அந்தப் பணம் செலவானதும் அடுத்த கிராமத்திலிருந்த உறவு முறையானிடம் எருமை மாட்டை அடகுவைத்துக் கடன் வாங்கினார்கள். பார்வதியால் தான் இவ்வளவும் வந்தது என்று அவளை எல்லோரும் மனங்கொண்டமட்டும் திட்டினார்கள்.

மாஜிஸ்ட்ரேட்டின் முன், கறுப்பனுடைய வக்கீல், அவன் குற்றம் நடந்த அன்று கருமாண்டூரில் இருந்தான் என்று நிரூபிக்கச் சாட்சியம் விட்டார். அவர் மூன்று மணி நேரத்திற்குமேல் பேசியது கண்டு, கறுப்பனுடைய உறவினர்கள் எல்லோரும் திருப்தியடைந்தார்கள்.

காதர்கான் தெய்வ சாட்சியாகப் பிரமாணம் செய்து, தானும் தன் மகனும் கறுப்பனுடைய வீட்டுக்குப் போய்த் தனக்குச் சேரவேண்டிய கந்துப் பணம் கேட்டதாகவும், அவன் கோபங்கொண்டு திட்டியதாகவும், தான் அவனைக் கண்டித்துப் பணங்கொடுக்கத்தான் வேண்டுமென்று சொல்ல, கறுப்பன் அரிவாளால் தன்னை ஓங்கி வெட்டவந்ததாகவும், ஒரு மயிரிழை யளவினால் தான் தப்பியதாகவும், ஆனால், இடையில் புகுந்த தன் மகன் காயமடைந்ததாகவும், மண்டையில் அடிவிழுந்திருந்தால் உயிரே போயிருக்கு

மென்றும், நல்ல வேளையாக அப்படி விழாமல் வலது காதைப் பிய்த்துக்கொண்டு போய்விட்டதென்றும் கூறினன்.

பார்வதி ஒரு சாட்சியாக விசாரிக்கப்பட்டாள். வக்கீல் சொல்லிக் கொடுத்திருந்தபடி அவள் ஒன்றுமே நடக்கவில்லை யென்று கூறினாள். போலீஸாரிடம் கொடுத்த வாக்குமூலம், தன்னை இம்சைசெய்து பயமுறுத்தி வாங்கியது என்று சொன்னாள்.

மாஜிஸ்ட்ரேட்டு வழக்கை செஷன்ஸ் கோர்ட் விசாரணைக்கு அனுப்பினார்.

கறுப்பனுடைய வண்டிமாடுகளையும் இப்போது விற்றுவிட்டார்கள். செஷன்ஸ் கோர்ட்டுக்குப் புதிய வக்கீல் ஒருவர் அமர்த்தப்பட்டார். விசாரணை முடியும் வரையில் தங்குவதற்காகப் பார்வதி தன்னுடைய சொந்த கிராமத்திலிருந்த அண்ணன் வீட்டுக்குப் போனாள்.

பார்வதியின் அண்ணன் மிக்கஏழை. அவன் காலட்சேபம் செய்வதே கஷ்டமாயிருந்தது. அவன் மனைவி நல்லாயி, பார்வதியின்மீது எரிந்துவிழுந்தாள். பார்வதி வீட்டு வாசலில் நின்று அழுதுகொண்டே அண்ணனுடன் பேசிக்கொண்டிருக்கையில் அவன் மனைவி வெளியே வந்து, “கண்டவர்களை யெல்லாம் நாம் வீட்டில் சேர்த்துக்கொள்ள முடியாது. நம் வயிற்றுப் பாடே நமக்குப் போதும்” என்றாள்.

இப்படிச் சொல்லி அவள் வீட்டுக் கதவைத் தாள் போட்டுக்கொண்டு காட்டுக்குப் போய்விட்டாள்.

"பார்வதி, மாட்டுக் கொட்டிலிலுள்ள எருவைச் சேர்த்து வயலுக்கு எடுத்துக்கொண்டுபோ" என்றான் அண்ணன்.

பார்வதி அவர்களுக்கு ஓயாமல் வேலை செய்து உதவ முயன்றாள். தான் சாப்பிடும் சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டு உழைத்தாள். ஆனால், அவளுடைய அண்ணிக்கு மட்டும் அவள்மீது இரக்கம் பிறக்கவே யில்லை. தன்னால் கூடிய வரையில் அவளை அவமதித்து உபத்திரவித்தாள். பார்வதியோ எல்லாவற்றையும் பொறுமையுடன் சகித்துவந்தாள்.

மீண்டும் ஒருநாள் கான்ஸ்டேபில் ஒருவன் வந்து சேர்ந்தான். கறுப்பன் வழக்கு விசாரணைக்கு வருகிற படியால் பெரியகோர்ட்டுக்குச் சாட்சிசொல்ல வர வேண்டுமென்று பார்வதியைக் கூப்பிட்டான். அண்ணி யினால் கொடுமைப் படுத்தப்பட்ட பார்வதிக்கு இது கூட ஆறுதலாயிருந்தது. அந்தப் போலீஸ் சேவகன் முகம்மதியன்; வயதானவன்; நல்ல உயரம்; பெரிய மீசை; பார்க்க அச்சம் தரத்தக்கவனா யிருந்தாலும் பேசும்போது பெற்ற தகப்பனைப்போல் அன்புடன் பேசினான்.

அவர்கள் ரயிலேற நடந்து ஈரோட்டுக்குப் போய்க் கொண்டிருக்கையில் அவன் பார்வதியிடம், "நடந்தது நடந்தபடி உண்மையைச் சொல்லிவிடு அம்மா, ஜட்ஜ் ஒருவேளை இரக்கப்பட்டு உன் புருஷனை விட்டுவிடலாம்" என்றான்.

"உண்மையை எப்படிச் சொல்வது ஐயா, அது பெரிய வெட்கக்கேடாயிற்றே?" என்றாள் பார்வதி.

"வெட்கம் என்ன? அந்தமாதிரி தப்பு எத்தனையோ பேர் செய்கிறார்கள். ஒரு தடவையாவது ஏமாந்து போகாதவர்கள் அருமை. கடவுள் நம்மையெல்லாம் பராமரித்து வருகிறார். சில சமயம் நம்மைக் குற்றம் செய்ய விட்டுவிடுகிறார். அது அவர் விருப்பம்."

"எல்லாவற்றையுமா சொல்லச் சொல்கிறீர்கள்? அப்புறம் என்னைச் சாதியைவிட்டு நீக்கிவிடுவார்களே; என் புருஷன் என்னைச் சேர்த்துக்கொள்ளாது. பிறகு நான் என்ன செய்வேன்?" என்றாள் பார்வதி.

"நீ நிசம் சொன்னால் உன் புருஷனை ஆறுமாதத்தோடு விட்டுவிடுவார்கள். இல்லாவிடில், ஆறு வருஷம் போட்டுவிடுவார்கள். இதற்குமுன் இப்படி ஒரு வழக்கு நடந்தது. நீ இப்போது உன் புருஷனுக்கு உதவி செய்தால் அவன் அதற்காக உன்னிடம் நன்றி பாராட்டவேண்டும். உன்னைச் சாதியில் சேர்த்துக் கொள்ள ஏதாவது கோயிலில் நல்லது செய்துவிடக் கூடும். எப்படியானாலும் நிசம் சொல்வதுதான் எப்போதும் நல்லது."

பார்வதி மௌனமாயிருந்தாள். உண்மையைச் சொல்லும்படி அவள் உள்ளத்தில் ஏதோ ஒன்று சொல்லிற்று. ஆனால், அடுத்த நிமிஷம் வேறொரு போதனை உள்ளத்தில் கிளம்பி அதை மறைத்தது. பயமும் குழப்பமும் அவளைப் பற்றிக்கொண்டன. "ஆண்டவனே!" என்று அடிக்கடி சொல்லிக் கொண்டு நடந்தாள்.

போலீஸ்காரன் ஈரோட்டில் அவளை ரயில் ஏற்றி ஞன். பார்வதி ரயில் பிரயாணம் செய்தது அதுதான் முதல் தடவை. ஸ்டேஷனிலிருந்த ஜனக் கூட்டமும், ரயில் வண்டியின் ஓட்டமும் அவளைத் திகைப்படையச் செய்தன. தன்னுடைய வாழ்க்கையின் துயரக் குழப் பத்தில் அந்த ரயில் குழப்பமும் ஒரு பகுதி என்றே அவளுக்குத் தோன்றிற்று.

வண்டி வேகமாய் ஓடத் தொடங்கியதும், சிரித்த முகம் வாய்ந்த சிறுவன் ஒருவன் எங்கிருந்தோ தோன் றிப் பாடத் தொடங்கினன். அவன் இரண்டு கண் ணுந் தெரியாத குருடன். கந்தலுடுத்தின மற்றொரு பையனும் அவனுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு சேர்ந்து பாடினன்.

"திருட்டுப் பசங்களா? இத்தனை நேரம் எங்கே ஒளிந்திருந்தீர்கள்?" என்ருன் போலீஸ்காரன்.

பையன்கள் பாட்டை நிறுத்தாமல் குறுநகை புரிந்தார்கள். அவர்கள் பாட்டு, தேவகானம்போ லிருந்தது. சங்கீத வித்துவான்கள்கூட அப்படிப் பாட மாட்டார்கள். இந்தப் பிச்சைக்காரச் சிறுவர்கள் எங்கே, எப்படிப் பாடக் கற்றுக்கொள்கிருர்கள் என் பது யாருமறியாத மர்மம். பாட்டு முடிந்ததும், குருட்டுச் சிறுவன் கையேந்தி நிற்க, அவனைப் பிடித்து அழைத்துக்கொண்டு மற்றவன், வண்டி முழுதும் சென்ருன். வண்டியிலிருந்தவர்கள் ஒவ்வொருவரும் சர்க்கார் வரி செலுத்துவதுபோல் காசு கொடுத்தார் கள். பார்வதியும் தன் புடவைத் தலைப்பில் போட் டிருந்த முடிப்பை அவிழ்த்துக் காலணு கொடுத்தாள்.

அவள் கேட்ட பாட்டு அன்று முழுவதும் அவள் செவி யில் ஒலித்துக்கொண்டிருந்தது. அது ஏதோ உள் ளர்த்தமுள்ள பாட்டு. அவளுக்கு விளங்கவே யில்லை. ஆனால், அதில் ஓர் அடிமட்டும் குருட்டுச் சிறுவனின் பரிதாபமான குரலுடன் கலந்து அவள் மனதில் அடிக் கடி வந்துகொண்டிருந்தது.

என்ன குற்றஞ் செய்தேனோ எல்லாருங் காணமல்
அன்னை சுற்றமெல்லாம் அறியாரோ அம்புவியில்
கொன்றாரைத் தின்றேனோ தின்றாரைக் கொன்றேனோ
எண்ணாதெல் லாமெண்ணு மிச்சை மறந்தேனோ
சாதியிற் கூட்டுவரோ சமயத்தோ ரெண்ணுவரோ
பேதித்து வாழ்ந்ததெல்லாம் பேச்சுக்கிட மாச்சுதடி.

௬

## நியாயம்

சேலத்தில் பார்வதியை ஓர் ஏழைச் சாப்பாட்டுக் கடைக்குப் போலீஸ்காரன் அழைத்துச் சென்றான். அங்கே அவளுக்கு ‘ அரை ’ச் சாப்பாடு போடச் சொன்னான். கடைக்காரி பார்வதியைப் பார்த்துச் “ சேலத்திற்கு எதற்காக வந்தாய் ” என்று கேட்டாள். “என்னைக் கோர்ட்டுக்குக்கொண்டுவந்திருக்கிறார்கள்” என்று பார்வதி சொன்னதும், அவளைச் சுற்றிப் பெரிய கூட்டம் சேர்ந்துவிட்டது. அவர்கள் எல்லோரும் இலங்கைத் தேயிலைத் தோட்டங்களுக்குப் போவதற் காக வந்த கூலியாட்கள்.

செஷன்ஸ் கோர்ட்டில் பழைய கொலை வழக்கு ஒன்று நடந்துகொண்டிருந்தபடியால், அன்று கறுப்

பன் வழக்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை. மறுநாள் வழக்கு விசாரணைக்கு வந்தபோதும் சர்க்கார் வக்கீல் பார்வதியைச் சாட்சியாய்க் கூப்பிடவில்லை. அவள் சர்க்காருக்கு விரோதமாய் மாறிவிட்டாள் என்று பப்ளிக் பிராஸிகியூடர் சொன்னார்.

கறுப்பனுடைய வக்கீல், அப்படியானால் அவளைத் தம் பட்சத்துச் சாட்சியாக விசாரிப்பதாகவும், அவளை ஊருக்குப் போகாமல் நிறுத்தி வைக்கவேண்டுமென்றும் கோர்ட்டாரைக் கேட்டுக்கொண்டார். சாயங்காலம் கறுப்பனுடைய அண்ணன் அவளை வக்கீலிடம் அழைத்துப்போனான். முஸ்லிம் போலீஸ் சேவகன் வழியில் கூறியவாறே உண்மையைச் சொல்லென்று வக்கீலும் சொன்னார்.

கணவனைக் காப்பாற்ற அவளுக்கு விருப்பந்தான். ஆனால், தான் செய்ததை ஒப்புக்கொள்வதென்று எண்ணியபோது அவள் நடுநடுங்கினாள்.

" தெய்வம் எப்படி வழி காட்டுகிறதோ அப்படிச் செய்கிறேன் " என்று பார்வதி முடிவில் சொன்னாள்.

" சண்டாளி, உனக்குத் தெய்வம் வேறு உண்டா? பழஞ் செருப்பை எடுத்து அடி " என்று கறுப்பனுடைய அண்ணன் கத்தினான். அதற்கு அவள் நடுங்கி, " நீங்கள் சொல்லுகிறபடியே செய்கிறேன். பெண் பிள்ளையினால் என்ன ஆகும் ? " என்றாள்.

வக்கீல் வேண்டியது இதுதான். உடனே எல்லாரையும் போகச் சொல்லிவிட்டு அவர் கறுப்பன் அண்ணனுடன் தனிமையில் பேசிக்கொண்டிருந்தார்.

மறுநாள் பார்வதி கச்சேரிக்கு வெளியே ஒரு மரத்தடியில் மற்றும் பலருடன் வெகுநேரம் காத்திருந்தாள். கடைசியில் அவள் பெயரைச் சொல்லி யாரோ உரத்த குரலில் கூப்பிட்டான். பார்வதி திடுக்கிட்டு எழுந்தாள். "வா" என்று ஒரு சேவகன் அவளை அழைத்துச் சென்று சாட்சிக் கூண்டில் நிறுத்தினன். அங்கே அவள் பார்த்தனவெல்லாம் அவள் திகைப்பை அதிகமாக்கின. மண்டபத்தின் மேற்குக் கோடியில அவள் பார்வை சென்றபோது, அங்கே தன் புருஷன கூண்டிலடைபட்ட காட்டு மிருகம்போல் இரும்புக் கம்பிகளுக்குப் பின்னல் நின்று தன்னை விழித்துப பார்ப்பதைக் கண்டாள். அவன் தலைமயிரும் தாடி மீசையும் அதிகம் வளர்ந்துவிட்டபடியால், அவனை அடையாளங் கண்டுபிடிப்பதே கஷ்டமாயிருந்தது. ஏரைப்பிடித்து ஓட்டும் ஏழைக் குடியானவன் ஒருவனை இரண்டு மாதம் சிறையில் வைத்தால் பார்வைக்கு அவன் கொலைகாரனைப்போலவே ஆகிவிடுகிருன்.

"ஐயோ, இவ்வளவும், பாவி என்னல் வந்ததல்லவா?" என்று பார்வதி தனக்குள் சொல்லிக்கொண்டு அளவில்லாத வேதனைப்பட்டாள். தான் நின்ற இடத்தில் போட்டிருந்த கிராதியைப் பிடித்துக்கொண்டு நிற்பதுகூட அவளுக்குச் சிரமமாயிருந்தது. குமாஸ்தா திடீரென்று, "பிரமாணம் செய்!" என்று கூவியதும் அவள் தலை கிறுகிறுவென்று சுழன்றது.

"தெய்வம் சாட்சியாக நான் சத்தியமே சொல்லுகிறேன். அன்று சாயங்காலம் நான் சமையல் செய்துகொண்டிருந்தபோது—"

"நிறுத்து!" என்று குமாஸ்தா கோபமாகக் கத்தினார்.

நீதிபதி சர்க்கார் வக்கீலைப் பார்த்து, "நன்றாய் மனப் பாடம் செய்திருக்கிறாள்போலிருக்கிறது" என்றார்.

"பாதகமில்லை. சீக்கிரத்தில் மறந்துபோய்விடுவாள்!" என்றார் மறுபடியும். நீதிபதியின் பரிகாசச் சொல்லைக் கேட்டு, கோர்ட்டில் எல்லோரும் 'கொல்' என்று சிரித்தார்கள். சர்க்கார் வக்கீல் 'இடியிடி' யென்று சிரித்தார்; மற்ற வக்கீல்கள் கொஞ்சம் சாவதானமாய்ச் சிரித்தார்கள். எதிரி வக்கீல்கூடச் சிறிது புன்னகை செய்தார்.

"நான் சொல்லுகிறமாதிரி சொல்" என்று குமாஸ்தா கடுமையாகச் சொன்னார். பார்வதிக்குத் திகைப்பு இன்னும் அதிகமாயிற்று.

"இதேது, வக்கீலும் கொழுந்தனும் சொல்லிக் கொடுத்ததெல்லாம் உபயோகமில்லையோ? குமாஸ்தா சொல்லிக்கொடுப்பதைத்தான் சொல்லவேண்டுமோ?" என்று யோசிக்கலானாள்.

கடைசியில் பிரமாணம் செய்த பிறகு அவளைக் கேள்வி கேட்க ஆரம்பித்தார்கள். சில சமயம் கேள்விகளே அவளுக்கு விளங்கவில்லை. தான் சமையல்செய்து கொண்டிருந்தபோது, இஸ்மேல் வந்து தகாத காரியம் சொன்னதாகவும், தான் அதற்கிணங்கவில்லை யென்றும், இதற்குள் தன் புருஷன் உள்ளே கோபமாக ஓடி வந்து தன்மீது மண்வெட்டியை எறிந்ததாயும், தான் பயந்து ஓடியதாயும், அப்புறம் நடந்தது தெரியாதென்றும், இஸ்மேல் தலையில் இரத்தம் பெருகியவாறு ஓடியதை மட்டும் பார்த்ததாகவும் சொல்லி முடித்தாள்.

வக்கீல் வீட்டில் அவள் இம்மாதிரி சொல்லவேண்டு மென்றுதான் முடிவாகியிருந்தது.

"அடி, சண்டாளி!" என்று கறுப்பன் கைதிக் கூண்டிலிருந்து கத்தினன். தான் கருமாண்டூரிலிருந்த தாகச் சாட்சிவிடப்படுமென்று அவன் இன்னமும் நம்பியிருந்தான். அவனுடைய வக்கீல் அவனருகில் சென்று காதில் இரகசியமாக ஏதோ ஒன்று சொன்னார். இதனல் அவன் சமாதானம் அடைந்தான். விசாரணை முடிவடைந்ததும் அஸெஸர்கள், கறுப்பன் 'கொலை செய்ய முயன்ற குற்றம்' நிரூபிக்கப்படவில்லை யென்றும், 'பெரிதும் கோபம் மூட்டப்பட்ட தன்மேல் பலமாய்க் காயப்படுத்திய குற்றம்' செய்தவன் என்றும் அபிப்பிராயம் தெரிவித்தார்கள்.

நீதிபதி வழக்கை மறுநாளைக்குத் தள்ளி வைத்தார். மறுநாள் கோர்ட்டு கூடியதும் தீர்ப்புக் கூறப்பட்டது. நீதிபதி அஸெஸர்களின் அபிப்பிராயத்திலிருந்து மாறுபட்டு, கறுப்பன் 'கொலைசெய்ய முயன்ற' குற்றம் நிரூபிக்கப்பட்டதாய்க் கருதினார். காதர்கானும், இஸ்மேலும் கூறிய சாட்சியத்தை அவர் ஒப்புக் கொண்டு, அவர்கள் இருவரும் கறுப்பனிடம் தவணைப் பணம் கேட்கப் போனதாயும், குடிகாரனுகிய எதிரி, கோபங்கொண்டு மரண ஏதுவான ஆயுதத்தினல் தாக்கியதாயும், காதர்கானும் அவன் மகனும் முதலில் தற்செயலாகவும், பிறகு ஜனங்கள் வந்துவிட்டதாலுமே உயிர் பிழைத்தார்கள் என்றும் அபிப்பிராயப்பட்டார். கறுப்பனுடைய மனைவி அவனுக்குச் சாதகமாகச் சாட்சி சொல்வதே இயல்பாதலாலும், அதிலும் போலீஸார் முன்பும், மாஜிஸ்ரேட் முன்பும் அவள்

வெவ்வேறு விதமாய்ச் சொல்லியிருப்பதாலும், அவள் சாட்சியத்தைத் தாம் நம்பமுடியாதென்று குறிப்பிட்டுக் கடைசியில் கறுப்பனுக்கு ஆறு வருஷம் கடுங்காவல்தண்டனை விதித்தார். பார்வதியின்மேல் பொய்ச் சாட்சி சொன்ன குற்றத்திற்காக வழக்குத் தொடங்க அனுமதி பெறுவதைக் குறித்து யோசிக்கும்படியும் அவர் சர்க்கார் வக்கீலுக்குச் சிபார்சு செய்தார்.

கறுப்பன் தண்டனையைக் கேட்டதும், "சண்டாளி ஏமாற்றிவிட்டாள். கட்டிய பெண்சாதி துரோகம் செய்யும்போது, சாமி, நீங்கள் சொல்லுங்கள், ஆண்பிள்ளை பார்த்துக்கொண்டிருப்பதா?" என்று என்று கூவினான்.

"அவனைக் கொண்டுபோங்கள்" என்றார் நீதிபதி.

போலீஸ் சேவகர்கள் அவனைத் தள்ளிக்கொண்டு போனார்கள். "நீ சொல்லவேண்டியதையெல்லாம் எழுதி ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்யலாம், வா" என்று அவனுக்கு ஆறுதல் சொன்னார்கள்.

## ௧௦

## விடுதலை

விசாரணை முடிந்ததும், பார்வதியை அவள் பந்துக்கள் யாருமே கவனிக்கவில்லை. மிகுந்த பிரயாசையுடன் அவள் இராமாபுரம் போய்ச் சேர்ந்தாள். வயோதிகனான முஸ்லிம் கான்ஸ்டபில் அவள்மீது இரக்கங்கொண்டு திரும்புகாலையிலும் அழைத்துச் சென்றான்.

"முதலிலேயே நீ உண்மையைச் சொல்லியிருக்க வேண்டும். முதல் கோர்ட்டில் நீ நிசம் சொல்லாதபடியால்தான் உன்னை ஜட்ஜ் நம்பவில்லை. இங்கேயும் நீ உண்மை முழுவதையும் சொல்லவில்லை" என்று அவன் சொன்னான்.

அவன் வார்த்தைகள் அவள் காதில் விழுந்தன வாயினும், அவளுக்கு அவை அர்த்தமாகவேயில்லை. அவள் பிரமைகொண்டவள் போலிருந்தாள். இரவில் வெகுநேரம் கழித்து அவர்கள் இராமாபுரம் வந்து சேர்ந்தார்கள். கான்ஸ்டபில், இராத்திரி தன் வீட்டு வெளித் தாழ்வாரத்தில் படுத்திருந்துவிட்டுக் காலை எழுந்து அவள் அண்ணன் ஊருக்குப் போகலாமென்று சொன்னான்.

அவளுக்குத் தூக்கமே வரவில்லை. மறுபடியும் அண்ணியின் முகத்தில் எவ்வாறு விழிப்பது? எல்லாம் ஆகிவிட்டது. ஆண்டவனே கைவிட்டுவிட்டார். இனி இந்தத் துயர வாழ்க்கைக்கு முடிவு தேடவேண்டியது தான். உயிரை விட்டு விட்டுவதே வழி. நல்ல வேளை! கஷ்டங்களிலிருந்து தப்புவதற்கு அந்த ஒரு வழியாவது இருக்கிறதே! அதை யாரும் அபகரிக்க முடியாது.

வெகுநேரம் தூங்காமலிருந்துவிட்டுக் கடைசியில் காலை நேரத்தில் அவள் சோர்ந்து தூங்கிப் போனாள். ஆறு மணிக்கு எழுந்து வெளியே வந்த சாயபு, அவள் மெய்ம்மறந்து தூங்குவதைப் பார்த்து, "புருஷனைச் சிறைக்கு அனுப்பிவிட்டு வந்த இந்தப் பெண்பிள்ளை ஆனந்தமாய்த் தூங்குகிறாள். இந்த மோசக்கார ஸ்திரீ

களை நம்புவோர் மதியற்றவர்கள்" என்று எண்ணிக் கொண்டான்.

குழந்தை அழும் சத்தங் கேட்டு பார்வதி எழுந் திருந்தாள். தன்னுடைய குழந்தை ஏதோ வலியினால் அழுதுகொண்டிருப்பதாய் அவள் கனவு கண்டுகொண் டிருந்தாள். விழித்துக்கொண்டு, தன் குழந்தை செத்து வெகுகாலமாயிற்றென்றும், தான் இப்போது புருஷன் வீடு வாசல் எல்லாம் இழந்த அனாதை யென்றும் தெரிந்துகொள்ள அவளுக்குக் கொஞ்ச நேரம் பிடித்தது.

எழுந்து உட்கார்ந்தபோது அவள் எதிரில் கன் னங் கறேலென்று ஒரு சிறுவன் நின்றுகொண்டிருந் தான். அவன் தன் கையினால் வாயை மூடிக்கொண்டு குழந்தை அழுவதுபோல் சத்தம் செய்தான். பிறகு அதை நிறுத்திக் குழந்தையின் தாயார் பேசுவதுபோல் பேசினான். இப்படி மாற்றி மாற்றி வேடிக்கை செய்து கொண்டிருந்தவன், பார்வதி எழுந்து உட்கார்ந்ததைக் கண்டதும் "ஒரு காசுகொடு அம்மா!" என்று பிச்சை கேட்டான்.

"அப்பா, உனக்கு வீடு எங்கே?" என்றாள் பார்வதி.

"ஒரு காசு கொடு, அம்மா!" என்றான் பையன்.

"உன் தகப்பன் யார்?" என்று மறுபடியும் பார்வதி கேட்டாள்.

"தெரியாது" என்றான் சிறுவன்.

"உனக்கு அம்மா இல்லையா?"

"இருக்கிருள் ; என்னைப் பன்றிக்காரனுடன் விட்டுப்போயிருக்கிருள்."

"உனக்கு யார் சோறு போடுகிருர்கள் ?"

"நானே சம்பாதித்து நான் சாப்பிடுகிறேன். காசு சேர்த்துப் பன்றிக்காரனிடம் கொடுக்கிறேன். சில சமயம் அவன் எனக்குச் சோறு போடுவான். அப்புறம் பணம் சேர்த்துக் கொடுத்துவிடுவேன்."

"குழந்தைபோல் அழுவதற்கு எங்கே கற்றுக் கொண்டாய் ?"

"ஓ! நானும் இன்னொருவனும் தஞ்சாவூரில் கற்றுக்கொண்டோம். ஏதாவது கொடு, அம்மா. நான் பன்றிக்காரனிடம் போகவேண்டும்" என்ருன்.

இதற்குள் போலீஸ்காரன் வந்து அவனைப் பயமுறுத்தி விரட்டினன். "இவர்கள்தான் திருட்டுப் பயல்கள். இப்படி வந்து உளவு பார்த்துப் போவார்கள். பிறகு இரவில்வந்து கன்னம் வைத்துத் திருடுவார்கள். நீ நன்ருய் இரவு தூக்கிறைற்போலிருக்கிறது" என்ருன்.

"ஆண்டவன் உங்களைக் காப்பாற்ற வேண்டும். நீங்கள் எனக்குத் தகப்பனைப்போல் இருந்தீர்கள்" என்று பார்வதி சொல்லிக் கண்ணீர் வடித்தாள்.

இப்போது அவனுடைய மனம் கொஞ்சங்கூட இளகவில்லை. அவள் பாசாங்குக்காரி என்று நினைத்தான். "நீ உன் அண்ணன் ஊருக்குக் கிளம்பலாம். இப்போதே புறப்பட்டால் வெயிலுக்கு முன்னல் போய்ச் சேர்ந்துவிடுவாய்" என்ருன்.

நடுமத்தியான்னத்தில் சொல்லமுடியாத பசியுடனும் களைப்புடனும் பார்வதி அண்ணன் வீடுபோய்ச் சேர்ந்தாள். அண்ணியின் மனம் கொஞ்சம் இரங்கியிராதா, என்று அவளுக்கு இன்னும் சிறிது ஆசையிருந்தது. ஆனால், அந்தோ! அவளுக்கு முன்னதாகவே சமாசாரம் போய்விட்டது. அண்ணன் வயலுக்குப் போயிருந்தான். அண்ணி வாயிற்படியில் நின்றுகொண்டிருந்தாள்.

" சாதி கெட்டவள் வந்துவிட்டாள்! உன் நாற்ற உடம்பை இங்கே கொண்டு வராதே. புருஷனைத் தின்று துலுக்கனோடு போகிறவர்களுக்கு இங்கே சத்திரம் கட்டி வைத்திருக்கிறதா? என் வீட்டில் உட்கார்ந்து என் அசட்டுப் புருஷனின் இரத்தத்தை உறிஞ்சலாமென்று நினைக்கிறாய்? எனக்குப் பிள்ளை குட்டிகள் உண்டு. உன் சகவாசம் அவர்களுக்கு வேண்டாம். நீ யாரை ஏமாற்றினாயோ அவனிடம் போ. இங்கே இடமில்லை " என்று அவள் சரமாரியாய்ப் பொழிந்தாள்.

" அண்ணா, அண்ணா! " என்று பார்வதி கதறினாள். அண்ணன் உள்ளே இருப்பதாக அவள் நினைத்தாள்.

" பேசமாட்டாயா, நீயும் என்னைக் கைவிட்டுவிட்டாயா? இனிமேல் கடவுள்தான் எனக்குக் கதி " என்று சொல்லி விம்மி விம்மி அழுதாள். பசியாயும் களைப்பாயு மிருந்தபோதிலும், அந்த இடத்தைவிட்டு அழுதுகொண்டே போய்விட்டாள்.

வெயில் தகித்துக்கொண்டிருந்தது. ஆனால் இப்போது அவளுக்கு வெப்பம், பசி ஒன்றும் தெரியவில்லை. தாகத்தினால் வறண்ட அவள் தொண்டையும், உதடுகளும் அவளுக்குத் தெரிந்த கடவுளின் பெயர்களை உச்சரித்தன. பக்கத்துக் கிராமத்தில் ஒரு மலைக்கோயில் உண்டு. அவ்விடத்தை நோக்கிச் சென்றாள்.

மலைமேல் கொஞ்சதூரம் ஏறியதும் அவளால் ஓரடியும் நடக்க முடியாமல் போயிற்று. மூர்ச்சை போய்விடுவாள்போல் ஆகிவிட்டது. ஒரு பாறையின் நிழலில் சற்று உட்கார்ந்தாள்.

சிறிது நேரங் கழித்து மறுபடியும் எழுந்து நடந்தாள். கோயிலை அடைந்தாள். ஆனால், உள்ளே போகவில்லை. வெளியிலேயே நமஸ்காரம் செய்து பிரார்த்தித்துக் கொண்டாள். பிறகு கோயிலையும் விட உயரமாயிருந்த ஒரு பாறையின் உச்சிக்கு ஏறினாள். அதில் ஏறுவது கஷ்டமாயிருந்தது. ஆனால் அவள் புதிய பலம் பெற்றிருந்தாள். ஏறி உச்சியை அடைந்தாள். மேற்குப் புறத்து ஓரமாய் வந்து கீழே நோக்கினாள். உச்சியிலிருந்து மலையடிவரை ஒரே செங்குத்தான அகாத பள்ளம். தலை சுழல ஆரம்பித்தது. கீழே உட்கார்ந்தாள். மறுபடி எழுந்து,

" அம்மா, தாயே, காளி! என் பாவங்களையெல்லாம் மன்னித்துக்கொள், என்னை உன்னிடம் சேர்த்துக்கொள்!" என்று கதறிவிட்டு ஒரே குதியாய் மலையிலிருந்து குதித்தாள்.

ஆகா! ஒரு கணநேரத்திற்குள் என்ன ஆனந்தம்! என்ன நிம்மதி! பூமியும் ஆகாயமும் மாறிச் சுழன்றன. ஆகா! எவ்வளவு குளிர்ச்சி, எவ்வளவு இன்பம்! பின்னர் அதற்குமுன் அவள் எப்போதும் கேட்டிராத பெரிய வெடிச் சத்தம் தலையில் படாரென்று வெடித்தது. அப்புறம், முடிவில்லாத மௌனக் கடலில் மூழ்கிப் போனாள். திக்கற்ற பார்வதியின் உயிர் துயரக் கூட்டினின்றும் தப்பிப் பறந்து சென்றது.

# கர்நாடக விஜயம்

---

சப் கலெக்டர் சீதாராமனுக்குச் சம்பளம் ஆயிரத்து இருநூறு ரூபாய். ஆனாலும் குடும்ப வாழ்க்கை மிகவும் சிக்கனமாக நடந்து வந்தது. சிக்கனம் ஏன், 'திராபை' என்றே ஊரிலுள்ள மற்ற உத்தியோகஸ்தர் முதலியவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டு ஏளனம் செய்வார்கள்.

புருஷனும் மனைவியும் அத்தியந்த அன்புடன் வாழ்க்கை நடத்தினார்கள். ஆனால் ஒரு விஷயம் ரகசியமாகவே இருந்தது. மாதம் தவறாமல் சம்பளம் வாங்கினவுடன் எஜமானர் சீமைக்கு ரூ. 900 அனுப்பி விடுகிறாரே, இதற்குக் காரணம் என்ன வென்று மனைவியால் தெரிந்துகொள்ள முடியவில்லை. முதலில் ஏதோ, சீமையில் நல்ல பாங்கியில் பணம் வைத்து வருகிறார் என்று எண்ணிச் சந்தோஷப்பட் டாள். பிறகு அவ்வாறு இருக்காது என்று தெரிந்து கொண்டாள். பணம் சேர்த்து வைக்கும் சிக்கனத் திற்கும் கட்டாயச் சிக்கனத்திற்கும் ரொம்ப வித்தியா

சம். தினசரி நடவடிக்கையிலும் மனநிலைகளிலும் இது நன்முக வெளிப்படையாகிவிடும்.

ஒரு நாள் மனைவியிடம், சீமையில் தான் ஏதோ கடன்பட்டுவிட்டதாகவும் அதைத் தீர்ப்பதற்காக இவ்விதம் மாதந்தோறும் பணம் அனுப்புவதாகவும் சீதாராமன் சொன்னுன். எல்லாச் செலவுகளுக்கும் ஊரிலிருந்து பணம் அனுப்பி வந்திருக்க, இம்மாதிரி கடன்படுவதற்குக் காரணம் என்னவென்பது மனைவிக்கு விளங்கவில்லை. ஆயினும் எஜமானர் பேச்சை நம்பாமல் கேள்விகள் அதிகமாகக் கேட்க இயலாது. அதைப்பற்றிப் பேச்சு எடுத்தால் பேச்சை மெள்ள மாற்றிவிட்டு வேறு விஷயத்திற்குப் போய்விடுவான். சீமை வாழ்க்கையைப்பற்றிப் பலர் பேசிக்கொள்வதைக் கேட்டுச் சில சமயம் மனைவிக்குப் பல சந்தேகங்களும் தோன்றும். ஆனால் சீதாராமன் அவளிடம் காட்டிவரும் அன்பானது அந்தப் புகைச்சலை எல்லாம் உடனே ஓட்டிவிடும். 'எது எவ்வாருனாலும் அதைப் பற்றி எனக்கு என்ன? சம்பளமே ரூ. 300 என்று வைத்துக்கொள்வோமே' என்று இவ்வாறு மனத்தைச் சாந்தப்படுத்திக் கொள்வாள். பாரத நாட்டுப் பதி விரதா தர்மத்தின் சக்தி இதுவே.

* * * *

மாமனுர் பணத்தைக்கொண்டுதான் சீதாராமன் சீமைக்குப் போய் அங்கே மூன்று வருஷம் இருந்து ஐ. ஸி. எஸ். தேறினது. இவன் சீமைக்குப் போகும் போது மனைவி சுந்தரிக்கு வயது பத்தொன்பது. ரொம்ப லக்ஷணமான பெண். ஆனால் பழைய காலத்து நகைகள் போட்டுக்கொண்டு பழைய காலத்து உடை உடுத்து

வந்தாள். அது புருஷனுக்குத் திருப்தி தரும் என்று அவள் எண்ணம். ஒரு புதிய நகை வாங்கி மாட்டிக் கொண்டால் முகத்திற்கு ஒரு புது அழகு சம்பாதித்து விட்டதாக அவளும் அவள் தாயும் நம்பினார்கள். சீதா ராமனோ, பாவம்! தன் மனைவி இந்த மூக்குப் பொட்டும், பெரிய காதுத் தோடுகளும் இல்லாமல், லேசான வளையல்மட்டும் கைக்குப் போட்டுக்கொண்டு வேறு ஆபரணங்களில்லாமல், லேசான புடவை, தொங்குக் கொசாம் இல்லாமல் நாகரிகமாக உடுத்து, இந்தக் கோரமான பட்டுக்கரை முழங்கை ரவிக்கைக்குப் பதில் கொஞ்சம் குறைவாகவே ஏதாவது தைத்துப் போட்டுக்கொண்டால் நன்றாயிருக்குமே என்று எண்ணி எண்ணி வருந்துவான். அவனும் உண்மையில் ஒரு பழைய காலத்து ஆசாமிதான். மனதில் தோன்றும் எண்ணங்களை மனைவியிடம் சொல்லக் கூச்சம்; சொன்னாலும், 'இந்தப் பழைய பட்டவர்த்தனங்கள் எங்கே கேட்கப் போகிறார்கள்?' என்று தன் எண ணங்களை மனதிலேயே புகைந்துகொண் டிருக்கவிட்டான். சினிமாவுக்குப் போவான். அங்கே பார்ப்பான்: படத்தில் வரும் ஸ்திரீகளைப் பார்ப்பான். படம் பார்க்க வரும் உள்ளூர்ப் பெண்மணிகளையும் பார்ப் பான். பார்த்துப் பெருமூச்சு விடுவான். 'எல்லாரும் தங்கள் தங்கள் அழகை எவ்விதம் எடுத்துக் காட்டக் கூடும் என்பதை அறிந்திருக்கிறார்களே, நம் மனைவிக்கு மட்டும் ஒன்றும் இந்த விஷயம் தெரியவில்லையே!' என்று வருத்தப்படுவான். சரி, சீமைக்குப் போய்த் திரும்பி வந்ததும் எல்லாம் சரிப்படுத்திவிடலாம் என்று விஷயத்தை ஒத்திப்போட்டு மனதைச் சாந் தப் படுத்திக்கொண்டான்.

* * *

சீதாராமன் சீமைக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கே எந்தப் பக்கம் திரும்பினாலும் நாகரிகம். ஆகா! என்ன உடலழகு! என்ன உடையழகு! என்ன முக மலர்ச்சி! என்ன அந்தம்! என்ன நடையழகு! பேச்சோ, அமிழ்தமே என்று சொன்னால் மிகை யாகாது. எல்லாம் ஒரு தேவலோகமாகவே அவனுக் குத் தோன்றிற்று.

சில நாட்களுக்குள் அந்தத் தேவலோகத்தில் ஓர் அப்ஸரஸ் அவனிடம் நெருங்கிப் பழகலானாள். 'ஆகா! இத்தகைய ஒரு பெண்ணுடன் வெறுமனே பேசிக்கொண்டிருந்தாலுமே போதும். விவாகம் என் னத்திற்கு, குடும்பம் என்னத்திற்கு?' என்று அடிக் கடி எண்ணுவான். அவளை விட்டுப் பிரிந்தால் துக் கத்தில் மூழ்குவான். ஊரில் விட்டுவந்த மனைவி சுந்தரியை நினைத்து வெறுப்புக்கொள்ளவும் ஆரம் பித்தான்.

* * * *

ஒரு துரதிருஷ்ட நாள் வந்துசேர்ந்தது. அன்று அப்ஸரஸின் மாயவலையின் வீச்சு வலுத்திருந்தது. சீதாராமன் அவளை விவாகம் செய்துகொள்வதென்று தீர்மானித்துவிட்டான். இருவரும் ஒப்புக்கொண்டு மூன்று வாரத்திற்குள் காரியமும் முடிந்தது. சீமை யில் விவாகம் அரைமணியில் செய்து தீர்த்துவிடச் சௌகரியங்கள் உண்டு. தான் விவாகம் ஆகாத பிரம்ம சாரி என்று முதல் முதலில் அப்ஸரஸிடம் சம்பா ஷணை உற்சாகத்தில் சொன்ன பொய்யைப் பிறகு மாற்ற இயலாமலே விஷயங்கள் நடைபெற்றன. அந் தப் பொய் விவாகப் பதிவு அதிகாரியிடமும் சொல்லப்

பட்டது. அந்த உறுதிமொழியின்பேரில் விவாகம் பதிவாயிற்று. சீமையில், ஒரு மனைவி இருக்க மற்றொரு விவாகம் பதிவு செய்துகொள்ள முடியாது. ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே சட்டந்தான் அங்கே.

*   *   *   *

சீதாராமனும் அப்ஸரஸும் புருஷன் மனைவியாக வாழ்வது, சௌகரியக் குறைவுகளால் சில நாள் தடைப்பட்டது. பிறகு ஏதோ காரணம் சொல்லி, ஊரிலிருந்து கொஞ்சம் அதிகமாகப் பணம் தருவிக்கலானான். மாமனார்தான் அனுப்பினார். அதன்மேல் இருவரும் சேர்ந்து வாழ ஆரம்பித்தார்கள். அப்ஸரஸின் குணம் கொஞ்சம் மாறிவருவதாக அவனுக்குத் தோன்றிற்று. முன்பெல்லாம் காட்டிய சாந்தமும் வினயமும் கொஞ்சங் கொஞ்சமாய்க் குறைந்து, கரட்டுப் பான்மையாக முடிந்தது. 'சுந்தரியே தேவலை' என்றுகூட ஒருநாள் தோன்றிவிட்டது.

உதடுகளின் அழகிய நிறம் அவ்வப்போது போடும் பூச்சுத்தான் என்று சில நாட்களிலேயே தெரிந்தது. வர்ணம் பூசாதபோது ரொம்பக் கேவலமாகத்தான் இருந்தது ; வயசே மாறினாற்போல் இருந்தது. சீதாராமனுக்குச் சுந்தரியின் வாயும் உதடும் நினைவுக்கு வரும். ஆயிரம் மடங்கு அழகாக இருந்ததே என்றும் எண்ணலானான். பிறகு ஒருநாள் அப்ஸரஸின் தலைமயிர் பொய்மயிர் என்பது வியக்தமாயிற்று. அன்று சீதாராமன் பட்ட நரகவேதனை, நரகத்தில் இருப்பவர்களுக்குத்தான் தெரியும். தலைமயிர் மட்டுமல்ல, கண் புருவமும் வெறும் கறுப்புப் பூச்சாக முடிந்தது. ஒரு மாதம் கழித்து அப்ஸரஸின் முத்துப்போல் மின்னின

பற்கள் இருவரிசையும் தனியாகப் பெட்டியில் பத்திர மாய்க் காப்பாற்றப்பட்டிருப்பதையும் கண்டான்.

* * * *

இதனுடன் சீதாராமனுடைய பொறுமை முடிந்து விட்டது. கழுத்துக்குச் சுருக்குப் போட்டுக்கொண்டு உயிர் விடுவதே மேல் என்று முடிவு செய்தான்.

நாற்காலியில் சாய்ந்து தன்னைத்தானே பழித்துக் கொண்டு, ஊரையும் தெய்வத்தையும் எண்ணியவாறு கண்ணை மூடித் தியானத்தில் மூழ்கினன். தன் குழந் தைப் பருவத்து வாழ்க்கை எல்லாம் திடீரென்று நினை வுக்கு வந்தது. இறந்துபோன தன் தாய் பக்கத்தில் வந்து நிற்பதுபோல் காட்சி கண்டான். பிறகு, மனைவி சுந்தரி உமாதேவியைப்போல் ஊரில் தனக்காகத் தவம் செய்து காத்துக்கொண்டிருக்கும் மனக்காட்சியைக் கண்டான். தற்கொலை செய்துகொள்ளத் தீர்மானித் தவர்களுக்கு இவ்வாறெல்லாம் காட்சிகள் தோன் றும். சீதாராமன் கண்களில் நீர் ததும்பிற்று. அடுத் தாற்போல் அப்ஸரஸின் பொய்ப்பல் வரிசை இரண் டும், முகமும் உதடுமின்றி உடல்கொண்ட தனி உயிர் போல் காட்சி தந்தன. அந்த எலும்புப் பேய் தன் மடத்தனத்தைப் பரிகசித்து இளிப்பதுபோலவுங் கண் டான்.

"சீ! இந்த ஆபாசத்துக்காகவா நான் உயிர் துறப் பது? சுந்தரியைக் குழியில் தள்ளிவிடவா பார்த்தேன்? என்ன பெரும் பிழை செய்ய இருந்தேன்!" என்று வருந்தித் தற்கொலை எண்ணத்தை விட்டான். நாற்

காலியை விட்டு எழுந்து உடுப்புப் போட்டுக்கொண்டு வெளியே கிளம்பினான்.

* * * *

சிலநாட்கள் அலைந்து கஷ்டப்பட்டு, தான் இந்தியாவில் படித்த பாதிரிமார் நடத்திவந்த பள்ளிக்கூடத்து உபாத்தியாயராகிய கிழவர் ஒருவரைப் பிடித்து அவர் அனுதாபத்தைச் சம்பாதித்தான். அவரிடம் மறைக்காமல் விஷயமெல்லாம் சொல்லி அழுதான். அவரும் தம் பழைய மாணவன்மேல் இரக்கங்கொண்டு அவன் சிக்கிக்கொண்ட வலையினின்று அவனை மீட்க முயற்சி செய்தார். பிறகு, அப்ஸரஸிடம் பேசி ஒரு சமாதான ஒப்பந்தம் முடிவு செய்தார். பரிக்ஷை தேறி வேலையில் அமர்ந்ததும் தான் பெறும் சம்பளத்தில் அப்ஸரஸுக்கு ஒரு பெரும்பகுதி மாதந்தோறும் அனுப்புவதாக வீதாசாரத் திட்டம் ஒன்றை ஒப்புக்கொண்டு, எப்படியோ தப்பினால் போதும் என்று ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டான். பொய் உறுதிமொழி தந்ததற்குச் சிறைச்சாலை புகாமல் தப்பினதே அதிருஷ்டம் என்று எண்ணினான்.

* * * *

பிறகு கஷ்டப்பட்டு ஐ. ஸி. எஸ்ஸும் தேறிவிட்டான். கப்பலேறி ஊருக்கு வந்து சேர்ந்தான். இந்தியத் தரையில் கால் வைத்ததும், தாய்மடியில் குழந்தை அமர்ந்த மகிழ்ச்சியை அடைந்தான். இந்த உணர்ச்சி சீமையிலிருந்து திரும்பி வருபவர்கள் எல்லாருக்குமே மனதில் உண்டாகும். ஆனால், சீதாராமனுடைய மகிழ்ச்சி, இந்தச் சம்பவங்களினால் தனி வேகம் கொண்

டதாயிருந்தது. ஊர் வந்து சேர்ந்து, சுந்தரியைக் கண்டதும் நாட்டு வழக்கமெல்லாம் மறந்து எல்லார் எதிரிலும் அவளைக் கட்டியணைத்துக்கொண்டான். கர்நாடக உடையும் ஆபரணமும் அவன் கண்ணுக்கு இப்போது உண்மையழகு வீசின. தண்ணீரில் மூழ்கித் தத்தளித்தவன் கரையடைந்து கெட்டித் தரைமேல் நிற்கும் உணர்ச்சியும் மகிழ்ச்சியும் சீதாராமனுக்கு இப்போது தந்தன, இந்தக் கொசாம் வைத்து உடுத்திய புடைவையும் முழங்கை ரவிக்கையும்! சுந்தரியின் சௌந்தரியமும் நாகரிகமும் அவனுக்கு இப்பொழுதுதான் புலப்பட்டன. பணம் நஷ்டமானாலும் அன்பு உதயமாயிற்று. வாழ்க்கைக்கு வேறு என்ன வேண்டும்?

# தேவானை

க

இராமநாதய்யரும் அவர் மனைவி சீதாலக்ஷ்மியும் தங்கள் மோட்டார் வண்டியில் சைனா பஜாருக்குப் போய்ச் சில சாமான்கள் வாங்கிக்கொண்டு, பக்கத்திலிருந்த சிற்றுண்டிச்சாலையில் பலகாரம் சாப்பிட்டுவிட்டு, மறுபடியும் வண்டியில் ஏறிக்கொண்டார்கள்.

"கடலோரம் போகலாமா?" என்றார் இராமநாதய்யர்.

"பீச்சுக்கா? ஜனக்கூட்டமில்லாத இடத்தில போய் வண்டியை நிறுத்தச் சொல்லுங்கள். கூட்டத்தைக் கண்டால் எனக்குப் பிடிக்கவேயில்லை. அதோ, 'டாய்ஸ்' விற்கிறான். ஏதாவது இரண்டு வாங்குங்கள். குழந்தைக்குக் கொண்டு போகலாம்."

சீதாலக்ஷ்மி இதைச்சொல்லி முடிப்பதற்குள் அவள் எண்ணத்தைப் பொம்மை வியாபாரி எப்படியோ அறிந்துகொண்டு வண்டியண்டை வந்தான். வண்டியிலிருந்துகொண்டே விலைகேட்டுச் சாமான்கள் பொறுக்

கிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்போது மற்றொரு கதவண்டை ஒரு வாலிபப் பெண், பிச்சைக்காரி, ஒரு சிறு குழந்தையைக் கையில் எடுத்துக் காட்டிக் கொண்டு, "ஐயா, தருமங் கொடுங்கள். பச்சைக் குழந்தையைப் பார், அம்மா!" என்றாள்.

"எல்லாம் ஜப்பான் 'டாய்ஸ்'தானே?" என்று கேட்டார் இராமநாதய்யர்.

"ஜப்பான்தான், வேறு ஏது? நம்ம ஊரில் இதெல்லாம் செய்வார்களா?" என்றான் வியாபாரி.

பிச்சைக்காரி மறுபடியும் கெஞ்சினாள்.

"வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது இதென்ன சனியன்! இந்தப் பட்டணத்தில் பிச்சைக்காரர்கள் தொல்லை ஜாஸ்தியாய்ப் போய்விட்டது" என்றாள் சீதாலக்ஷ்மி.

"பசிக்கிறதம்மா, கண்ணெடுத்துப் பாரம்மா, நீ மகராசியா யிருக்கணும்!" என்றாள் பிச்சைக்காரி.

"போகிறாயா, போலீஸ்காரனைக் கூப்பிடச் சொல்லட்டுமா?" என்று அதட்டினாள் சீதாலக்ஷ்மி.

"பாலில்லாமல் தவிக்கிறது, அம்மா! ஒரு அணா பிச்சை போடுங்கள், அம்மா! எவ்வளவோ செலவழிக்கிறீர்கள் ராஜா!"

விலைதீர்த்து வாங்கிய சாமான்களை வண்டியில் எடுத்து வைத்துக்கொண்டு, "ஓட்டு வண்டியை, பீச்சுக்குப் போ!" என்றார் இராமநாதய்யர்.

மோட்டாரோட்டி, பிச்சைக்காரியை விலகச் சொல்லிவிட்டு, வண்டியை ஓட்டினான்.

"ஐயா, ஐயா!" என்று பிச்சைக்காரி கொஞ்ச தூரம் வண்டியைப் பிடித்துக்கொண்டு ஓடினாள்.

"ஓடாதே, செத்துப் போவாய்!" என்றார் இராமநாதய்யர். அப்போது பிச்சைக்காரியின் முகத்தைப் பார்த்தார். எங்கேயோ முன்னே பார்த்த மாதிரி தோன்றிற்று.

வண்டி வேகமாய்ச் சென்றதும், "ஐயோ, பாவம்! சிறு பெண். முகத்தைப் பார்த்தால் நம் ஊர்க்காரி போல் தோன்றுகிறது" என்றார்.

சீதாலக்ஷ்மி, "எந்த ஊரோ, சனியனோ, அவளைப் பற்றி நமக்கென்ன? கொடுங்கள் பார்ப்போம், அதென்ன புதிதாக இருக்கிறது, ஏரோப்ளேனா? சாவி கொடுப்பதா, அல்லது வெறும் பொம்மையா?" என்று விளையாட்டுச் சாமான்களை யெல்லாம் ஒன்றொன்றாகப் பார்த்துக்கொண்டே கடலோரம் போனார்கள்.

உ

சேலத்தில் பொன்னம்மாப்பேட்டை பெரியண்ண முதலித் தெருவில் ஓர் ஏழைத் தறிகாரர் குடும்பம்; வையாபுரிக்கு முப்பது வயது. அவன் தங்கை தேவானைக்கு இருபது வயது. விவாகமாகவில்லை; தாயார் பழனியம்மாள். மூவரும் தங்கள் பரம்பரைத் தொழிலான கைத்தறியைக் கொண்டு கஷ்ட ஜீவனம் நடத்தி வந்தார்கள். நாள் முழுவதும் மூவரும் உழைத்து வாரம் ஒன்றுக்கு நான்கு ரூபாய் சம்பாதித்து வந்தார்கள்.

வரவரக் கைத்தறி நெசவு வியாபாரம் குன்றிப் போய்க் கூலி குறைந்து கொண்டே வந்தது. பிறகு குறைந்த கூலியுங்கூட இல்லாமல் பலர் தவித்தார்கள். சேலத்தில் பல தறிகளுடன் வையாபுரியின் தறியும் சும்மா கிடந்தது. தேவானை இரண்டு பிராமண உத்தியோகஸ்தர்கள் வீட்டில் வாசல் பெருக்கி, சாணி தெளித்துச் சில்லரைக் காரியம் செய்ய அமர்ந்தாள். அதில் மாதம் மூன்று ரூபாய் வந்தது. தாயார் பழனியம்மாளும் இன்னொரு வீட்டில் காலையில் கூட்டிச் சாணி தெளித்து ஒரு ரூபாய் சம்பாதித்தாள். வையாபுரி, நெசவு முதலாளிகளிடம் வேலைக்காக அலைந்து அலைந்து திரிந்தான். ஓரிடத்திலும் வேலை கிடைக்காமல் சில நாட்கள் சென்றபின், வையாபுரி தன் தாயாரிடம் சொல்லிவிட்டுப் பெங்களூருக்குப் போய்விட்டான். அவ்விடம் ஏதாவது ஆலையில் வேலை பார்ப்போம் என்று சேலத்திலிருந்து அவனும் இன்னும் சில முதலிமார்களும் போனார்கள்.

போய்ச் சில நாட்கள் அலைந்து, வையாபுரி ஒரு மில்லில் சேர்ந்ததாகக் கடிதம் எழுதினான். வையாபுரிக்கு எழுதப் படிக்கக் கொஞ்சம் தெரியும். சிறு வயதில் அவன் தகப்பனார் அவனைப் பொன்னம்மாப் பேட்டை முனிசிபல் பள்ளிக்கூடத்தில் போட்டிருந்தார். அந்தக் காலத்தில் நெசவுக்காரர்கள் வாழ்வு அவ்வளவு கஷ்டமாக இருக்கவில்லை.

" மிகவும் கஷ்டப்பட்டு யார் யாருக்கோ லஞ்சம் கொடுத்து ஒரு மில்லில் சேர்ந்தேன். தினம் எட்டணா கூலி ; மாதத்தில் இருபத்தாறு நாள் வேலை. ஆகை

யால் பதிமூன்று ரூபாய் வரும். இந்த மாதச் சம்பளம், சாப்பாட்டுச் செலவுக்கும் கடன் பட்டதற்கும் செல வாகிவிடும். பிறகு உங்களுக்கு மாதம் இரண்டு ரூபாய் அனுப்ப முடியும். ஆண்டவன் இருக்கிறான்'' என்று வையாபுரி எழுதியதைப் பக்கத்து வீட்டு மாரி யப்பமுதலி மகன் படித்துச் சொன்னான். கிழவிக்கும் தேவானைக்கும் உண்டானமகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

* * * *

பத்து நாளுக்குப் பிறகு இன்னொரு கடிதம் வந்தது.

"அம்மாவுக்குத் திக்கு நோக்கிச் சாஷ்டாங்க நமஸ்காரம். நான் இங்கே ஆண்டவன் அருளால் க்ஷேமம். நீயும் தேவானையும் சுகம் என்று நம்பு கிறேன். எனக்கு இந்த ஆலையில் வேலை செய்வது பிடிக்கவேயில்லை. வீட்டில் தறியண்டை உட்கார்ந்து வேலை செய்த நாட்களை நினைத்துக் கண்ணில் தண் ணீர் வருகிறது. இங்கே எனக்குப் பைத்தியம் பிடித் தாப்போலிருக்கிறது. தலை கிறுகிறு என்கிறது. என் மன வருத்தமும் பல தொல்லைகளும் சொல்ல முடியாது. ஊரைவிட்டு ஏன் வந்தேனோ என்று தோன்றுகிறது. பக்கத்து வீட்டுப் பையனைக்கொண்டு கடிதம் எழுதமுடியுமானால் எழுதவும். மல்லேசுவரம், கூலி லைனில், சேலம் பொன்னம்மாப் பேட்டை வையா புரி முதலி என்று எழுதவும்.''

ரு

தேவானை சாணி தெளித்துப் பெருக்கி வந்த வீடுகளில் ஒன்று, பென்ஷன் உத்தியோகஸ்தர் வீடு.

அவர் மனைவி நல்லவள். வேலை வாங்குவதில் கொஞ்சம் கொடுமையான போதிலும், மற்ற விஷயங்களில் அன்பாகத்தான் நடத்தி வந்தாள். பழைய புடைவை ஒன்று கொடுத்தாள். சமையல் செய்ததில் மிச்சமானல் அவ்வப்போது கொஞ்சம் சாதமும் குழம்பும் கிடைக்கும். இப்படிச் சில நாட்கள் கழிந்தன.

இதைத் தெய்வம் பொறுக்கவில்லை போலும்! அந்த வீட்டில் வேலை செய்துவந்த சமையற்காரன், தேவானைக்கு மிச்சமான உணவு பதார்த்தங்கள் கொடுத்து வந்தவன், அவளிடம் விளையாட்டாகப் பேசுவான். பிறகு ஒரு நாள் அவன் அக்கிரமமாக நடந்துகொண்டான்.

தேவானைக்கு அடங்காத கோபம் வந்தது. ஆனல் யாரிடத்திலும் சொல்ல வெட்கப்பட்டாள். "எங்கேயும் சொல்லாதே. உனக்கு மாதம் இரண்டு ரூபாய் தருவேன்" என்று அந்த அயோக்கியன் வற்புறுத்தினன்.

வருத்தத்தை அடக்கிக்கொண்டு தேவானை வீட்டுக்குப் போய்த் தாயாரிடம், "நான் அந்த வேப்ப மரத்துவீட்டில் வேலை செய்யமுடியாதம்மா" என்ருள்.

ஏன் என்று விசாரிக்க, தேவானை வெட்கப்பட்டு மிகவும் வருத்தத்துடன் நடந்ததைச் சொன்னுள். கிழவி, "நான் அந்த வீட்டு எஜமானியிடம் சொல்லுகிறேன்" என்று கிளம்பினுள்.

"வேண்டாம், அம்மா. அவர்களிடம் சொல்லி என்ன பயன்? நான் மறுபடி அங்கே வேலை செய்ய முடியாது" என்ருள்.

வேறு இடத்தில் வேலைக்காகப் பார்த்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் யாராவது ஒருத்தி வேலைக்கு இருந்தே வந்தாள். இரண்டு மாதம் அலைந்த பிறகு ஒரு வீட்டில் வேலை கிடைத்தது.

* * * *

ஆறு மாதங்கள் கழிந்தன. பெங்களூரில் வையாபுரி இருந்த ஆலையில் ஒரு வேலை நிறுத்தம் ஏற்பட்டது. ஒரு மேஸ்திரியைத் துரை அடித்துவிட்டார். அதன்மேல் அவனையும் வேறு சில கூலிகளையும் வேலையிலிருந்து நீக்கிவிட்டார்கள். இதன் காரணமாகத் தொழிலாளர்கள் யூனியன் கூட்டம் கூட்டி அந்த மாதக்கூலி வாங்கினதும் வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள். வையாபுரியும் இதில் சேரவேண்டியதாயிற்று.

ஒரு மாதகாலம் இது நடந்தது. தொழிலாளர் பல கூட்டங்கள் கூடிக்கூடிக் கிளர்ச்சி செய்தார்கள். முதலில் உற்சாகம் அதிகமாயிருந்தது. பிறகு கையிலிருந்த காசு செலவாய்ப் போனதும் உற்சாகம் குறைந்தது. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் சிலர் சமாதானம் செய்தார்கள். எல்லாரும் மறுபடியும் ஆலைக்குப் போனார்கள். ஒரு வாரத்திற்குப்பின் இருபத்தைந்து பேரை வேலையிலிருந்து நீக்கிவிட்டதாகவும், ஆலைக்குள் வரக்கூடாதென்றும் 'கேட்' டில் விளம்பரம் போட்டுத் தடுத்துவிட்டார்கள். அந்த இருபத்தைந்து பேரில் வையாபுரி ஒருவன்.

"நான் ஒரு பாதகமும் அறியேன்; நான் புதிதாக வந்தவன்; நான் எதிலும் சேரவில்லையே" என்று

வையாபுரி தன்னுடைய மேஸ்திரியிடம் சொல்லிக் கொண்டான்.

"பெரிய துரை உத்தரவு. அந்தப் படுபாவி 'டயம் கீப்பர்' ரங்கசாமி நாயக்கன் செய்த வேலே; உன் பெயரையும் சேர்த்துத் துரைக்குக் கொடுத்து விட்டான். நான் ஒன்றும் செய்ய முடியாது" என்று மேஸ்திரி சொல்லிவிட்டான்.

ரங்கசாமி நாயக்கனிடம் போய்க் கெஞ்சினுன். அவன், "எனக்கு ஒன்றும் தெரியாது. சம்பளப் பட்டு வாடா குமாஸ்தா ஐயர் செய்தது" என்ருன். யாரி டம் அலேந்து கெஞ்சினுலும் பயனில்லாமல் போய்விட் டது. "நீ எழுதப் படிக்கத் தெரிந்தவன். மற்றவர் களுக்குத் தூண்டுதல் செய்தவன். உன்னே எடுத்துக் கொள்ள முடியாது" என்று மானேஜர் சொல்லி விட்டார்.

* * * *

பல நாட்கள் அலேந்து கையில் இருந்த காசு முழு வதும் செலவாகி மிகவும் கஷ்டப்பட்டு வையாபுரி சென்னே போய்ச் சேர்ந்தான். அவனேப்போலவே நீக்கப்பட்டவர்கள், இன்னும் பத்து ஆலேத் தொழி லாளர்கள், அவன் கூடவே சென்னேயில் வேலே தேடப்போனுர்கள். சோற்றுக்குத் தங்களில் சிலரிட மிருந்த பணத்தை எல்லோரும் கடனுகப் பங்கு போட்டுக்கொண்டு, எட்டுநாள் ஆலே ஆலேயாகச் சுற்றித் திரிந்தார்கள். வையாபுரிக்கு ஒரு மில்லில் வேலே கிடைத்தது.

'கேட்'டில் நிற்கும் ஆளுக்கும் சில்லறை உத்தி யோகஸ்தர்களுக்கும் கொடுக்கவேண்டிய மாமூல்

களுக்கு ஐந்து ரூபாய் வேண்டியிருந்தது. இதற்காகவும் சாப்பாட்டுச் செலவு முதலிய கடன் தீர்க்கவும், தன் காதிலணிந்திருந்த பொன் திருகுகளை ஒருவனிடம் அடகு வைத்துப் பணம் வாங்கினான் வையாபுரி. சென்னை மில்லில் அமர்ந்த சில நாட்களுக்கெல்லாம் கஷ்டத்தை மறக்கக் கள் குடிக்க ஆரம்பித்துவிட்டான். சேலத்தில் அவனுக்கு இந்தப் பழக்கமில்லை. பிறகு சூதாட்டத்தில் சம்பாதிக்கலாம் என்று சில தோழர்கள் அவனுக்கு வழிகாட்டி, அந்தப் பழக்கமும் ஏற்பட்டது. சம்பாதிக்கும் கூலியில் சாப்பாட்டுச் செலவு, குடிசை வாடகை முதலியவை போக, மிச்சமானது ஊருக்கு அனுப்பவேண்டியதற்குப் பதில், இம்மாதிரிப் பலவிதத்தில் செலவாயிற்று. பட்டாணியானிடம் கடனும் ஏறிற்று. இந்தக் கஷ்டங்களை யெல்லாம் பொறுக்க முடியாமல், இன்னும் அதிகமாய்க் குடிக்கலானான்.

முதலில் ஏதோ சாக்குப் போக்குகள் சொல்லி, பிறகு தன்னால் ஏதும் அனுப்பமுடியாது, வேண்டுமானால் தேவானையும் சென்னைக்கு வந்து ஒரு ஆலையில் வேலையில் சேரலாம் என்று எழுதிவிட்டான். அந்தக் கடிதத்தைப் பார்த்துத் தேவானைக்கும் பழனியம்மாளுக்கும் உள்ளம் துடித்தது.

பல நாட்கள் பொறுத்துப் பிறகு ஒருநாள், "ஏனம்மா நானும் பட்டணம் போகலாகாது? வையாபுரியுடன் நானும் உழைத்து ஏதாவது சம்பாதித்து உனக்கு அனுப்புகிறேன். பட்டணத்தில் அனேகம் பேர் பெண் பிள்ளைகள் ஆலையில் வேலை செய்கிறார்களாமே?" என்றாள் தேவானை.

தாயார் முதலில் சம்மதிக்கவில்லை. " அது எங்கே யாவது உண்டா? அறியாப்பிள்ளை அங்கெல்லாம் போகவா ?" என்றாள். சில நாள் இப்படியே வாதாடி, பிறகு கிழவியும் சம்மதித்தாள். பக்கத்து வீட்டு மாரப்பனிடம் தன் காதிலிருந்த பொன்னோலைகளை அடகுவைத்து, ரூபாய் பன்னிரண்டு கடன் வாங்கி, தேவானை சென்னைக்குப் புறப்பட்டாள்.

ச

சென்னையில் வையாபுரி தேவானையை ஒரு மில்லில் நூல் நூற்கும் 'டிபார்ட்மெண்'டில் சேர்த்து வைத்தான். வையாபுரி இருந்த ஆலை வேறு, இது வேறு. இவளைப்போல் இன்னும் சுமார் நூற்றைம்பது பெண்கள், சிறியவர்களும் பெரியவர்களும், அந்த ஆலையில் வேலை செய்து வந்தார்கள். தேவானைக்கும் அவளுடன் பத்துப் பேர்களுக்கும் மேல் ஒரு "ஜாபர்". இவன் தேவானையை முதலில் மிகப் பிரியமாக நடத்தினான். பிறகு வேலையில் அதட்ட ஆரம்பித்தான். திட்டுவதும் உண்டு. தனியாகக் கண்ட காலத்தில் காரணமில்லாமல் மிகுந்த சல்லாபமாய்ப் பேசுவான்.

" இதென்ன, இவர் இம்மாதிரி செய்கிறார்?" என்று தன்னுடன் வேலை செய்துவந்த ஒருத்தியைக் கேட்டாள் தேவானை. அவள் சிரித்து, " உனக்கு இது தெரியாதா? நீ பாவம், நாட்டுப்புறம். அவரிடம் சரி யாக நடந்துகொள்ளாமற் போனால் சம்பளத்தில் பாதிக்குமேல் அபராதமாகவே பிடித்தம் ஏற்படும். அவர் சந்தோஷமா யிருந்தால், பல சௌகரியங்க ளுண்டு " என்றாள்.

ஏழைகளுடைய கஷ்டத்தை யார் அறிவார்கள்! அதிலும் ஏழைப் பெண்பிள்ளையாகப் பிறந்து ஆலையில் கூலி வேலையில் அமர்வது, முன் ஜன்மத்தில் பாவம் செய்தவர்கள்தான் என்று சொல்லலாம்.

தேவானை சிலநாள் எல்லாவற்றையும் பொறுத்து வந்தாள். பிறகு தெய்வமேது, ஒன்றேது என்று மேஸ்திரியின் செயல்களை எதிர்ப்பதை விட்டாள். மனதை சரிப்படுத்திக்கொண்டு அவனுடன் சிரித்துப்பேச ஆரம்பித்தாள். வரவர அதில் சந்தோஷமுமடையலானாள். கூலியும் உயர்ந்தது.

சில மாதங்கள் கழிந்தன. தேவானைக்குத் தேகத்தில் தொந்தரவுகள் கண்டன. குழந்தை உண்டாயிருப்பதாக அறிந்துகொண்டாள். தனக்குத் தெரிந்த தெய்வங்களை யெல்லாம் வேண்டினாள். "யாரிடம் சொல்லுவேன்?" என்று காட்டில் வேட்டைக்குத் தப்பியோடும் மானைப்போல் மிரண்டு திகைத்தாள். தமையன் வையாபுரியிடம் சொல்ல அஞ்சினாள். அவளுடன் வேலை செய்துவந்த சிலர் அவள் நிலையையறிந்து சிரித்து வேடிக்கை செய்தார்கள். ஊருக்குப் போய்விடலாமா என்று யோசித்தாள். பிறகு, சாதியிலிருந்து தள்ளிவிடுவார்களே யென்று பயந்தாள். தாயார் இதையறிந்தால் எப்படிப் பொறுப்பாள் என்று ஊருக்குப் போகும் எண்ணத்தை விட்டுவிட்டாள். தெய்வமே கதியென்று தைரியம் செய்துகொண்டு அந்த நிலையிலேயே ஆலையில் வேலை செய்துகொண்டுவந்தாள்.

ஒருநாள் மறுபடி மனம் திடுக்கிட்டது, "ஐயோ நான் என்ன செய்வேன்? என் குலத்தைக் கெடுத்தேனே!" என்று ஒருத்தியிடம் அழுதாள்.

"பயப்படாதே, தேவானை. இதென்ன, எல்லாருக்கும் உண்டாவதுதானே! இதற்கு மருந்து உண்டு. உடனே கழிந்துவிடும்" என்றாள்.

"ஆமாம், நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் பயமாயிருக்கிறது. உயிர் போய்விடுமோ என்னமோ! கடவுளே, நான் எங்கே போய் ஒளிந்துகொள்ளுவேன்!" என்று அலறினாள்.

"இரண்டு ரூபாய் கொடுத்தால், முத்துசாமி ஆசாரி தெருவில் ஒரு அம்மாள் இருக்கிறாள்; அவள் எல்லாம் செய்துவிடுவாள்" என்றாள் தோழி.

"போலீசாருக்குத் தெரிந்துவிட்டால் பிடித்துப் போவார்களாமே?" என்றாள் தேவானை.

"அதெல்லாம் பயப்படாதே. அந்த அம்மாளுக்கும் போலீசாருக்கும் ரொம்ப சிநேகம். ரூபாய்தான் எல்லாம் செய்யுமே, உனக்குத் தெரியாதா?" என்றாள் அவள்.

"ஐயோ, நான் ரூபாய்க்கு எங்கே போவேன்? தெய்வமே! என்னை இப்படி மறந்தாயே! நான் இந்தப் பாழாய்ப்போன ஊருக்கு ஏன் வந்தேன்? சேலத்தில் சோறில்லாமல் செத்திருந்தாலும் நன்றாயிருந்திருக்குமே!" என்று கதறினாள்.

* * * *

சில நாட்களுக்குப் பின் மற்றொருத்தி வேறு யோசனை சொன்னாள்: "குழந்தையைக் கொல்லக்

கூடாது அம்மா! அது மூன்று ஜன்மத்திற்கும் தீராத பாவமாகும் என்று சொல்லுகிறார்கள். பிள்ளையார் கோயில் தெருவில் ஒரு பாட்டியம்மா இருக்கிறாள். அவள் ரொம்ப நல்லவள். அவளிடம் போனால் எல்லாம் பார்த்துக் கொள்வாள். உன்னைப்போல் அனேகம் பேர் அவள் வீட்டில் இருந்து குழந்தை பெற்றிருக்கிறார்கள். நீ பயப்படாதே" என்றாள்.

"நீ மகராஜியாய் இருப்பாய், அக்கா!" என்று தேவானை அவளை வாழ்த்தினாள். பிறகு, தேவானை பிள்ளையார் கோயில் தெருவில் குடியிருந்த அந்தப் பரோபகாரியம்மை வீடு போய்ச் சேர்ந்தாள். கிரமமாய்ப் பிரசவம் நடந்தது. குழந்தையைத் தொட்டு எடுத்தவுடன் தேவானைக்கு உலகமே வேறு உருக் கொண்டது. எல்லாக் கஷ்டமும் மறந்துவிட்டாள். குழந்தை ஒன்றே உலகம் என்றெண்ணினாள்.

"தெய்வம் கொடுத்த குருந்து, இது என்ன செய்தது, பாவம்! நான்தான் குலபாதகி" என்று குழந்தையை எடுத்துப் பாலூட்டுவாள். இவ்வாறு சில நாட்கள் கவலைகளை மறந்திருந்தாள்.

"நீ வேலைக்கு இப்போது போக முடியாது, தேவானை, இங்கேயே இன்னும் சிலநாள் இரு" என்று, பிள்ளையார் கோயில் தெருப் பரோபகாரியம்மை வெகு பரிதாபமாகச் சொன்னாள்.

"இவ்வளவு நல்லவர்கள் உலகத்திலிருக்க, நான் தெய்வத்தை நொந்தேனே" என்று ஆண்டவனைத் தேவானை வாழ்த்தினாள்.

ஒருமாதம் கழிந்ததும் உண்மை தெரிந்தது. அந்தக் கிழவி, மாந்தர்களால் ஏமாற்றப்பட்ட அனாதைப்

பெண்களை வைத்து அக்கிரமத் தொழில் நடத்தி வருப வள். தேவானையும் இந்த வலையில் சிக்கிவிட்டாள். பிறகு அவள் ஆலைக்குப் போகவேயில்லை.

ரு

"சேலத்தில் நம் வீட்டில் வேலை செய்துகொண் டிருந்த தேவானை உனக்கு ஞாபகமில்லையா ? அவளைப் போலவே யிருந்தாள் இந்தப் பிச்சைக்காரி" என்ருர் இராமநாதய்யர்.

தேவானை சேலத்தில் முதலில் வேலைசெய்து வந்த வீட்டு எஜமானரான பென்ஷன் உத்தியோகஸ்தருடைய மூத்த குமாரர் இராமநாதய்யர். இவருக்குச் சென்னை யில் ஒரு பெரிய பாங்கியில் காஷியர் வேலை.

"சேலத்துப் பெண் இங்கே என்னத்துக்கு இருப் பாள் ? உங்களுக்குப் பிரமை" என்ருள் சீதாலக்ஷ்மி.

"என்னமோ, எப்படியோ, யாராக இருந்தாலும் குழந்தையை வைத்துக்கொண்டு இம்மாதிரி பெண்கள் பிச்சை யெடுக்கலாயிற்றே; நம் தேசம் என்ன நிலைக்கு வந்தது !" என்ருர் இராமநாதய்யர்.

"உங்களுக்கு எப்போதும் தேசந்தான் யோசனை நம்முடைய குடும்பத்தை நாம் கவனித்தால் போதாதா ?" என்ருள் மனைவி.

மறுநாள் மாலையும் இராமநாதய்யருக்கு அந்தப் பிச்சைக்காரி ஞாபகம் விடவில்லை. ஆபீசிலிருந்து சைனபஜாருக்கு நேராய்ப் போனுர். அவளை மறுபடி அவ்விடம் காணலாம், கண்டு விசாரிக்கலாம் என்று

எண்ணி அந்த வழியாகச் சென்று அந்த சிற்றுண்டிச் சாலையண்டை வண்டியை நிறுத்திக் கொஞ்சநேரம் இருந்தார். பல பிச்சைக்காரர்கள் வந்து, "ஐயா, ஐயா" என்று சுற்றிக்கொண்டார்கள். ஆனால் அவளைக் காணவில்லை.

அடுத்த சனிக்கிழமை சாயந்திரம் இராமநாதய்யரும் மனைவியும் மறுபடி சைனாபஜார் பக்கம் போனார்கள். "அதோ, உங்கள் பிச்சைக்காரி" என்றாள் சீதாலக்ஷ்மி.

குழந்தையைக் கையில் ஏந்தி, "அம்மா, ஒரு அணா கொடு. இந்தக் குழந்தையைப் பார், அம்மா!" என்று கெஞ்சிக்கொண்டு அங்கே கொஞ்ச தூரத்தில் வந்து நின்ற வேறொரு மோட்டார் வண்டியண்டை ஓட்டம் ஓட்டமாக அந்தப் பிச்சைக்காரி ஓடினாள்.

இராமநாதய்யருடைய வண்டிச் சாயல் பார்த்ததும் அதிலிருப்பவர்கள் ஒன்றும் கொடுக்கமாட்டார்கள் என்று பிச்சைக்காரி எண்ணி வேறு வண்டியண்டை போனாள். பிச்சைக்காரர்களுக்கு இது அனுபவத்தால் வரும் அறிவு. எதிலும் புத்தி கூர்மையும் வேலைத்திறமையும் உண்டல்லவா? தூர நிற்கும் பிச்சைக்காரியைக் கூப்பிட இராமநாதய்யர் வெட்கப்பட்டார். ஆகையால் கொஞ்ச நேரம் சும்மா இருந்தார். அந்த வண்டியண்டை வேலை முடிந்ததும் தம்மிடம் வருவாள் என்று நினைத்தார். ஆனால் அவள் கூட்டத்தில் மறைந்துபோய்ப் பிறகு காணப்படவில்லை.

"சரி, போகலாம்!" என்றாள் சீதாலக்ஷ்மி.

எட்டு நாள் கழித்து இராமநாதய்யரும் சீதாலக்ஷ்மியும் ஸினிமாவுக்குப் போனார்கள். கதை: நளோபாக்கியானம்.

'கேட்'டில் பெருங்கூட்டம்: புதிய 'ஸ்டார்' டி. கே. தனபாக்கியம், 'தமயந்தி பார்ட்'.

"அடுத்த காட்சிக்குத்தான் போக முடியும்; இந்தக் காட்சிக்கு டிக்கட்டுகள் முடிந்துவிட்டன" என்றார்கள்.

"வீட்டுக்குப் போய்வரலாமா" என்றார் இராமநாதய்யர்.

சீதாலக்ஷ்மி பதில் சொல்லுவதற்குள்ளாக. "அம்மா! பிச்சை கொடு அம்மா" என்றாள் ஒருத்தி மோட்டார் கதவண்டை.

சேலத்துப் பெண்ணோ என்று பார்க்க இராமநாதய்யர் திரும்பிப் பார்த்தார். அவருக்கு அதே பைத்தியம் அவளல்ல, வேறொருத்தி.

"இங்கே வண்டி நிறுத்தினால் பிச்சைக்காரர்கள் தொல்லை. வீட்டுக்குச் சீக்கிரமாக ஓட்டு. இராமன் நாயர்!" என்றாள் சீதாலக்ஷ்மி மோட்டாரோட்டிக்கு.

அதே சமயம் ஒரு போலீஸ்காரன் தடியை வீசி அந்தப் பிச்சைக்காரியைத் துரத்தினான்.

*   *   *   *

அன்றிரவு இராமநாதய்யர் கனவில் பிச்சைக்காரியைக் காண்கிறார்.

"நீ தேவானை யல்லவா? எந்த ஊர் நீ?" என்றார்.

மகிழ்ச்சியால் கண்கள் அகன்று, தன் குழந்தையைத் தழுவிக்கொண்டு, "சாமி! சாமி! நீங்கள் சேலமல்லவா? வேப்பமரத்து வீட்டு மகனல்லவா?" என்ருள் பிச்சைக்காரி.

"நாயர்! இவளை முன்னால் ஏற்றிக்கொள்" என்று மோட்டார் ஓட்டிக்குச் சொன்னார்.

வீடுபோனதும், "இவள் யார்? இந்தச் சனியனை ஏன் வீட்டுக்கு அழைத்து வந்தீர்கள்?" என்ருள் மனைவி.

"நம் வீட்டில் இவளை நாம் ஏன் வேலைக்கு வைத்துக்கொள்ளக்கூடாது? சாப்பாடு போட்டு நாலு ரூபாய் சம்பளம் தரலாம்" என்ருர்.

"நல்ல யோசனை செய்தீர்கள்! கெட்டுப்போனதுகளை யெல்லாம் வீட்டில் சேர்த்துக்கொள்ளவா? நல்ல புத்திசாலித்தனந்தான்! போ வெளியே!" என்ருள் சீலாலக்ஷ்மி

"நான் திருடமாட்டேன், அம்மா! இட்ட வேலை யெல்லாம் செய்வேன், அம்மா!" என்ருள் பிச்சைக்காரி.

"முடியாது, போ வெளியே!" என்ருள் சீதாலக்ஷ்மி.

ஒரு ரூபாய் கொடுத்தனுப்பலாம் என்று இராமநாதய்யர் பையை எடுக்கப்போனார். பை ஜேபியில் காணவில்லை. தேடித் தேடி அலைந்தார். பிச்சைக்காரியின் குழந்தை பலக்க அழ ஆரம்பித்தது......

விழித்துக்கொண்டார்......கனவு! தம் குழந்தை ராதா படுக்கையில் உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தது.

"நல்லவேளை, சீதாலக்ஷ்மி உண்மையில் இவ்வளவு குரூரமா யிருக்கமாட்டாள்; கனவுதானே" என்று இராமநாதய்யர் சந்தோஷப்பட்டார்.

* * * *

பிறகு பலநாள் வரையில் இராமநாதய்யர், கடை, ரயில்வே ஸ்டேஷன், சினிமா எங்கேயும் பார்த்துக் கொண்டேயிருப்பார். ஆனால் அந்தப் பிச்சைக்காரியை மட்டும் அவர் காணவேயில்லை. அவள் என்ன ஆனாளோ, யாருக்குத் தெரியும்?

# தீபாவளியில் தேவ தரிசனம்

---

சுந்தரஞ் செட்டியார் ஒரு துணி வியாபாரி. சிறு முதலேக்கொண்டு ஆரம்பித்து, தம்முடைய நாண யத்திஞலும், விவேகத்திஞலும் நல்ல ஆஸ்தி சம் பாதித்தார். அவர் மனைவி மீனுட்சியம்மாள் தீவிர தெய்வபக்தி கொண்டவள். பழைய ஆசார ஒழுக்கங் களை ஏகாதசி விரதம் உள்பட மிக்க கண்டிப்பாய் நடத்தி வந்தாள். மத்தியானத்தில் சாப்பிடுமுன் வீட் டுக்கு வெளியே சென்று, காக்கை, குருவிகளுக்காக அரிசி இறைத்துவிட்டுத்தான் சாப்பிட உட்காருவாள். செட்டியாரும் தம் மனைவியை மிகவும் கௌரவித்து வந்தார். மனைவியின் பாக்கியத்திஞல்தான் தம் வியா பாரம் சரியாக நடைபெற்றுவந்ததாய் அவர் நம்பினுர்.

"ஜெய் சீதாராம்!" - சந்நியாசி உடை, முகத் தில் தேஜஸ், ஒரு கையில் தண்டம், ஒரு கையில் கமண் டலம், இவைகளுடன் நடு வயது கொண்ட ஒருவர், செட்டியார் வீட்டிற்குள் நுழைந்து இம்மாதிரிச் சத்தம் போட்டார்.

அன்று தீபாவளிக்கு முதல்நாள். செட்டியார் மனைவி இரு கை நிறைய அரிசியுடன் உள்ளே யிருந்து வந்து சந்நியாசியை எதிர்கொண்டு சென்றாள். "அரிசி வேண்டாம்! சமைத்த அன்னம் இருக்குமாயின் கொடுப்பாய்" என்றார் பெரியார்.

"சமையல் முடிகிற சமயந்தான். அரை நாழிகை காக்கவேண்டும்" என்று சொல்லி ஒரு பலகைபோட்டு அமரச் சொன்னாள். பிறகு அவர் அன்னம் வாங்கிக் கொண்டு, "அம்மணி! உனக்கு ஒரு குறைவுமில்லை. நீ புண்ணியவதி, பதிவிரதை, ஒரு மந்திரம் சொல்லுகிறேன், அதைக் கற்று நாளை கங்கா ஸ்நானம் செய்து ஜபிப்பாயானால், குடும்பத்தின் பெரியோர்களையும், சுவர்க்கவாசிகளையும், ரிஷிகளையும் காண்பாய்!" என்றார்.

மிகவும் தெய்வபக்தி கொண்ட செட்டியார் மனைவிக்கு ஆனந்தம் பொங்கிற்று. உபதேசம் பெற்றாள். மறுநாள் காலை பொழுது புலருமுன், எண்ணெய் தேய்த்து, தீபாவளி ஸ்நானம்செய்துவிட்டு, மந்திரத்தை ஆயிரத்தெட்டு தரம் சந்நியாசி சொன்ன முறைப்படி ஜபித்தாள். உடனே வீட்டில் பெரும் மங்கள கோஷம்; ஆசாரத்தில் பெருங்கூட்டம்; திவ்விய ஆசனங்கள்; அவைகள்மேல் ஆதித்திய ஒளி கொண்ட முகங்களுடன் பெரியோர்கள்.

தம் முப்பாட்டனாரும், செட்டியாரின் முப்பாட்டனாரும், இன்னும் பலரும். இவர்களுடன் கையில் வேணு பிடித்தவர் ஒருவர்; அவர்தான் மோசக்காரக் கிருஷ்ணன். பக்கத்தில் வில்லை வைத்துக் கொண்டு ஒருவர்; அவரே ஸ்ரீ ராமன். அவர் பக்

கத்தில் கிழவர் வசிஷ்டர். கலப்பை ஒன்றைத் தூக்கிக் கொண்டு பலராமன். பெரிய கோடாலி ஒன்றைக் தோளின்மேல் வைத்துக்கொண்டு மற்றொரு ராமன். இன்னொரு பக்கத்தில் பீமனும், அர்ச்சுனனும், தர்ம புத்திரருங்கூட உட்கார்ந்திருந்தார்கள். இப்படி எங்கு நோக்கிலும் தேவர்களும் ரிஷிகளும், பாரத தேசத்தின் உன்னத புருஷர்களும். ஒரு சமயம் தரிசனம் காட்டினவர் மற்றொரு சமயம் மற்றொருவராகக் காணப்பட்டார். எள் போட்டால் கீழே விழாதபடி ஆசாரம் நிறையக் கூட்டம். இதைக் கண்ட மீனாட்சியம்மாள் ஆனந்த பரவசமாகி, "நாராயணா ஓ!" என்று கூக் குரல் போட்டு மூர்ச்சையடைந்தாள்.

செட்டியார் மெத்தையிலிருந்து ஒரே குதியாய்க் கீழே குதித்து இறங்கினார். பார்த்ததும் அவருக்கு ஒன்றும் விளங்கவில்லை. "இதென்ன! வீட்டில் யாரோ வேஷம் போட்டுக்கொண்டு ஒரு கூட்டம் நிறைந்திருக்கிறது! இது யார் காரியம்?" என்று யோசித்துக்கொண்டே சுற்றிப் பார்த்தார். செட்டியார் துணி வியாபாரியானபடியால் முதலில்வந்து கூடியிருக்கும் ஆட்களின் உடைகளைக் கவனித்தார். "ஓஹோ! இது ஒரு காந்திக் கூட்டம்" என்று நிச்சயித்தார். எல்லாரும் கதர் உடுத்திருந்தார்கள். சிலர் மோட்டாக் கதர்; சிலர் 'நைஸ்' கதர்; சிலர் வெறுங் கதர்; சிலர் கரைபோட்ட கதர். ஆனால் எல்லாரும் கதர்தான்.

"ஐயன்மீர்! நீங்கள் ஏன் இங்கே வந்தீர்கள்? போலீசார் ஆட்சேபிப்பார்கள்" என்றார் செட்டியார். 'கொல்' என்று நகை கிளம்பிற்று. "நீங்கள் சிரிக்க

லாம், நீங்கள் சிறைக்குப் போகத் தயார், நான் இல்லை'' என்றார் செட்டியார். "நீங்கள் வேறு எங்கேயாவது போங்கள், பக்கத்து வீட்டில் வக்கீல் ஐயர் இருக்கிறார். அங்கே போய் வேண்டிய ஆட்டம் போடுங்கள்'' என்று மறுபடியும் சொன்னார்.

"குழந்தாய்!''என்று சொல்லிக்கொண்டு ஒரு கிழவனார் செட்டியாரை நெருங்கினார். இவர்தான் சுந்தரஞ் செட்டியாருடைய முப்பாட்டனார். "என்னை உனக்குத் தெரியவில்லையா? உன் தந்தை வாசுதேவனைப் பெற்ற தகப்பனார் சுந்தரம், என் அருமைக் குழந்தை ஆச்சே? ஏன் பயப்படுகிறாய்?'' என்று செட்டியாரை அணைத்துக்கொண்டு முத்தமிட்டார்.

"எல்லாம் சரிதான் பெரியோர்களே! ஆட்டம் நன்றாயிருக்கிறது! உங்கள் எல்லாருக்கும் சாஷ்டாங்க நமஸ்காரம். தயைசெய்து வீட்டைவிட்டுப் போங்கள். இந்தக் கதர்க்கூட்டம் இங்கே வேண்டாம்? பண்டிகை தினம். போலீசார் வந்து தொந்தரவு செய்தால் நன்றாயிருக்காது'' என்றார் செட்டியார். "அப்பனே, எதைக் கதர் என்று சொல்லுகிறாய்? இதைத் தவிர வேறு துணி எனக்கு ஏது? நான் பூவுலகத்தில் வாழ்ந்தபோது இந்தத் துணியேதான் கட்டினேன். எல்லாருக்கும் இந்தத் துணிதான். அப்போது சீமைத்துணியே ஊரில் இல்லையே! நாங்கள் என்ன செய்யமுடியும்? அந்தத் துணியுடன்தான் நான் சுவர்க்கம் போனேன். அங்கே துணிகள் கிழியமாட்டேன் என்கிறது. உன் மனைவி பதிவிரதை அவசரமாகக் கூப்பிட்டாள், வந்தேன்'' என்றார் கிழவர்.

செட்டியாருக்கு ஒன்றும் விளங்கவில்லை. "இது ஏதோ மோசம்! இது ஒரு காங்கிரஸ்காரர் கூட்டம்! இல்லாவிட்டால் இப்படி எல்லாரும் கதர் உடுத்தியிருப்பார்களா?" என்றே மறுபடியும் நினைத்தார். முடிவில், முகஜாடையிலேயே நம்பிக்கை விளைக்கும் தருமபுத்திரரண்டை சென்று, தண்டனிட்டு நின்று, "ஐயா, தங்களைப் பார்த்தால் மோசம் செய்யமாட்டீர் என்று தோன்றுகிறது. உண்மையைச் சொல்லும். இது என்ன சமாசாரம்?" என்றார்.

"மகனே, ஒன்றும் மோசமில்லை. நாம் பூவுலகத்தில் வாழ்ந்த காலத்தில், துணியென்றால், கைராட்டை நூலால் நெய்த கைத்தறித் துணிதானே? அதற்கு நீங்கள் கதர் என்று இப்போது பேர்வைத்துக்கொண்டிருக்கிறீர்கள். அப்போது நம்மிடையில் வேறு துணி ஏது? பாரத நாட்டிற்கு வேறு தேசத்திலிருந்து துணி வந்ததே கிடையாது. ஊரில் ஏராளமான துணி குவிந்து கிடந்தது. வெளி நாடுகளுக்குங்கூடக் கப்பலேற்றி அனுப்பிவந்தோமே! அந்தத் துணியையே நாங்கள் இப்போதும் உடுத்திவருகிறோம். நீங்கள் ஏன் விட்டுவிட்டீர்கள்? நாட்டில் ரொம்பத் தரித்திரமாமே?" என்றார் தருமபுத்திரர்.

பிறகு, செட்டியார் தைரியங்கொண்டு, ஒவ்வொருவராக எல்லாரண்டையும் சென்று, தண்டம் சமர்ப்பித்து, அவரவர்கள் துணியைத் தொட்டுத் தொட்டுப் பரீட்சை செய்து பார்த்தார். ஸ்ரீராமன், பலராமன், கிருஷ்ணன், பரசுராமன், பீஷ்மர், அர்ச்சுனன் - யாருடையதைப் பார்த்தாலும் சுத்தக் கதர்தான்.

"இதென்ன விநோதம்! நான் ஏதோ காந்திதான் 'இந்தத் துணி கட்டு' என்று கலகம் செய்கிறார் என்று பார்த்தேன்! இந்தக் கூட்டமெல்லாம் அதையே கட்டியிருக்கிறார்களே!" என்று செட்டியார் மனதில் சிந்தித்துக்கொண்டே மனைவியைப் பார்த்தார்.

மீனாட்சியம்மாளின் ஆனந்த மூர்ச்சை, இன்னும் தெளிந்ததும் தெளியாததுமாக இருக்கையிலேயே, "போய் வருகிறோம்" என்று ஒரு சப்தம் கிளம்பிற்று. செட்டியார் வீட்டு ஆசாரம் காலியாய்ப்போயிற்று.

நம்முடைய முன்னோர்கள் காலத்தில் உண்மையில் கதரைத் தவிர வேறு துணியே இருந்ததில்லை. அந்தத் துணியைத்தான் இன்னும் அவர்கள் சுவர்க்கத்திலும் உடுத்திவருகிறார்கள்; நாமும் ஏன் உடுத்திப் பார்க்கக் கூடாது? தேசத்திற்கு அதனால் பழைய பெருமையும் வரும் என்றே எண்ண இடமிருக்கிறது.

# அறியாக் குழந்தை

---

“ அம்மா! நான் கிட்டப் போனால் வெள்ளை மாடு முட்டவருகிறது. கறுப்பன் போனால் ஒன்றும் செய்யாமல் சும்மா நிற்கிறதே. இது ஏன் இப்படி ?”

“ அவன் அதனண்டை போய்ப் போய்ப் பழக்கம். அதனாலே அது சும்மா இருக்கிறது. உனக்குப் பழக்க மில்லை, அதனாலே முட்டுகிறது.”

“ நானும் பழக்கம் பண்ணிக் கொள்ளுகிறேனே, அம்மா !”

“ வேண்டாம், வேண்டாம். உனக்கு ஏன் அந்த வேலை ? நீ விளையாடிக்கொண்டிரு. அவன் பறைப் பையன், மாடு மேய்க்கவேண்டும். இந்தா, போளி சாப்பிடு. ”

சுப்பனுக்கு நாலு வயது. எதிர்பாராதபடி, வய துக்கு மேலே பேசும் குழந்தை. தாய் தகப்பனுக்கு, ரொம்பச் செல்லம். இரண்டு பெண் குழந்தைகளுக்குப் பின் பிறந்த முதல் ஆண் குழந்தை.

“ அம்மா, போளி எதனால் செய்கிறது ?”

" வெல்லம், பருப்பு, தேங்காய் எல்லாம் போட்டுச் செய்கிறது. சாப்பிட்டுப் பார்த்துச் சொல், நன்றாயிருக்கிறதா ? "

" அம்மா, பறையன் என்றால் என்ன ? கறுப்பன் ஏன் நம்ம வீட்டுக்குள்ளே வருவதில்லை ? எல்லோரும் வருகிறார்களே ? "

" அதப்படித்தான் குழந்தாய், அவன் பறையன்."

" சொல்லம்மா ! பறையன் என்றால் என்ன ? "

" அதெல்லாம் உனக்குத் தெரியமாட்டாது. நீ போளி சாப்பிடு."

" நான் சாப்பிடமாட்டேன். ஏன் கறுப்பன் உள்ளே வரக்கூடாது ? "

" தொந்தரவு செய்யாதே, போ. அவன் எவ்வளவு அழுக்குடன் இருக்கிறான் பார். அவன் உள்ளே வந்தால் தீட்டாய்ப் போய்விடும்."

"தீட்டு என்றால் என்னம்மா? மாட்டுச்சாணியா?"

" மாட்டுச் சாணி தீட்டல்ல. அவனுடம்பில் மண்ணும் சேறும் பார். அவன் குளிக்கிறதே கிடையாது. அவன் பறையன். "

" அம்மா, நம்ம வீட்டிலே கறுப்பனைக் குளிக்கச் சொல்லட்டுமா ? "

" இதென்ன விபரீதம் ? சுப்பு போடா ! நீ அவனோடு விளையாடாதே. "

" அவனோடுதான் விளையாடுவேன். அவனுக்கும் ஒரு போளி தா. "

" முடியாது. பறைப்பையனுக்குப் போளி தரவாவது? தந்தால் செய்த போளியெல்லாம் கெட்டுப் போகும். ஓடிப்போ, வாசலில் மாமா வந்திருக்கிறார். உன்னைக் கூப்பிடுகிறாராம், பார். "

" இல்லை இல்லை. இன்னொரு போளி தா. பாவம், அவனும் சாப்பிடட்டும். "

" முடியாது போ. இங்கேயே சாப்பிட்டுவிட்டுப் போ. அவனிடம் போகாதே. "

" அப்படியானால் எனக்கும் வேண்டாம் " என்று சொல்லிப் போளியைக் கீழே போட்டுவிட்டுப் புழக் கடைக்கு ஓடினான்.

" கறுப்பா! நீ பறையனா? "

" ஆமாம். "

" நான் பறைய னல்லவா? "

" சீ! நீ பாப்பான். நான்தான் பறையன். "

" உனக்கு அம்மா இருக்கிறாளா? "

" ஓ! இருக்கிறாள். "

" எங்க அம்மா மாதிரி இருக்காளா? "

" ஆமாம்! "

" உனக்கு போளி பண்ணித் தருகிறாளா? "

" போளியா! இல்லை, எங்க வீட்டில் போளி கிடையாது " என்று சிரித்துக்கொண்டே சொன்னான் கறுப்பன்.

"இன்று தீபாவளி. நாங்கள் எல்லாம் எண்ணெய் தேய்த்துக் குளித்தோம். நீ குளித்தாயா? "

" எங்கக் கிணற்றில் தண்ணீர் வற்றிப்போய் விட்டது. எண்ணெய்க்கு அப்பனிடத்தில் காசு எங்கே?"

" நம்ம வீட்டில் குளியேன் !"

" ஐயோ ! விடுவாங்களா உள்ளே ?"

" நீ வா, கறுப்பா ! குளித்துவிட்டு வந்தாயானல் வீட்டில் விடுவார்கள். "

" ஐயையோ ! உதைத்துப் போடுவார்கள். "

" சீ, சீ ! எங்கம்மா உதைக்கவே மாட்டாள். " இப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போது மாமா கிருஷ்ணய்யர், " அப்பா, சுப்பு ! இந்தா பட்டாசு " என்று சொல்லிக்கொண்டு வந்தார்.

உடனே சுப்பு ஒரு குதிகுதித்து மாமாவிடம் போய், அவர் தோள்மேல் ஏறி உட்கார்ந்தான். அவரும் அவனைக் கட்டியணைத்துப் பிறகு அவன் கையில் பட்டாசுக்கட்டைக் கொடுத்து, " சுடத் தெரியுமா ? " என்று கேட்டார்.

" ஓ ! தெரியும் " என்று சொல்லிக்கொண்டு பட்டாசுக்கட்டைத் திறந்து சரங்களைப் பிரித்து, " மாமா ! இதில் பாதி கறுப்பனுக்கு அறுத்துக் கொடு " என்றான்.

"பறைப்பையனுக்கு என்னத்திற்குப் பட்டாசு ? அவனைத் தீண்டாதே ! வா, உள்ளே போவோம் என்று சொல்லிவிட்டு ", " பறைப்பயலே, உனக்கு என்ன இவ்வளவு கர்வம் ? குழந்தைக்கு இவ்வளவு பக்கம் வருகிறாய். ஓடிப்போ தூர !" என்று ஒரு அதட்டு அதட்டினார் மாமா.

கறுப்பன் ஓடி ஒதுங்கி நின்றுகொண்டான். ஆனால் அவன் கண் பட்டாசுக்கட்டின் மேலேயே இருந்தது. சுப்புவுக்கு உலகம் விளங்கவேயில்லை. அப்போது சுப்புவின் தாயாரும் வந்தாள்.

"உன் குழந்தையைப் பார், சாவித்திரி! பறைப் பையனுக்கும் பட்டாசு கொடு என்று தொந்தரவு செய்கிறான்" என்று சுப்புவை எடுத்து முத்தமிட்டார்.

"இந்தக் குழந்தை உண்டோ இல்லையோ, விபரீதம்! அதை என்னவென்று சொல்லுவேன்?" என்று வெகு பெருமையோடு அவளும் சுப்புவை எடுத்து அணைத்து முத்தமிட ஆரம்பித்தாள். சுப்புவுக்கு உலகம் இன்னும் விளங்கவில்லை. கறுப்பன் மாட்டைப் பிடித்துக்கொண்டு வயலுக்குப் போய்விட்டான்.

அப்போது சுப்புவின் சின்ன அக்காள் பார்வதி, "பறையருக்கும் தீயருக்கும் புலையர்க்கும் விடுதலை" என்ற பாரதியாரின் பாட்டைப் பாடிக்கொண்டே வந்தாள்.

"அம்மா, பேபர் பார்த்தாயா? கோயில்களை எல்லாம் பறையருக்குத் திறந்து விடுகிறார்களாமே" என்று கேட்டாள்.

"இது என்ன அவதியோ தெரியவில்லையே" என்றாள் சாவித்திரி.

"உனக்குத் தெரியாதா, சாவித்திரி? உலகமே தலைகீழாகப் போகிறது" என்றார் கிருஷ்ணய்யர்.

# அன்பும் வெறுப்பும்

சபேசன் காப்பி என்றால் ஒரு காலத்தில் ராஜதானி யெல்லாம் பிரசித்தம். வெள்ளைக்காரர்கள் கூட அதைத்தேடி வாங்குவார்கள். நம்மவர்களைப்பற்றியோ, சொல்லவேண்டியதே இல்லை. கொட்டை வாங்கி எவ்வளவு ஜாக்கிரதையாக வீட்டிலேயே வறுத்துப் பொடி பண்ணினாலும், டப்பாவுக்குள் போட்டு மூடிய சபேசன் காப்பிப் பொடிக்குச் சமானமாகாது என்று மயிலாப்பூர் தியாகராயநகரிலுள்ள எல்லாப் பெரிய மனுஷாள் வீட்டுப் பெண்டுகளும் சொல்லுவார்கள்.

1925-ம் வருஷத்தில் சபேசய்யர் காப்பி வியாபாரத்தை ஆரம்பித்தார். இரண்டு வருஷம் கஷ்டமில்லாமல் காலக்ஷேபம் செய்வதே கடினமாக இருந்தது. 1928-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் சுப்புக்குட்டி, சபேசய்யரிடம் குமாஸ்தாவாகச் சேர்ந்தான். அது முதல் சபேசன் காப்பிக்கு நல்ல அதிர்ஷ்டம். ஆறு மாதத்திற்குள் வியாபாரம் மும்மடங்கு ஆயிற்று. அதன்பின் மளமளவென்று ஏறிற்று. இது சபேசய்யருக்கே வியப்பாக இருந்தது. எல்லாம் சுப்புக்குட்டி

யின் அதிர்ஷ்டம் என்று அவனிடத்தில் அவருக்கு அளவு கடந்த அபிமானம். சம்பளம் வருஷத்தில் இரண்டு தடவை உயர்த்தினர். வேண்டாமென்றாலும் அவனுக்கு அளவுக்கு மிஞ்சி சவுகரியங்கள் செய்து கொடுத்து வந்தார். சுப்புக்குட்டியின் தங்கைக்கு, செலவு எல்லாம் தாமே செய்து, நல்ல இடத்தில் கலியாணம் முடித்துவைத்தார். அவனைத் தம்முடன் ஒரு கூட்டாளி என்றே பாவித்து வந்தார். வெறும் குமாஸ்தாவாக எண்ணவில்லை.

சுப்புக்குட்டியின் தாயார் காப்பிப்பொடி அரைப்பதில் அவனுக்கு ஒரு ரகசியம் சொல்லித் தந்திருந்தாள். அவ்வாறு அரைத்த காப்பிப் பொடியைப் போட்டு இறக்கிய காப்பி மிக சுவையுடையதாக இருக்கும். சுப்புக்குட்டி சபேசன் கம்பெனியில் குமாஸ்தாவாகச் சேர்ந்த தருவாயில் ஒருநாள், சபேசய்யர் சுப்புக்குட்டி வீட்டுக் காப்பி சாப்பிட்டார்.

"உங்கள் வீட்டுக் காப்பியைப்போல் நான் எங்கேயும் சாப்பிட்டதே கிடையாது" என்றார்.

வறுப்பதில் ஏதாவது தனிமுறையா அல்லது காப்பிக் கொட்டை உயர்ந்த வகையா? இல்லை, காப்பி வடிப்பதில் சாமர்த்தியம் ஏதேனுமா - என்றெல்லாம் சபேசய்யர், சுப்புக்குட்டியின் தாயாரைக் கேட்டு விசாரித்தார். அவள் விவரத்தைச் சொல்லாமல் "அந்த ரகசியம் சுப்புக்குட்டிக்குத் தெரியும்" என்றாள்.

"இது நம்ம ஆபீசில் காப்பி அரைக்கும்போது செய்ய முடியுமோ?" என்று கேட்டார். "ஆகா, செய்யலாம்" என்றாள் சுப்புக்குட்டியின் தாயார்.

அதன் பிறகு சபேசய்யரின் வேண்டுகோளின்படி, ஆலையில் காப்பிப்பொடி அரைக்கும்போது யாருக்கும் தெரியாதபடி சுப்புக்குட்டி போய்ச் செய்யவேண்டியதைச் செய்வான். இரகசியம் சபேசய்யருக்குக்கூடத் தெரியாது. ஒரு சிறு டப்பாவில் தன் வீட்டிலிருந்து ஏதோ கொண்டு வந்து அரைக்கும் கொட்டையில் சேர்க்கிறான் என்பது மட்டும் தெரியும். அது என்னவென்று அவர் கேட்கக்கூடாது. இது அவர்களுக்குள் ஏற்பாடு.

வியாபாரம் வெகு வேகமாய் வளர்ந்தது. கொள்ளை லாபம். சென்னையில் முதல்தர வியாபாரிகளுக்குள் சபேசய்யரும் ஒருவராய்க் கருதப்பட்டார். வியாபாரச் சங்கங்களிலும், பெரிய மனிதர்களுடைய கிளப்புகளிலும், சபேசய்யர் ஒரு மெம்பராக எடுக்கப்பட்டார்.

இரகசியத்தை அறியச் சில சமயம் சபேசய்யர் பிரயத்தனப்பட்டார். ஆனால், சுப்புக்குட்டியிடம் அவன் தாயார் சபதம் வாங்கியிருந்தாள், யாருக்கும் - சபேசய்யருக்குக்கூடச் சொல்வதில்லை என்று சத்தியம் செய்திருந்தபடியால் அவன் சொல்லவில்லை. சபேசய்யரும் வற்புறுத்தவில்லை.

1936-ம் வருஷத்தில் சபேசய்யருக்கு எல்லாச் செலவும் போய் மாதம் இரண்டாயிரம் ரூபாய் வருமானம் கிடைத்து வந்தது. சுப்புக்குட்டிக்கு மாதம் இருநூற்றைம்பது ரூபாய் சம்பளம். சபேசய்யருடைய மோட்டார் வண்டியில், சுப்புக்குட்டி வீட்டுக்குப் போவான். சுப்புக்குட்டியிடம் மிக்க அன்பு பாராட்டி வந்த பழைய நண்பர்களுக்கெல்லாம் இப்போது அவன் மேல் பொறாமை ஆரம்பமாயிற்று. இல்லாத குற்ற

மெல்லாம் அவனிடம் கண்டார்கள். சபேசய்யருக்கும் சுப்புக்குட்டிக்கும் இடையில் விரோதம் உண்டு பண்ணப் பார்த்தார்கள். ஆனால் அது முடியவில்லை. வரவர அவர்களுக்குள் நம்பிக்கையும் பிரியமும் வளர்ந்துகொண்டே போயின.

இவ்வாறு இரண்டு வருஷம் சென்றது. ஒருநாள் சபேசய்யரும் மர வியாபாரி ஒருவரும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

" உங்கள் வியாபாரமெல்லாம் நன்றாய்த்தான் நடக்கிறது. ஆனால் உங்கள் மானேஜர் சுப்புகிருஷ்ணய்யர் தனியாக ஒரு காப்பி வியாபாரம் ஆரம்பிக்கப் போகிறாராமே, அது ஏன் ?" என்றார்.

" அவ்வாறு பிரஸ்தாபம் ஒன்றும் இல்லையே, யார் சொன்னார்கள் ?" என்று கேட்டார் சபேசய்யர்.

" அவரே சிலரிடம் பேசியிருக்கிறார் " என்றார் மரக்கடை ஜெயராம நாடார்.

" அப்படி யொன்றும் காணோமே ? இருந்தால் என்னிடம் சொல்லியிருப்பாரே!" என்றார் சபேசய்யர்.

" இல்லை, நான் சும்மா சொல்லவில்லை. விசாரித்துப் பாருங்கள் " என்றார் ஜெயராம நாடார்.

பிறகு ஒருநாள் சுப்புக்குட்டியும் விசுவநாத ராவ் என்ற கந்து வியாபாரியும் காப்பி அரைக்கும் யந்திரச் சாமான்களைப்பற்றி விசாரித்துக் கொண்டிருந்ததாக வேறொரு நண்பர் சபேசய்யரிடம் பிரஸ்தாபித்தார். சபேசய்யருக்குச் சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று. வியாபாரம் இவ்வளவு மும்முரமாக நடந்து வருவதும், தன்னுடைய செல்வாக்கும் அந்தஸ்தும், எல்லாமே சுப்புக்

குட்டியின் கையில் அல்லவா இருக்கிறது, காப்பிப் பொடியின் ரகசியம் அவனிடம்தானே இருக்கிறது ? இதற்கு என்ன செய்கிறது, என்று சபேசய்யருக்குக் கவலை அதிகரித்தது. வரவர, சுப்புக்குட்டியினிடம் ஓர் அர்த்தமற்ற வெறுப்பும் கோபமும் உண்டாகி, வளர்ந்துகொண்டே போயிற்று. தம் வேலைக்காரர்கள் எல்லோரும் சுப்புக்குட்டியைத்தான் எஜமானனாக மதிக்கிறார்கள், தம்மை மதிக்கவில்லை என்று அவருக்குத் தோன்ற ஆரம்பித்தது. குமாஸ்தாவான சுப்புக்குட்டியிடம் எஜமானருக்கு ஒருவிதப் பொறாமை உண்டாயிற்று.

"என்ன சுப்புக்குட்டி, வேலைக்காரர்களுக்கு ஏதாவது சொல்லிக்கொள்ளவேண்டியதாயிருந்தால் என்னிடம் சொல்வதைவிட்டு உன்னிடம் ஏன் பிரியாது செய்கிறார்கள் ? உன் சிபார்சை நான் ஒப்புக்கொள்ள முடியாது" என்றார். ஒரு வேலைக்காரன் விஷயமாக இந்தப் பேச்சு. இப்படியே பல சந்தர்ப்பங்களில் நேரிட்டது.

ஒருநாள் சுப்புக்குட்டி, "நான் ஒருமாதம் ஓய்வு எடுத்துக்கொள்ள எண்ணியிருக்கிறேன். அப்புசாமி அய்யர் திருவாரூருக்கு வந்து சிலநாள் இருக்கச் சொல்லிவருகிறார். எனக்கு லீவு கொடுக்கவேண்டும்" என்றான்.

"முடியாது" என்றார் சபேசய்யர்.

இதென்ன, இவ்வளவு நாள் என்னிடம் பிரியமாக இருந்தவர் ஒரு காரணமுமின்றி இவ்வளவு கடினமாகவும் வெறுப்பாகவும் இருக்கிறார் என்று சுப்புக்குட்

டிக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஏதோ கெட்டதெசை தன் ஜாதகத்தில் ஏற்பட்டிருக்கிறது என்று நினைத்துத் தன் வேலையைமட்டும் வழக்கப்படி செய்துவந்தாலும், மனச் சாந்தியற்றவனாக நாட்களைக் கழித்துவந்தான். பிறகு உடம்பில் நோய் கண்டது. மருந்து சாப்பிட்டதில் சொஸ்தமாகவில்லை. கட்டாயம் இரண்டு மாதம் ஓய்வு எடுத்துக்கொள்ளவேண்டும் என்று வைத்தியர்கள் சொன்னார்கள். சபேசய்யரைக் கேட்டதற்கு, காப்பிப் பொடியில் செய்துவரும் ரகசியம் சொன்னாலொழிய லீவு கொடுக்க முடியாது என்று கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டார்.

"ராஜிநாமா செய்துவிடு. ஏதோ நம்ம அதிர்ஷ்டம் இவ்வளவு நாள் நடந்தது. நல்ல நாள் வந்தபிறகு நாமே வியாபாரம் சின்னதாக ஆரம்பிக்கலாம். தெய்வம் விட்டபடி ஆகட்டும்" என்று தாயார் பொடியின் ரகசியத்தை சபேசய்யருக்குச் சொல்லவேண்டாம் என்று கண்டிப்பாய் தடுத்துவிட்டாள். சுப்புக்குட்டியின் ராஜிநாமாவை சபேசய்யரும் அங்கீகரித்து அவனை வேலையிலிருந்து நீக்கிவிட்டார்.

கொஞ்சநாள்வரையில் சபேசய்யரின் வியாபாரம் இதனால் குறையவில்லை. டப்பாவின்மேல் பதியப்பட்ட நடராஜப் படத்தின் கவுரவமும், காப்பிக் கொட்டையின் இயற்கைக் குணமும், பழைய பெயரும் சேர்ந்து வியாபாரத்தைத் தாங்கியே வந்தது.

"காப்பி என்ன கொஞ்சம் மட்டம் இன்னிக்கு?" என்று யாரேனும் ஒருவர் சொல்லுவார்.

"ஏதோ வடிகட்டும் துணியில் பிசகு, அல்லது டப்பா திறந்துவைத்து வாசனை போய்விட்டிருக்கலாம். அதே சபேசன் காப்பிதான்" என்று வீட்டில் சொல்லுவார்கள்.

ஒரு மாதம் இரண்டு மாதமானபின், "வேண்டுமென்று குமாஸ்தா சுப்புகிருஷ்ணய்யர் தன் முதலாளிக்கு விரோதமாகத் திண்ணைப் பிரசாரம் செய்து வருகிறார். அவர் வேலையிலிருந்து நீக்கப்பட்டதனால் காப்பிப் பொடி கெட்டுவிடுமா?" என்று சபேசய்யருடைய நண்பர்கள் பிரசாரம் செய்துவந்தார்கள்.

சிலர் வீட்டிலேயே கொட்டை வறுத்துப் பொடி செய்யவும் ஆரம்பித்து, "என்னவானாலும் வீட்டில் வறுத்தமாதிரி இருக்குமா?" என்றும் சொல்லத் தொடங்கினார்கள். மொத்தத்தில், சுப்புக்குட்டி வேலையிலிருந்து நீங்கிய ஐந்தாறு மாதங்களுக்குள் சபேசய்யர் வியாபாரம் குறைந்துவிட்டது.

சுப்புக்குட்டியின் நண்பர் விசுவநாதராவ் சுப்புக்குட்டியைத் தன்கூடச் சேரச் சொன்னார். சேர்ந்து தன் வியாபாரத்தில் பாதி லாபம் சுப்புக்குட்டி எடுத்துக்கொள்ளலாம், எல்லாச் செலவும் தன் பொறுப்பு என்று சொன்னார். சபேசய்யரே தன்னைத் திரும்பக் கூப்பிடுவார் என்று ஓரிரண்டு மாதம் சுப்புக்குட்டி காத்திருந்தான். பிறகு விசுவநாதராவின் ஏற்பாட்டை ஒப்புக்கொண்டு வேலை துவக்கினான்.

சாதுவாயிருந்த சுப்புக்குட்டிக்கு இப்பொழுது ஒரு புது ஆத்திரம் பிறந்தது. எப்படியாவது சபேசய்யருக்குப் புத்தி கற்பிக்கவேண்டுமென்ற எண்ணம் சுப்

புக்குட்டியின் மனதைப்பிடித்துக்கொண்டது. சபேசன் காப்பிக்குப் போட்டியாக, 'நடேசன் காப்பி' என்று எதுகையாகப் பெயரிட்டு, இரகசியக் கலப்பை ஒன்றுக்கு ஒன்றரையாகக் கலந்து, அதே நடராஜ படத்தின் இடது காலை வலது காலாக்கி விசுவநாதராவின் கம்பெனியில் காப்பிப் பொடி உண்டாக்கப்பட்டது. சுறுசுறுப்பான ஏஜெண்டுகள் சேர்ந்தார்கள். வியாபாரம் வேகமாக முன்னேறிற்று. விசுவநாதராவும் ஏராளமாகப் பணம் செலவு செய்து விளம்பரங்கள் தாராளமாகச் செய்துவந்தார். அவர் சுப்புக்குட்டிக்கு உற்சாகம் ஊட்டி, சபேசய்யர் பேரில் அவனுக்குள்ள கோபம் தணியாமலிருக்க எல்லா விதத்திலும் வேலை செய்து வந்தார்.

பிறகு, சபேசய்யர் ஹைகோர்ட்டில் வழக்குத் தொடுத்தார்-டப்பாக்களின் வடிவம், பெயர், படம்எல்லாம் தம் காப்பிப்பொடி டப்பாக்களின் உருவமே, இதனால் ஜனங்கள் ஏமாந்து தன்வியாபாரம்கெட்டுவிட்டது என்று. தடை உத்தரவுக்கும், நஷ்ட ஈட்டுக்கும், ஹைகோர்ட்டில் வழக்கு ஒரு வருஷம் நடந்தது. முடிவில் சபேசய்யர் ஜெயித்தார். கோர்ட்டில் தீர்ப்புக்கொடுத்த தினம் சபேசய்யருக்குக் கடுஞ்சுரம். தீர்ப்பைப்பற்றிச் சமாசாரம் தெரிந்த சந்தோஷத்தில், படுத்திருந்தவர் எழுந்து, மோட்டார் வண்டியில் ஏறி - ஓட்டுகிறவன் அப்போது இருக்கவில்லை - தாமே வக்கீல் வீட்டுக்கு ஓட்டிக்கொண்டு போனார். ஜப்தி நடவடிக்கைகள் உடனே ஆரம்பிக்கச் செய்தார். சிதம்பரம் கோயிலில் பெரிய அபிஷேகம் நடத்தவும் ஏற்பாடு செய்தார்.

சுப்புக்குட்டியின் தாயார், உலகமே கவிழ்ந்து விட்டதாகத் துயரக்கடலில் ஆழ்ந்தாள். "பகவானே,

நீதான் இந்த சபேசய்யரைக் கொண்டுபோகவேண்டும். என் மகனைக் கெடுத்த அவனை நீதான் பார்த்துக் கொள்ளவேண்டும் ஈசனே" என்று தன் இஷ்ட தேவதையை வேண்டிக் கொண்டாள். வேண்டிக் கொண்டபடியே தீர்ப்பு ஆன எட்டாவது நாள், சபேசய்யர், டாக்டர்கள் எதிர்பார்த்ததற்கு மாருக, மாரடைத்து இறந்துபோனுர். சிதம்பரத்தில் அபிஷேகம் நடக்கவில்லை.

ஹைகோர்ட்டுத் தீர்ப்பின் உயிர் சபேசய்யர் உயிருடன் தீர்ந்துபோயிற்று. விசுவநாதராவ் கம்பெனியார் தம் பொடியை எவ்விதக் குந்தகமுமின்றி இனி விற்கலாம் என்று விசுவநாதராவின் வக்கீல்கள் வியாபாரச் சட்டத்தை விளக்கிச் சொன்னுர்கள். தவிர டப்பாவின் மேலுள்ள நடராஜப் படத்தை காளிங்க மர்த்தனமாக மாற்றிவிட்டால் ஆட்சேபணை முற்றும் தீர்ந்துவிடும் என்று வக்கீல்கள் சொன்னுர்கள்.

இதைக் கேட்டு, "ஐயோ, வழக்கு என் பக்கம் தீர்ப்பான பின்னும் வீணுயிற்றே" என்று அலறிற்று சபேசய்யரின் ஆவி.

"அலறிப் பயனில்லை மைந்தா" என்றது திருமூலர் குரல்.

* * * *

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணம் புகுந்தார்—
இடப்பக்க மேஇறை நொந்ததே என்ருர்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே.

* * * *

வக்கீல்கள் சொன்ன அபிப்பிராயம் கேட்ட விசுவநாதராவுக்கும் சுப்புக்குட்டிக்கும் அளவுகடந்த ஆனந்தம் உண்டாயிற்று. உலகத்தையே மறுபடியும் ஜெயித்ததாக மகிழ்ச்சி அடைந்தார்கள். ஆனால் காப்பிப் பொடி ரகசியம் எப்படியோ வெளியாய் விட்டது!

ஊரெல்லாம் "இந்தச் சபேசன் காப்பிப் பொடி சீக்காய்ப் பொடி கலப்பாமே?" என்று பேச ஆரம்பித்தார்கள். "ஒரு டப்பாவில் கால் பங்கு சீக்காய்ப் பொடியாமே" என்று சொல்லிக் கொண்டார்கள். பிறகு, "சபேசன் காப்பி", "நடேசன் காப்பி" இரண்டுமே ஜனங்களுக்குப் பிடிக்கவில்லை. டப்பாப் பொடி போட்டுச்செய்த காப்பியைக் குடித்தவர்கள் தேகத்தில் பலவித அசவுகரியங்கள் காண ஆரம்பித்தன. சிலருக்கு வயிற்றுச் சிக்கல் உண்டாயிற்று. சிலர் பேதியாயிற்று என்றார்கள். சிலர், குடித்தவுடன் வாந்தி கூட எடுத்துவிட்டார்கள். இதன் விளைவாக, பெரிய மனிதர்கள் எல்லாரும் வீட்டிலேயே கொட்டை வறுத்துப் பொடி பண்ண ஆரம்பித்துவிட்டார்கள். உண்மையில் சுப்புக்குட்டி சேர்த்துவந்தது ஒரு டப்பா காப்பிப் பொடிக்கு ஒரு சிறு தேக்கரண்டி சீக்காய்ப் பொடிதான். இவ்வளவுநாள் நன்றாயிருந்ததென்று குடித்தவர்களுக்கு, இப்போது ஏனோ அதைத் தாங்க முடியவில்லை. மூளையில் உண்டாகும் எண்ணங்களுக்கு அபார சக்தி உண்டு. இதையும் செய்யும், இதற்கு மேலேயும் செய்யும்!

# ஒரு எலெக்ஷன் கதை

க

கோட்டூர் ஜில்லாவுக்குத் தலைநகரமாகிய கோட்டூரில் முன்பு காட்டாஞ்சேரி என்று சொல்லிவந்து இப்போது சில வருஷமாய் ஜேம்ஸ்பேட்டை என்று புதுப் பெயர்கொண்ட ஆதித்திராவிடத் தெருவில், ஸப்ளையர் சிரங்கன் என்பவன் அங்கே குடியிருந்த முப்பது ஹரிஜனக் குடும்பங்களுக்குள் கொஞ்சம் நல்ல ஸ்திதியிலிருந்தான். அனேகமாய் ஜேம்ஸ்பேட்டையில் குடியிருந்தோர் அனைவருமே சோணமலையில் கூலி வேலை செய்து வாழ்க்கை நடத்தி வந்தார்கள். சிரங்கன் கூலி வேலை செய்யவில்லை; மலையில் காப்பி, தேயிலைத் தோட்டங்கள் வைத்திருந்த வெள்ளைக்காரர்கள் வீட்டுக்கு வேண்டிய சாமான்களைக் கோட்டூரிலும் சந்தைகளிலும் விலைக்கு வாங்கிக் கொண்டுபோய்க் கொடுத்து அதில் கிடைத்த சிறு லாபத்தைக்கொண்டு யோக்கியமாய் வாழ்ந்துவந்தான். மலையில் எல்லாத் துரைமார்களும் துரைசானிகளும் அவனிடம் மிக்க பிரியமாயும், நம்பிக்கை வைத்தும் இருந்தார்கள்.

கோட்டூர் ஜில்லா கலெக்டருக்குங்கூட, ஸப்ளேயர் சீரங்கனுடைய யோக்கியதையையும் நல்ல குணங்களையும் பற்றி, சமாசாரம் எட்டியிருந்தது. முனிசிபாலிடியில் ஒரு ஹரிஜன அங்கத்தினர் நியமிக்க வேண்டி வந்தபோது, கோட்டூர் போலீஸ் ஸூபரிண்டெண்டும், ஜில்லா டாக்டரும், லண்டன் மிஷன் பாதிரியாரும் எல்லாரும் சேர்ந்து, வெள்ளைக்காரக் 'கிளப்' பட்லர் சுவாமிப்பிரியன் என்பவரை நியமிக்க வேண்டுமென்று ஜில்லா கலெக்டரை வற்புறுத்தினார்கள். இந்த யோசனையைக் கலெக்டர் மனைவி தடுத்துவிட்டாள். ஸப்ளேயர் சீரங்கனுக்குத்தான் அந்த ஸ்தானம் கொடுக்க வேண்டுமென்று மலையிலுள்ள வெள்ளைக்காரத் துரைசானிகள் சிபார்சு செய்திருக்கிறார்கள். அதுதான் சரி என்று கலெக்டர் மனைவி பலமாகத் தன் புருஷனிடம் சொன்னதே நிறைவேறிற்று. "உங்களுக்குத் தெரியாது. கிளப்பு பட்லரை நியமித்தால் ஊரில் தேசியப் போக்கிரிகள் பெருங் கிளர்ச்சி செய்வார்கள். காலத்தின் நிலைமையை யனுசரித்துப் போக வேண்டும்" என்று கலெக்டர் மற்ற உத்தியோகஸ்தர்களுக்குச் சமாதானம் சொல்லி, சீரங்கனையே சிபார்சு செய்து நியமனம் செய்துவைத்தார்.

அதுமுதல் சீரங்கன் நிலைமை கெட ஆரம்பித்தது. பெரிய மனிதன் ஆகிவிட்டான். கலெக்டரும் உத்தியோகஸ்தர்களும் அவனுடன் கைகுலுக்கிப் பேசிவிட்டார்களல்லவா ? தன் வியாபாரத்தைச் சரியாய்க் கவனிக்கவில்லை. சாமான்களைத் தானே சென்று வாங்குவதற்குப் பதில் தன் சிற்றப்பன் மகன் வரதனை அனுப்புவான். மலைக்கும் ஒவ்வொரு நாள்தான் போவான் ;

ஒவ்வொரு நாள் வரதனையே அனுப்புவான். வரும் லாபத்தில் அவனுக்கு ஒரு பங்கு கொடுத்தான். கவனம் குறைந்தது; லாபமும் குறைந்தது. குடும்பச் செலவுக்குப் போதிய வருமான மில்லாமல், துரைசானிமார்கள் கொடுக்கும் முன் பணத்தில் சில பாகத்தை வீட்டுச்செலவுகளுக்கு உபயோகித்துவிடுவான். பிந்திக் கஷ்டப்படுவான். கடைகளில் கடனுகச் சாமான் வாங்க ஆரம்பித்தான். பலநாள் வியாபாரம் யோக்கியமாகச் செய்து வந்திருந்தபடியாலும், முனிசிபல் அங்கத்தினர் பதவி கிடைத்திருந்த புது கௌரவத்தினுலும், கடைக்காரர்கள் கடனுகச் சாமான் கொடுத்தார்கள். துரைசானிகளிடம் கணக்கு ஒப்புவிப்பதில் சில பொய்களும் சொல்ல வேண்டியதாயிற்று.

முறை கெட்டுவிட்டால், சின்ன வியாபாரமானுலும் சரி, பெரிய வியாபாரமானுலும் சரி, வரவர வெகு வேகமாய்ச் சிக்கல்கள் அதிகரித்துக் கடைசியில் மனிதனைக் குழியில் தள்ளிவிடுவது தெரிந்த விஷயம். ஊரில் சீரங்கனுக்கு முன்னிருந்த மதிப்புக் குறைந்துவிட்டது. முதலில், மற்ற நகர பரிபாலன அங்கத்தினர்களைவிடச் சீரங்கனே யோக்கியன் என்று பாதி வேடிக்கையாகவும், பாதி உண்மையாகவும் ஊரில் சொல்லிவந்த பேச்சு இப்போது மாறிவிட்டது.

உ

முனிசிபல் சேர்மன் கோபால் செட்டியார் திடீர் என்று இறந்துவிட்டபடியால், மறு சேர்மன் தேர்தல் நடைபெற ஏற்பாடுகள் நடந்தன. அந்த ஸ்தானத்திற்குப் பிரபல நூல் வியாபாரி தனபால செட்டியார்

ஓர் அபேட்சகராக நின்றார். போட்டியாக வக்கீல் இராமசுவாமி முதலியார் நின்றார். ஊரில் வக்கீல்களுக்குள்ளும் கடைத்தெருவிலும் ஒருமாதமாக இதே பேச்சு.

வாக்கு (வோட்டு) வேட்டை ஆரம்பித்துவிட்டது. தேர்தலுக்கு நான்கு நாளிருக்கப் பணப் பேச்சும் ஆரம்பித்தது. "அங்கத்தினர் ஒன்றுக்கு ரூபா ஆயிரம், இரண்டாயிரம் எடுத்து வைத்திருக்கிறார் செட்டியார்" என்றார்கள். இதில் பாதி உண்மை, பாதி புளுகு. ஆயினும் இராமசுவாமி முதலியார் தாம் அந்தத் துறையில் இறங்குவதாக உத்தேசமேயில்லை என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். அவருடைய நண்பர்களுக்கு உற்சாகம் குறைந்து போய்விட்டது. அவர்கள் எவ்வளவோ சொல்லியும், "பணம் செலவழித்தாவது இந்தப் பதவி சம்பாதிக்க வேண்டும் என்று எனக்கு இஷ்டமில்லை" என்று முதலியார் பிடிவாதம் செய்தார்.

திங்கட்கிழமை காலை எட்டு மணிக்குத் தேர்தல். ஞாயிற்றுக்கிழமை இரவு எட்டு மணிக்கு இராமசாமி முதலியார் வீட்டில் நண்பர்கள் கூடினார்கள்.

"இப்படிச் செய்தால் தங்களுக்கு என்ன, ஒன்றுமில்லை. எங்களுக்குத்தான் அவமானம்" என்றார் பொடிக்கடை ரங்கப் பிள்ளை.

"இனி ஊரில் நாம் இருக்கமுடியாது. எங்கேயாவது போய்த்தான் விடவேண்டும்" என்றார் மளிகைக்கடை சீதாராமய்யர்.

"எங்களையெல்லாம் இப்படி அவமானத்தில் இழுத்து விடுவது உங்களுக்கு நியாயமா?" என்றார்

வீரராகவ செட்டியார். இவர், அபேட்சகர் தனபால செட்டியாரின் மைத்துனர். முந்தி அவருடன் வியாபாரத்தில் கூட்டாக இருந்து பிரிந்து போனவர். அது முதல் இருவருக்கும் ரொம்ப விரோதம்.

முதலியார் ஒன்றும் பேசாமல் இருந்தார். மறுபடி சீதாராமய்யர், "இப்படிப் பணம் கொடுத்து ஊரைக் கெடுத்து முனிசிபாலிடியை நாசம் செய்துவிடுவதை நாம் பார்த்துக் கொண்டிருப்பதா?" என்றார்.

"அதற்கு நாம் என்ன செய்யமுடியும்? காலம் கெட்டுப் போச்சு. முந்தியிருந்த சேர்மன்கள் எல்லாம் எவ்வளவோ கௌரவமா யிருந்தார்கள்; யோக்கியர்களுக்கு இனி இடமில்லை" என்றார் முதலியார்.

"விஷத்திற்கு விஷம்தான் மருந்து. முதலியார்வாள்! நீங்கள் இந்தக் காரியத்தில் இம்மாதிரி இருக்கலாகாது. கொஞ்சம் சிரத்தை காட்டவேண்டும்" என்றார் ஆயுர்வேத பண்டிதர் இராகவாசாரியார்.

இரண்டு நிமிஷம் கழிந்து கடிகாரத்தில் மணி ஒன்பது அடித்தது. "நல்ல சகுனமாயிற்று. இனி ஏன் தாமதம்?" என்று சீதாராமய்யர் எழுந்தார். எழுந்து, முதலியார் கையைப் பிடித்து உட்கார்ந்திருந்தவரை எழுப்பி, ஒரு கையை அவர் தோள்மேல் போட்டு வெகு அபிமானமாக ஆபீஸ் அறைக்குள் தனியாக அழைத்துப் போனார்.

ஒரு நாழிகை கழிந்தது. பிறகு சீதாராமய்யர் சிரித்த முகமாக வந்து, கூடியிருந்தவர்களைப் பார்த்து, "சரி. காரியம் முடிந்தது, இனி செய்யவேண்டிய வேலைகளைச் செய்யலாம். ஒரு இராத்திரிதான் இருக்கிறது" என்றார். எல்லாருக்கும் ஒரே சந்தோஷம்; ஆரவாரித்தார்கள்.

௩

அன்றிரவு மோட்டார்கார்கள் பறந்ததற்குக் கணக்கில்லை. இரவு இரண்டு மணிக்கு முதலியார் வீட்டுக்குச் செய்திவந்தது. முப்பத்தைந்து அங்கத்தினர்கள் வோட்டு செய்ய வேண்டியதில், பதினேழு அங்கத்தினர்கள் முதலியார் பக்ஷம் என்று முடிவாகச் சொல்லிவிட்டார்கள். அதில் பத்துப் பேர்கள் செட்டியாரிடம் வாங்கியிருந்த பணமும் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். ஏழு ஆசாமிகள், "யாரிடமும் பணம் வாங்கமாட்டோம்; முதலியாருக்குத்தான் வோட்டுச் செய்வோம், நீங்கள் ஏன் சந்தேகப்படுகிறீர்கள்?" என்றார்கள். இன்னும் ஒரு வோட்டு வந்தால்போதும். பாக்கிப் பதினெட்டுப் பேரில் ஒருவர் நாகப்பட்டினத்திற்குக் கோர்ட்டு அலுவலாய்ப் போயிருக்கிறார். அவர் நாளைக்குள் வரமாட்டார். பதினாறு பேர் தனபால செட்டியார் கட்சி. அவர்களை அசைக்கமுடியாது. சீரங்கன் ஒருவன்தான் சந்தேகமாய் நிற்கிற வோட்டு. அவனை எங்கே தேடினாலும் அகப்படவில்லை. வீட்டில் விசாரித்தால், மலைக்குப் போய்விட்டான் என்கிறார்கள்.

"அவன் தம்பி வாத்தியார் முனிசாமியைக் கேட்டீர்களா?" என்றார் பொடிக்கடை ரங்கப் பிள்ளை.

"கேட்டோம். அவன் இப்படியும் சொல்லுகிறான். அப்படியும் சொல்லுகிறான். ஒருசமயம், மலைக்குத்தான் போயிருக்கலாம் என்கிறான். ஒரு சமயம், 'வீட்டிலேயே ஒளிந்துகொண்டிருக்கலாம்; ஏழைகளுக்கு இந்தக் கஷ்டம் என்னத்திற்கு? எங்கேயும் தாக்ஷணியம், எப்படிப் போனாலும் விரோதம்' என்கிறான்."

" இவ்வளவு செய்தும் வீணுய்ப் போகும்போலிருக்கிறதே " என்ருர் சீதாராமய்யர்.

"ஆமாம், இம்மாதிரி மூக்கால் அழுதாலா காரியம் ஆகும் ?" என்று பொடிக்கடை ரங்கப் பிள்ளை மிக்க கோபத்துடன் சொல்லி எழுந்தார்.

" நீர்தான் பார்த்துச் செய்யுமே ! " என்ருர் சீதாராமய்யர்.

" எங்களை யெல்லாம் யார் நம்புவார்கள் ? நாங்கள் ஏழையாச்சே !" என்ருர் ரங்கப் பிள்ளை.

" முதலியார்வாள் ! ரங்கப் பிள்ளைதான் எல்லாம் செய்யட்டும். நான் இத்துடன் இந்த விஷயத்தை விட்டேன் ! " என்ருர் சீதாராமய்யர்.

" நன்ருயிருக்கிறது ! நல்லவேளை பார்த்தீர்கள் சண்டைக்கு ! " என்று வீரராகவ செட்டியார், எழுந்திருந்த சீதாராமய்யரை, மறுபடி உட்கார வைத்தார். உட்கார வைத்து, முதலியாரிடம் வந்து, " இதில் இறங்கியிருக்கக் கூடாது. இறங்கினபின், எல்லாம் சரியாய்ச் செய்து முடிக்கவேண்டும். கைக்கு எட்டினதை வாய்க்கு எட்டாமல் விட்டுவிடுவதா ? தயைசெய்து ரங்கப்பிள்ளையிடம் இந்தச் சீரங்கன் விஷயத்தை ஒப்புவித்து விடுங்கள். பகவான் இருக்கிருர். நம்ம கட்சி ஜயிக்கும் ! " என்ருர்.

முதலியாருக்கும் உற்சாகம் பிறந்துவிட்டது. வீட்டுக்குள் நுழைந்தார். பெட்டி திறந்து மூடிய சத்தம் கேட்டது. ஒரு பையுடன் வெளியே வந்து ரங்கப் பிள்ளையை அழைத்துக்கொண்டு வேறு ஓர் அறைக்குள் சென்ருர்.

௪

பொடிக்கடை ரங்கப் பிள்ளை ஜேம்ஸ்பேட்டைக்குச் சென்றார். சீரங்கன் தம்பி முனிசாமியைக் கண்டு நூறு ரூபாய் ஒரு காகிதத்தில் ஐந்து பொட்டலமாகக் கட்டி அவனிடம் பேசாமல் கொடுத்தார். முனிசாமி இவ்வளவு தொகை வெள்ளி ரூபாயாக ஒரே தடவை அதற்கு முன் கனவிலும் தொட்டது கிடையாது. பிரமித்து, கண்களில் ஒரு பித்தப் பிரகாசத்துடன் ரங்கப் பிள்ளையைப் பார்த்துக்கொண்டு சும்மா நின்றான்.

ரங்கப் பிள்ளை, "யார் யாரோ உன்னை வந்து கண்டிருப்பார்கள். இக்காலத்தில் ஏழையை யார் நம்புகிறார்கள்? யார் உதவுகிறார்கள்? உங்களுக்கு இருக்கும் கஷ்டங்கள் யாருக்குத் தெரியும்? தம்பி, இந்தப் பணம் உன்னுடையது. காரியம் ஜயித்தாலும் சரி, தோற்றாலும் சரி. சீரங்கன் எங்கே? உண்மை என்ன?" என்றார்.

வாத்தியார் முனிசாமி, "உங்களிடம் நான் பொய் பேசக்கூடாது. சீரங்கனைத் தனபாலு செட்டியார் வீட்டில் குதிரைக் கொட்டகையில் பூட்டி வைத்துக் காவலிருக்கிறார்கள். அவன் செட்டியாருக்கு நூற்றைம்பது ரூபாய்வரையில் முந்தியே கடன் பட்டிருக்கிறான். தெரியாதா? நாளை நேராக முனிசிபல் ஆபீசுக்குப் போகும்போது அவனைக் கூடவே கூட்டிப் போவார்கள்" என்றான்.

"முனிசாமி! இதில் என்ன செலவானாலும் சரி, நான் சொல்லுகிறபடி செய்" என்றார் ரங்கப் பிள்ளை.

பிறகு கொஞ்ச நேரம் குசுகுசுவென்று பேசினர்கள். "சரி, தாங்கள் இங்கே இருங்கள்" என்று சீரங்கன் வீட்டுக்குள் முனிசாமி நுழைந்தான்.

உள்ளே சீரங்கன் தாயார் கிழவியிடம் அவன் கொஞ்ச நேரம் பேசிவிட்டு, மறுபடி வெளியே வந்து ரங்கப் பிள்ளையை மாரியம்மன் கோயில் திண்ணையில் உட்கார வைத்துவிட்டு, அவர் கொண்டு வந்திருந்த குதிரை வண்டியில் தான் ஏறி, தனபாலு செட்டியார் வீட்டுக்குப் போனன்.

செட்டியாரும் அவர் வீட்டு வாசல் திண்ணையில் தம் நண்பர்களுடன் உட்கார்ந்திருந்தார். ஒரு 'ஹரிகேன்' விளக்கும், காகிதம் பென்சலுமாக இருந்தார்கள். முனிசாமி வண்டியிலிருந்து இறங்கி, செட்டியார் காலில் விழுந்தான். "சாமி! எஜமான் மன்னிக்க வேண்டும். சீரங்கன் தாயார் சாகிற தறுவாயிலிருக்கிருள். நாங்கள் போவதற்குள் தீர்ந்துவிடுமோ, என்னமோ! சீரங்கனை எப்படியாவது அனுப்பவேண்டும்" என்ருன்.

"கிழவிக்குத் திடீர் என்று என்ன வந்துவிட்டது? திருட்டுத்தனம்! முதலியார் ஏதாவது சொல்லியனுப்பித்தாரா, என்ன?" என்ருர் செட்டியார்.

"ஐயோ! கடவுள் மேலே பார்த்துக்கொண்டிருக்கிருர். பொய் சொல்லிப் பிழைக்க முடியுமா? உண்மையாய்க் கிழவிக்குப் பேதி. அவள் பிழைக்கமாட்டாள். நேற்று முதல் இருபது தடவை ஆய்விட்டது. பேச்சு மூச்சில்லை. எப்படியாவது அண்ணனை அனுப்புங்கள். இல்லாமல்போனல் ஜீவன் துடிச்சுப் போகும்" என்று கண்ணீர் விட்டு விம்மி விம்மி அழுதான்.

"சரி, ஸ்ரீநிவாசய்யரே, நீங்களும் போங்கள். சிரங்கனைக் கூட்டிப்போய், என்ன சமாசாரம் பார்த்து வாருங்கள்" என்றார் செட்டியார் தம் குமாஸ்தாவுக்கு.

"இது ஏதோ மோசம். செட்டியார் எல்லாரையும் ஒரே மாதிரி நம்புவது சுபாவம்" என்றார் அங்கே ஒருவர்.

குமாஸ்தா சீநிவாசய்யர் வீட்டுக்குள் போய், குதிரைக் கொட்டகையிலிருந்து சிரங்கனை அழைத்துக் கொண்டு புழைக்கடை வழியாய் வந்து வண்டி நின்ற இடத்தை அடைந்தார். முனிசாமியும் போய் அவர்களுடன் நின்றான்.

"என்ன யோசிக்கிறீர்கள், ஐயரே? ஏறும் வண்டியில்" என்றார் தனபால செட்டியார்.

தீண்டாமை 'கீண்டாமை' எல்லாம் பறந்து போய்விட்டது. தேர்தலில் அதெல்லாம் பார்த்தால் ஆகுமா? வண்டியில் எல்லாரும் ஏறினார்கள்.

௫

ஜேம்ஸ்பேட்டையில் சிரங்கன் வீட்டு வாசலில் வண்டி நின்றதும், வீட்டுக்குள் "ஐயோ! ஐயோ!" என்று கூப்பாடு கிளம்பிற்று.

"கதை பொய்யல்ல, உண்மையே" என்று ஸ்ரீநிவாசய்யர் தமக்குள் சொல்லிக்கொண்டு, "சிரங்கா, உள்ளேபோய் விசாரித்து வந்து சொல்" என்றார்.

சிரங்கனும் முனிசாமியும் உள்ளே போனார்கள். கொஞ்ச நேரம் கழித்து முனிசாமி வெளியே ஐயர் பக்

கத்தில் வந்து, "உயிர் போய்விட்டது" என்று மெது வாகச்சொல்லி, உடனே மறுபடியும் வீட்டுக்குள் போனுன்.

"ஐயையோ! போய்விட்டாயே! ஐயையோ! குடி கெட்டுதே!" என்று வீட்டுக்குள்ளேயே இருந்து பலத்த கூப்பாடு போட்டார்கள்.

"என்ன இந்த வீட்டில் சமாசாரம்?" என்று ஸ்ரீநிவாசய்யர் தம் பக்கத்தில் வந்து நின்ற ஒரு பைய னைக் கேட்டார்.

"என்ன சமாசாரம், வாந்தி பேதிதான், கிழவி செத்துவிட்டாள்" என்ருன் பையன்.

ஸ்ரீநிவாச ஐயருக்குப் பயம் பற்றிக்கொண்டது. திண்டாதார் தெரு. கூட, வாந்திபேதி, கேட்க வேண் டுமா? 'சரி, இனி இங்கே இருப்பது சரியில்லை' என்று தீர்மானித்தார். முனிசாமியும் வெளியே வந்தான்.

"சுவாமி! கிழவி செத்தாப்போல்தா னிருக்கிருள். மூச்சே இல்லை. சீரங்கனுக்கு நான் ஜவாப்தாரி, நீங் கள் போங்கள்" என்ருன். ஐயர் அவசரமாய் வீடு திரும்பினுர்.

உள்ளே, படுக்கையில் கிடந்த கிழவி மகனைக் கிட்டேவர சமிக்ஞை காட்டினுள். சீரங்கன் தன் காதைத் தாயார் வாயிடம் வைத்தான். "அப்பா, சீரங்கா! ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன் என்ருர்களே. யாராவது வேண்டாம் என்பார்களா? பைத்தியக்கார னைப் போகாதே. கிழவி பேச்சுக் கேள்" என்ருள்.

சீரங்கன், "இதென்ன மோசம்! இதற்குத்தான கூப்பிட்டீர்கள்?" என்ருன்.

"ஐயையோ!" என்றான் முனிசாமி. கூட வேறு சிலரும் கூப்பாடு போட்டுப் பேரிரைச்சல் போட்டார்கள்.

"மகனே!" என்றாள் மறுபடி கிழவி. "எனக்குப் பேதியுமில்லே, ஒன்றுமில்லே. ஆனால் என்னமோபோலிருக்கிறது. இந்த ஆயிரம் ரூபாய் பொடிக் கடைக்காரர் கொண்டு வந்திருக்கிறதை வாங்கிக்கொண்டு, இந்தப் பாழும் உத்தியோகத்தை ஒழித்துவிட்டுக் கடன்களைத் தீர்த்துக்கொண்டு மானமாய் வாழு. நான் எத்தனை நாள் இருப்பேன்?" என்று மெதுவாக, தடுமாறித் தடுமாறிச் சொன்னாள்.

சிரங்கனுக்குக் கோபம், வியப்பு, பயம், எல்லாம் சேர்ந்தாற்போல் பொங்கி, பிரமையுண்டாகி ஒன்றும் பேசாமல் நின்றான்.

"ஐயோ! குய்யோ!" என்று முனிசாமி தூண்டுதலின்மேல் வீட்டிலுள்ளவர்கள் எல்லாரும் கத்தினார்கள்.

கா

பிறகு, சிரங்கன் ரங்கப் பிள்ளையண்டை வந்து நின்றான். "ஏறு வண்டி, சிரங்கா! முதலியார் வீட்டில் எல்லாம் பேசுவோம்" என்றார் ரங்கப் பிள்ளை.

வண்டி ஏறினதும், "சிரங்கா! அடித்தது உனக்கு அதிர்ஷ்டம். எல்லாரும் பணம் சம்பாதிக்கிறார்கள். நீ மட்டும் என்ன பாவம் செய்தாய்? ஏன் இப்படி உதாசீனமாயிருக்கிறாய்? உனக்கு என்ன வேண்டும், சொல்? நானாச்சு, அதற்கு ஜவாபு" என்

றிவ்வாறெல்லாம் முதலியார் வீடு சேரும்வரை ரங்கப் பிள்ளை சொல்லிக்கொண்டே வந்தார்.

ரங்கப் பிள்ளை முதலியாருடன் தனியாகச் சில நிமிஷம் பேசினர். பிறகு ஒரு வெள்ளைத் துணி முடிப் புடன் வெளியே வந்து, திண்ணைமேல் உட்கார்ந்த சீரங்கன் முன் அதை வைத்து, "சீரங்கா! இதோ, உன் ஆயுளெல்லாம் நீ கஷ்டப்பட்டால் இது கிடைக் கிறது. உன் கடன்கள் எல்லாம் தீர்த்துக்கொண்டு, வியாபாரம் செய். இன்னும் எவ்வளவோ இருக்கிறது. முதலியார் உனக்கு வேண்டியதெல்லாம் செய்வார்" என்ருர் ரங்க பிள்ளை.

சீரங்கன் மௌனமாயிருந்தான்.

வீரராகவ செட்டியார் பையை எடுத்துச் சீரங்கன் மடியில்வைத்து, "எழுந்திரு. சத்தியம் செய், எல்லாம் முடிந்துவிட்டது. இனி ஏன் தாமதம்?" என்ருர்.

சீரங்கன் பணப்பையை எடுத்துக் கீழே வைத்து, ஒரு நிமிஷம் யோசிப்பதுபோல் சும்மா இருந்தான். எல்லாரும் மௌனமாய் அவன் ஏதோ சொல்லுவான் என்று காத்திருந்தார்கள்.

திடீர் என்று சீரங்கன் எழுந்திருந்து, ஒரே குதி யாய்த் திண்ணையிலிருந்து தெருவில் குதித்து ஓடிவிட் டான். சிலர் துரத்திப் போனுர்கள். ஆனல் சீரங்கன் அவர்கள் கண்ணுக்குக்கூட அகப்படவில்லை. திரும்பி வந்து, "ஓடியே போய்விட்டான்" என்ருர்கள்.

முதலியார், பணப்பையை எடுத்து உள்ளே வைத்துவிட்டு, "பார்த்தாயா! ஏமாற்றிவிட்டான், திருடன்" என்ருர்.

"என்ன இருந்தாலும் சாதிப் புத்தியைக் காட்டி விட்டான்!" என்றார்கள் எல்லோரும்.

அடுத்த நாள் முனிசிபல் ஆபீசில் தேர்தல் கூட்டம். மீட்டிங்கில் சீரங்கனைக் காணவில்லை.

"தாயார் செத்துவிட்டாள்" என்றார் சிலர்.

"இல்லை, இல்லை, எல்லாம் மோசம்" என்றார் வேறு சிலர்.

நாகப்பட்டினம் போனவர் திரும்பிவந்து தயாராக இருந்தார்.

"தனபால் செட்டியாருக்கு இருபத்தாறு வோட்டு வரும்" என்றார் ஒருவர்.

"இல்லை, இல்லை. முதலியாருக்குப் பதினேழு, செட்டியாருக்குப் பதினேழுவரும். சீட்டுத்தான் போட வேண்டுமாக்கும்" என்றார் மற்றொருவர்.

"எல்லாம் பணம்" என்றார் ஒருவர்.

"பணம் வாங்கியும் மோசம் செய்வார்கள், திருடர்கள்" என்றார் இன்னொருவர்.

முடிவில் தனபாலு செட்டியாருக்கு இருபத்திரண்டு வோட்டும், முதலியாருக்குப் பத்து வோட்டும், வெறுங் காகிதம் ஒன்றும் விழுந்தன. இந்த முடிவு சொன்னவுடன் "தனபாலு செட்டியாருக்கு ஜே!" என்று வெளியில் கூட்டத்தில் சத்தம் போட்டார்கள்.

"லஞ்சம்! லஞ்சம்!" என்று எதிர்க்கட்சியார் கூப்பாடு போட்டார்கள்.

"சீரங்கன் ஒருவன்தான் யோக்கியன்" என்றார் முதலியார்.

# சோதிடம் பொய்யாகுமா ?

---

திருவிடைமருதூர்ச் சாமிநாதையர் தொண்டைமண்டலம் உயர்தரப் பள்ளிக்கூடத்தில் பன்னிரண்டு வருஷங்களாகத் தலைமை உபாத்தியாயர். அவர் மனைவி அகிலாண்டம்மாளும் அவரும் மிகவும் சந்தோஷமாகக் குடும்ப வாழ்வு நடத்திவந்தார்கள். ஆனால் மனைவிக்கு ஒரு பெருங் குறை, குழந்தை யில்லாதது!

" அதனாலென்ன, அகிலம்! (இப்படித்தான் சாமிநாதையர் தன் மனைவியை அழைப்பது) பள்ளிக்கூடத்தில் இருநூறு குழந்தைகள் இருக்கிறார்கள். அத்தனைப் பேரும் எனக்குக் குழந்தைகள் தான் " என்பார்.

" உங்களுக்கென்ன? பள்ளிக்கூடத்திலிருக்கிறவர்களெல்லாம் உங்கள் குழந்தைகளாயிருக்கலாம். நான் வீட்டில் தனியாகத்தானே இருக்க வேண்டும்! என் வாழ்வைப் பாருங்கள் " என்று மனைவி சொல்லுவாள்.

இதைப்பற்றிய குறை வரவர அகிலாண்டம்மாளுக்கு அதிகமானதைப் பார்த்து, சாமிநாதையர் யாத்திரைபோவதாகத் தீர்மானித்தார். பள்ளிக்கூட நிர்வாக

அதிகாரியிடம் இரண்டு மாதம் விடுமுறை பெற்றுக் கொண்டு தெற்கே பழநி, இராமேசுவரம் முதலிய ஸ்தலங்கள் பார்த்துவிட்டு, மைசூர் தேசத்தில் புத்திர சம்பத்துத் தருவதில் பெயர்போன ஓரிரண்டு அசுவத்த மரங்கள் பிரதட்சணமும் செய்து ஊர் திரும்பினர். அவருடைய ஜாதகம் பார்த்து ஒரு தெலுங்கு சோதிடர் சொல்லியிருந்த வாயிதாவுக்குச் சரியாக அகிலாண்டம்மாள் கருத்தரித்தாள்.

"சோதிடம் பொய்யாகுமா ?" என்றார் சாமிநாதையர். ஆனால், அகிலாண்டம்மாள் அசுவத்தமரப் பூசைதான் இந்தப் பாக்கியம் தந்தது என்று சொல்லுவாள். எப்படியிருந்தாலும் சரி, சுகப் பிரசவமாய் எல்லாம் சரியாக முடிந்தால் பழநிக்கு இன்னொரு தடவை போவதாக விரதம் எடுத்துக்கொண்டு, நாள் கணக்குப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

பல வருஷங்கள் கழித்துக் கருத்தரித்திருக்கிறபடியால் கொஞ்சம் ஜாக்கிரதையாகத்தா னிருக்கவேண்டுமென்று சாமிநாதையருக்கு நண்பர்கள் சிலர் சொன்னார்கள். பிரசவத்திற்கு எழும்பூர் ஆஸ்பத்திரியிலேயே போயிருப்பதுதான் மேல் என்று அவர்கள் எல்லாரும் யோசனை சொன்னார்கள். அகிலாண்டம்மாளின் தாயார் வெகுநாட்களுக்கு முன்பே இறந்துவிட்டாள். அத்தை ஒருத்தி இருந்தாள். அவள் வரக்கூடுமென்று எதிர்பார்த்தார்கள். ஏதோ காரணத்தினால் அவள் வர முடியவில்லை. சரியான சகாயமில்லாதபடியால் பிரசவத்திற்கு ஆஸ்பத்திரி போவதே சரி என்று முடிவாயிற்று.

யாதொரு கஷ்டமும் இல்லாமல் சரியான பருவத்தில் பிரசவமும் ஆயிற்று. சாமிநாதையருடைய சந்தோஷத்தைச் சொல்ல வேண்டியதில்லை. ஆஸ்பத்திரி சிப்பந்திகளுக்கு, பணத்தை வாரி இறைப்பதாக உத்தேசித்தார்.

குழந்தை இரவு ஒன்பது மணிக்குப் பிறந்தது. வழக்கப்படி உடனே அதைக் குளிப்பாட்டி, எடை எடுத்துக் குறித்துக்கொள்வதற்காக, பிரசவம் பார்த்த தாதி குழந்தையை எடுத்துக்கொண்டு போனாள். இதற்காக ஆஸ்பத்திரியில் ஒரு தனி இடம். அதே சமயம் மொத்தம் மூன்று குழந்தைகள் ஆஸ்பத்திரியில் பிறந்தன. தாதிகளுக்கெல்லாம் பேருற்சாகம். தங்களுக்கே புத்திரோத்பவமான மாதிரி அவர்கள் களித்துக் கூத்தாடினார்கள்.

மூன்று குழந்தைகளுக்கும் செய்யவேண்டியது எல்லாம் செய்தார்கள்.

ஒவ்வொரு குழந்தையின் இடுப்பிலும் ஒரு எண்ணிக்கைச் சீட்டுக் கட்டுவது வழக்கம். இல்லாமல் போனால், ஆஸ்பத்திரிகளில் பிறந்த குழந்தைகள் மாறிப் போகுமல்லவா ?

மூன்று குழந்தைகளில் ஒன்று கறுப்பு. மற்ற இரண்டு குழந்தைகளும் அனேகமாகச் சமநிறம், சம எடை.

அகிலாண்டம்மாளின் குழந்தையை எடுத்து வந்த தாதி, அதை அங்கிருந்த மற்ற தாதிகளிடம் ஒப்பித்து விட்டு ஏதோ வேலையாக வேறு இடத்திற்குப் போய் விட்டாள்.

முன்னதாகவே சீட்டுக் கட்டிவிடுவது வழக்கம். அப்படிச் செய்யாமல் வம்பு பேசிக்கொண்டு மறந்து விட்டபடியால், அங்கிருந்த தாதிகளுக்கு எது அகிலாண்டம்மாள் குழந்தை, எது மற்றொன்று என்பதில் சந்தேகம் ஏற்பட்டது. கறுப்புக் குழந்தையைப் பற்றி தகராறு இல்லை. மற்ற இரண்டு குழந்தைகளைப் பற்றி ஒருவாறு தீர்த்துக்கொண்டு, சீட்டுகள் கட்டிவிட்டார்கள். அகிலாண்டம்மாள் குழந்தை ஒரு மாற்று அதிக வெளுப்பு. எட்டாவது வார்டில் படுத்திருந்த முஸ்லீம் பெண் கொஞ்சம் கறுப்பு. குழந்தையும் அப்படித்தானிருக்கும் என்று தாதிகள் தீர்மானித்தார்கள். கொஞ்சம் அதிக வெளுப்பு என்று தோன்றிய குழந்தையை அகிலாண்டம்மாளிடம் கொண்டுபோய் ஒப்பித்துவிட்டார்கள். ஒரு தகராறும் ஏற்படவில்லை.

"எத்தனை அழகாக இருக்கிறது! உங்கள் குழந்தை ஏழு ராத்தல் எடை. இது உங்கள் முதல் குழந்தையா ?" என்றாள் தாதி. அவள் ஒரு பிரெஞ்சு வெள்ளைக்காரி.

"ஆமாம்" என்றார் சாமிநாதையர். அவரும் அங்கே அப்போது இருந்தார். சொல்லிவிட்டு மனைவியைப் பார்த்தார். அவள் சோர்ந்து படுத்திருந்தாள். அவளுடைய அகமகிழ்ச்சி முகத்தில் புன் முறுவலாக மலர்ந்தது. தன் வாழ்வு பயன்பெற்றதாயிற்று என்று அப்போது அவள் அடைந்த ஆனந்தத்திற்கு அளவேயில்லை.

"குழந்தை திடமாக இருக்கிறதா ?" என்றார்.

"ஓ, இன்று பிறந்த மூன்று குழந்தைகளில் இது தான் முதல்தரமானது" என்றாள் தாதி ஆங்கிலத்தில்.

இதைச் சாமிநாதையர் அகிலாண்டம்மாளுக்குத் தமிழில் மொழிபெயர்த்துச் சொன்னார்.

இதற்குள் குழந்தையை முதலில் எடுத்துப்போன தாதி வந்தாள். அவளும் குழந்தையை எடுத்துச் சீராட்டிவிட்டு, இரண்டு தாதிகளும் வெளியே போனார்கள்.

"தொப்புளுக்குப் பக்கத்தில் ஒரு மச்சம் இருந்ததே, அது எப்படி இவ்வளவு சீக்கிரம் மறைந்து போயிற்று?" என்றாள் முதல் தாதி.

"அதுவா இவள் குழந்தை? அது எட்டாவது வார்டு அல்லவோ போய்விட்டது! அது முஸ்லீம் பெண் குழந்தை என்று எண்ணிச் சீட்டுக்கட்டினேம்" என்றாள் இரண்டாம் தாதி.

முதல் தாதி, "சரி, இனிமேல் பேசாதே, சும்மா இரு."

இரண்டாம் தாதி, "சீ, பாவம்! உனக்கு ஞாபகம நிச்சயமாக இருந்தால் மாற்றிக்கொடுத்து விடலாமே!" என்றாள்.

முதல் தாதி "பைத்தியக்காரி! அப்படியெல்லாம் செய்தால் வம்பு ஆகும். நம் வேலை போய்விடும். தாயார் இரண்டு பேருக்கும்கூட சந்தேகமும் மன வருத்தமும் உண்டாகும். பேசாமலிரு" என்றாள்.

அப்படியே ஒரு கலவரமுமில்லாமல் பன்னிரண்டு நாட்கள் ஆஸ்பத்திரியில் இருந்துவிட்டு, ஆண்டர்ஸன் தெருவில், அப்துல் தையாப்ஜி சேட்டு மனைவியும்,

திருவல்லிக்கேணியில் அகிலாண்டம்மாளும், தத்தம் வீடுகளுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இரண்டு குழந்தைகளும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கப் பெற்றன. சேட்டு வீட்டில் ஏராளமான செல்வமும் சௌகரியமும். சாமிநா தையர் வீட்டிலோ கரைகடந்த அன்பும் சந்தோஷமும் நிறைந்து, சேட் வீட்டுக் குழந்தைக்கு எள்ளளவும் குறையவில்லை, வாத்தியார் வீட்டுக் குழந்தைமேல் செலுத்திய கவனமும் கருத்தும்.

குழந்தைக்கு ஒரு மாதம் ஆனபின் அகிலாண் டம்மாளின் அத்தை வந்தாள். குழந்தையின் கண்கள் தன் அண்ணன் முத்துசாமியின் கண்ணே தான், பிரத்தியட்சம என்றாள், மூக்கு மட்டில் சாமிநாதையர் வீட்டு மூக்கு என்றாள் இதில் சாமிநாதையருக்குக் கொஞ்சம திருப்தியே இரண்டிலும் அகிலாண்டம் மாளுக்குத் திருப்தியே.

தையாப்ஜி சேட்டு வீட்டிலும் இவ்வாறே. ஆனால் அங்கே நடந்த சம்பாஷணைகள் நான் நேரே கேட்க வில்லை.

இருபத்திரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு. இப் போது அப்துல் தையாப்ஜி சேட்டு இறந்துபோய், மகன் சுலேமான் சேட்டு, சிறுவயதிலேயே மிகுந்த சாமர்த்தியமாய் தகப்பனார் வைத்துப்போன பெரிய இறக்குமதி வியாபாரத்தை நடத்தி வருகிறார்.

சாமிநாதையர் மகன் பெயர் அசுவத்த நாரா யணன். எஸ். எஸ். எல். ஸிக்குமேல் என்ன கஷ்டப் பட்டாலும் அவன் படிப்பு ஏறமுடியவில்லை. பம்பா யிக்குப்போய், இரண்டு மாதம் அங்கே நண்பர்களுடன்

இருந்துகொண்டு பொர்சுகள் சம்பாதித்து, எங்கெங் கேயோ தேடிப்பார்த்தும் வேலை ஒன்றும் கிடைக்கா மல் திரும்பி வந்தான். அவனைப்பற்றிச் சாமிநாதைய ருக்கு எப்போதும் கவலை. தெலுங்கு சோதிடன் எழுதிக்கொடுத்திருந்த குறிப்பில், "மகன் பெரிய வியாபாரியாவான்; பாக்கிய சாலி; ஆனால் தாய் தகப்பனுக்கு ஒரு பிரயோசனமுமில்லை" என்று எழுதியிருந்தது.

"எனக்கும் உனக்கும் ஒரு பிரயோசனமும் இல்லாவிடினும். அவன் நன்றாயிருந்தால் போதுமே. சோதிடம் எல்லாம் பொய்" என்றார் சாமிநாதையர்.

"பொய் என்று சொல்ல முடியுமா? எழுதி யிருந்தபடி குழந்தை பிறக்கவில்லையா? பகவான் எழுத்துப் பொய்யாகுமா? இன்னும் என்ன வரும், என்ன வராது என்று யாருக்குத் தெரியும்? ஒரு செட்டியாரிடம் சேர்த்துப் பாருங்கள். வியாபாரத்தில் கெட்டிக்காரனைத் தேர்ந்தாலும் தேறுவான்" என் றாள் அகிலாண்டம்மாள்.

சோதிடம் பொய்யாகுமா?



# ராயப்பன்

---

ராயப்பன் எங்கள் விற்பனைப் பையன்களுள் ஒருவன். கிறிஸ்தவப் பையன். ஆனால் அவன் வழக்கம், இரவில் எங்கேயாவது ஒரு விநாயகரைத் தொழுது விட்டு அங்கேயே விநாயகருக்குப் பின் படுத்துத் தூங்கிவிடுவான். வேறு நல்ல இடம் சொன்னாலும் அங்கே படுக்கமாட்டான்.

"ஏன் இவ்வாறு செய்கிறாய்?" என்று கேட்டால் சும்மா சிரிப்பான். ரொம்ப வற்புறுத்தினால், "அது தான் எனக்கு மனம்நிம்மதி" என்பான்.

"உங்கள் அப்பா கிறிஸ்தவராயிருந்தாரா, அல்லது நீ அதில் சேர்ந்தாயா?" என்று சிலர் கேட்பார்கள். "நானே சேர்ந்தேன்" என்று அகங்காரமாகச் சொல்லிவிட்டு, பேப்பர் விற்க ஓடிப்போவான்.

* * * *

கிருஷ்ணகிரித் தாலூகா பஞ்சுப்பட்டி கர்ணம் கந்தசாமி அய்யருக்குக் குழந்தை பிறந்த ஆறுவது மாதத்தில், மனைவி ஊருக்கு வெளியே 'பிசாசு குட்டை'

யில் கால் கழுவி ஏறும்போது கால் வழுக்கிவிட்டு, "ஐயையோ! குழந்தைக்கு என்ன கதி!" என்று கத றிக்கொண்டு மூழ்கிவிட்டாள். கந்தசாமி அய்யர் சில வருஷங்கள் கழித்து மறு விவாகம் செய்துகொண் டார். கொஞ்ச காலம் சரியாக நடந்து வந்தது. பிறகு பையன் வேங்கடராயனுக்கும் சித்திக்கும் பிடிக்க வில்லை. காரணமில்லாமல் துவேஷம் முற்றிப் போயிற்று. சொன்னதைக் கேட்கமாட்டேன் என் கிறுன் என்று அவள் அடிப்பாள். தகப்பனுரிடம் அழுதுகொண்டு போவான். அழுவதைக் கண்டு அவ ரும் அடிப்பார். "நீ நாசமாகப் போக" என்பார். குழந்தைக்கு இது ஒன்றும் விளங்கவில்லை. தெரு நாயை யாராவது அடித்தோ, கல் வீசியோ தொந்தரவு செய்து, அது கத்திக்கொண்டு ஓடிப்போவதைக் கண் டால் வேங்கடராயன், "அந்த நாய், பாவம், என்னைப் போலவே கஷ்டப்படுகிறது" என்று அதையே பார்த் துக்கொண்டு நிற்பான். வேங்கடராயனுக்கு வயது ஏழு ஆயிற்று. பள்ளிக்கூடத்திற்கும் போய் வந்து கொண்டிருந்தான். ஆனல் அவனுக்குப் படிப்பில் மனம் செல்லவில்லை. வாத்தியார்கள் அதட்டிப் பார்த் தார்கள்; கொஞ்சம் அடித்தும் பார்த்தார்கள். "சுத்த மக்கு, ஒன்றுக்கும் பயனில்லை" என்று தீர்மானித்து, போன போக்கில் விட்டுவிட்டார்கள்.

* * * *

ஒருநாள் மற்ெருரு பள்ளிக்கூடப் பையன், சவுரி முத்து என்பவன், வேங்கடராயனைத் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனுன். போய்ச் சேரும்போது அந்தப் பையனுடைய தாயார் வீட்டு வாசலில் காத்

துக் கொண்டிருந்தாள். மகன் வந்ததும், "முத்து! வந்தாயா?" என்று அணைத்து முத்தமிட்டு வீட்டுக்குள் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போனாள்.

"இவன் யார், உன்கூட?" என்று கேட்டாள்.

"என்னோடு படிக்கும் பையன், கர்ணம் அய்யரின் மகன். சும்மா அழைத்து வந்தேன். இவனுக்கும் பட்சணம் கொடு" என்றான் சவுரி.

சவுரிமுத்து வீட்டில் வேங்கடராயன் கண்டதெல்லாம் அவனுக்கு வியப்பாக இருந்தது. இரண்டு மூன்று நாள் சவுரியுடன் அவன் வீட்டுக்குப் போய் வந்தான்.

"சவுரி தாயாரைப்போல் ஏன் என் தாயும் அன்பாக இருக்கமாட்டேன் என்கிறாள்? சவுரியின் தாயார் போல் எனக்கும் ஒரு தாயார் இருக்கக்கூடாதா?" என்று யோசிக்கலானான். பிறகு ஒருநாள் சவுரியை தனியாக அழைத்துப் போய், "சவுரி! தாயார்கள் எப்படி உண்டாகிறார்கள்? உனக்கு எப்படி உன் அம்மா கிடைத்தாள்?" என்று கேட்டான்.

சவுரிமுத்துவுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. குழந்தைகளுக்குத் தாய்மார்கள் எப்படி வந்து சேருகிறார்கள் என்பது அவனுக்கும் தெரியவில்லை. கடைசியாக, "கடவுள் கொடுக்கிறார். உனக்கு ஏனோ ஆண்டவன் நல்ல தாயாரைக் கொடுக்கவில்லை. அவருக்கு உன்மேல் கோபம் போலிருக்கிறது" என்றான்.

பிறகு சவுரியின் தாயாரும் வந்து சேர்ந்தாள்.

"அம்மா! இந்தப் பையன் தாயார் இவனை ரொம்ப அடிக்கிறாளாமே! ஏனம்மா இப்படி? பாவம்,

இவனுக்கும் உன்னைப்போல் ஒரு நல்ல அம்மா கிடைக்கக்கூடாதா ?" என்றான் சவுரி.

மேரியம்மாள் சிரித்துவிட்டு, வேங்கடராயனைப் பார்த்து, " நீ நல்ல பையனாக இருந்தால் உன் தாயும் உன்னை அடிக்கமாட்டாள் " என்றாள். சொல்லிக் கொண்டே தன் மகன் முகத்தைத் தடவி, உச்சிமேல் ஒரு முத்தமிட்டாள்.

"எனக்கு எப்போ என் தாயார் வந்தாள் ? சவுரிக்கு நீங்கள் எப்போ வந்தீர்கள் ? " என்றான் வேங்கடராயன்.

மேரியம்மா மறுபடியும் குலுங்கச் சிரித்து, "பாவம், பையனுக்கு ஒன்றும் தெரியாதுபோலிருக்கிறது! அப்பனே, உன் தாயார் நீ சிறு குழந்தையாக இருக்கும்போதே பிசாசு குட்டையில் கால் வழுக்கி முழுகிப் போய் செத்துப் போனாள். உன் தகப்பனார் கர்ணம் அய்யர் மறு கல்யாணம் செய்துகொண்டார். நானும்கூட வெற்றிலை பாக்குக்குப் போயிருந்தேன். உன்னை அடிப்பது உன் தாயார் அல்ல. உன் தாயார் இறந்து போய்விட்டாள் " என்றாள்.

" என் அம்மா இப்போது எங்கே இருப்பாள் ? " என்று கேட்டான் வேங்கடராயன், கண்களை அகலத் திறந்துகொண்டு.

"அப்பா, குழந்தாய், நீ தேவனை வேண்டிக் கொள். உன் அம்மா உன்னிடம் வருவாள்" என்றாள்.

" தேவன் யார் ? அவனை எங்கே வேண்டிக்கொள்ளலாம் ?" என்றான் வேங்கடராயன்.

"அப்பனே, பார்! அதோ படம்!" என்று சுவ ரில் உயரத்தில் தொங்கிய ஏசு கிறிஸ்துவின் தாயான மேரியம்மையின் படத்தைக் காட்டினுள்.

வேங்கடராயன் வெகு நேரம் படத்தைப் பார்த்த வண்ணமாகவே நின்றான். அந்தப் படம் அவனுக்கு ஒரு புது உயிர் தந்தது. பிறகு வீட்டுக்குப் போகப் புறப்பட்டான். வழியில் மாதாகோயில். அங்கே சென்று ஜன்னல் வழியாக உள்ளே எட்டிப் பார்த் தான். அங்கேயும் சுவரில் ஒரு பெரிய படம் இருந் தது. அதையே பார்த்துக்கொண்டு நின்றான். வர வர சித்திரம் உயிர்கொண்டு சுவரிலிருந்து அன்பே உருக்கொண்டாற்போல் ஒரு ஸ்திரீ கீழே இறங்கி ஞள். மறு நிமிஷம் அவன் பக்கத்தில் நின்றாள். தான் வேண்டியவாறு தன் தாய் வந்துவிட்டாள் என்று எண்ணிஉள்ளம் பொங்கினன்.

"அப்பனே, குழந்தாய் வேங்கடராயா!" என் ருள். ஆகா, அந்தக் குரலோ! தன் முகத்தின்மேல் அவள் கையால் தடவித் திண்டியபோது பரவசமடைந் தான். தன் தாயை அடைந்து விட்டான் வேங்கட ராயன்! கட்டி யணைத்து முத்தமிட்டாள். "வா, என்னேடு" என்று எங்கேயோ அழைத்துப் போனுள். வெகு தூரம் நடந்து போனார்கள். அங்கங்கே நின்று, பையனைத் தூக்கிக் கட்டி யணைத்து முத்தமிடுவாள். "அப்பா! இவ்வளவு நாள் கஷ்டப்பட்டாயே! ஏன் என்னை முந்தியே கூப்பிடவில்லை?" என்றுள்.

"எனக்குத் தெரியவில்லையம்மா" என்று வேங்கட ராயன் சொல்லி அழுதான். "அழாதே!" என்று தன் சேலைத் தலைப்பால் அவன் கண்ணைத் துடைத்தாள்.

வெகுதூரம் நடந்தபின், பாதிரியார் வீடு வந்தது. தோட்டத்திற்குள் வீடு. கேட்டண்டை வேங்கட ராயன் நின்று, "இது நல்ல இடம். இங்கேயே தோட்டத்தில் உட்கார்ந்துகொண்டு காலங் கழிக்கலாம். வீட்டுக்குப் போனால் அவள் திட்டுவாள்" என்றான். இப்படிச் சொல்லிவிட்டு, கேட்டுக்குள் நுழையப் போனான்.

"அங்கே போக வேண்டாம்" என்று தாயார் அவனைத் தடுத்தாள்.

"ஏன்? போனால் என்ன?" என்றான் வேங்கட ராயன்.

"வேண்டாம்! யாராவது வருவார்கள், வந்தால் நான் இருக்க முடியாது. போய்விடுவேன்" என்றாள்.

"தாகமா யிருக்கிறது. தோட்டத்துக் கிணற்றில் தண்ணீர் குடித்துவிட்டு வரலாம். வா, போகலாம்" என்று அவள் கையைப் பிடித்துக்கொண்டு கேட்டுக்குள் சென்றான்.

"குழந்தாய்! நீ யார்?" என்று பாதிரியார் சொல்லி, வாயிலிருந்த சுருட்டைக் கையில் எடுத்த படியே பக்கத்தில் நெருங்கினார். தாயார் மறைந்து போனாள்!

"அம்மா! அம்மா!" என்று வேங்கடராயன் ஒரு பெரிய கூக்குரலிட்டான். "எங்கே போனாய்? வா! வா!" என்று பாதிரியாரைக் கவனியாமல் கத்திக் கொண்டு இங்குமங்கும் தோட்டத்தில் மரங்களுக் கிடையே ஓடினான்.

பாதிரியார் பையனைச் சமாதானஞ் செய்து வீட்டுக்குள் கூட்டிக்கொண்டு போய் உட்கார வைத்துத்

தண்ணீர் கொடுத்து, "குழந்தாய், நீ யார்?" என்று விசாரிக்கலானார். பையனுக்கு நல்ல சுரம்.

* * * *

"குழந்தாய்! ஏசுநாதர்தான் நம்மை ரட்சிப்பார். அவரே தேவனின் ஒப்பற்ற ஒரு மகன். அதோ பார் அவர் படம். அவர் உன்னை ரட்சிப்பார். அதோ பார், அவரை இவ்வுலகில் பெற்ற புனிதமான தாயார் மேரியம்மை. இவள்தான் உன்மேல் பிரியமும் கருணையும் கொண்டு உன்னை இங்கே அழைத்து வந்துவிட்டுப் போனாள்."

"இல்லை, இல்லை. அவள் என் அம்மா. மேரியம்மை யல்ல. அவளை நான் தேடிப் பிடிப்பேன். அவளைக் காணாமல் நான் இருக்கமுடியாது" என்று கதறிக்கொண்டு வெளியே சுரத்துடன் ஓடிப்போனான். இருட்டு. பாதிரியார் பின்தொடர்ந்து போகவில்லை.

இங்குமங்கும் அலைந்து வண்டிப்பேட்டை விநாயகர் மண்டபத்தை யடைந்தான். அங்கே ஒருவருமில்லை. அது சந்தை நாளல்ல. பிள்ளையார் முன் யாரோ ஏற்றி வைத்திருந்த ஒரு சிறு விளக்கு மினுக்கு மினுக்கென்று எரிந்துகொண்டிருந்தது. அவ்விடம் போய் வேங்கடராயன் கீழே விழுந்தான். "அம்மா! அம்மா!" என்று மெதுவாகச் சொல்லிக்கொண்டே கிடந்தான். பிறகு தூங்கிப்போனான். நள்ளிரவில் திடீர் என்று எழுந்து உட்கார்ந்தான். தாயும் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள்!

"அம்மா!" என்று கெட்டியாய்ப் பிடித்து அணைத்துக்கொண்டான். "என்னை விட்டுப் போகமாட்டாயே?" என்று கதறினான்.

"இல்லே, இல்லே" என்று அவள் இவனுடைய முகத்தைத் தடவி முத்தமிட்டாள். "நீ தினமும் இங்கேயே வந்து படுத்துக்கொள். நானும் வருவேன். பகலில் நான் வரமுடியாது" என்ருள். விடியற் காலம் வெளிச்சத்திற்குமுன் மறைந்து போனுள்.

அன்று முதல் வேங்கடராயன் வண்டிப்பேட்டைப் பிள்ளேயார் மண்டபத்தில்தான் படுப்பது. அவன் முகத்தில் ஒரு புதிய காந்தி உண்டாயிற்று. பகலெல்லாம் கண்டபடி பாடித் திரிந்துகொண்டிருப்பான். பையனுக்குப் பித்துப் பிடித்துவிட்டது என்று ஊரார் பரிதாபப்பட்டார்கள். வேங்கடராயனே ஆனந்தக் கடலில் குளித்து விளேயாடித் திரிவான். இரவு வண்டிப்பேட்டை விநாயகரை மூன்று தரம் சுற்றிக் கும்பிட்டு அங்கேயே படுப்பான். தாயாரும் தவருமல் வந்துவிடுவாள். இப்படியே பல நாட்கள் சென்றன.

* * *

"ஐயோ, பாவம்! இந்தச் சின்னஞ் சிறுகுழந்தை இப்படியாயிற்றே?" என்று குளத்தங்கரையில் தாய்மார்கள் மெதுவாகப் பேசுவார்கள்.

"வெறும் வேஷம்" என்பாள் கந்தசாமி அய்யர் மனேவி.

"வேஷமோ, எதுவோ, பகவானுக்குத்தான் தெரியும்" என்று கந்தசாமி அய்யர் மனதை ஸ்திரப் படுத்திக்கொள்ளப் பார்ப்பார். ஊரில் மற்றக் குழந்தைகளேக் கண்டால் அவருக்கு வெறுப்பும் கோபமும் வரும்.

* * * *

ஒருநாள் வேங்கடராயன் வழக்கம்போல் மண்டபத்திற்குப் படுக்கப் போனுன், பிள்ளேயாரைக் காண

வில்லை! மண்டபமும் பிரிந்து கீழே கல்லும் கம்பமு மாய்க் கிடந்தது. யாரோ ஒரு செட்டியார் புண்ணியம் சம்பாதிக்கக்கோயிலைப் பிரித்துத் திருப்பணிப் செய்யத் தீர்மானித்து வேலை துவக்கப்பட்டது. பிள்ளையாரை அப்படியே எங்கேயோ கொண்டுபோய் வைத்திருந் தார்கள்.

பிரித்துப் போட்ட மண்டபத்துக் கற்களுக் கிடையே வேங்கடராயன் இரவெல்லாம் தூங்காமல் மௌனமாக உட்கார்ந்திருந்தான். அன்று தாயார் வரவில்லை. பித்தமும் தெளிந்துவிட்டது. உலகம் பழையபடி அன்பு வற்றி நின்றது!

* * * *

ஒரு நாள் வேங்கடராயன் மாதா கோயிலுக்குப் போனான். பழைய ஜன்னலில் எட்டிப் பார்த்தான். சுவ ரில் மேரியம்மை படத்தைக் கண்டான். தன் தாய் மாதிரித்தான் இருந்தது. ஆனால் படத்திலிருந்து இப்போது யாரும் இறங்கிவரவில்லை. சித்திரம் சித்திர மாகவே நின்றது.

* * * *

பல நாள், பிரித்துப் போட்ட மண்டபத்தண்டை யும் மாதா கோயிலண்டையும் ஏதோ கெட்டுப்போன பொருளைத் தேடுவதுபோல் தேடித் தேடித் திரிந்தான். ஒருநாள் பாதிரியாரண்டை மறுபடியும் போனான்.

"சாமி! நான் கிறிஸ்தவனாகப் போகிறேன்" என்றான்.

பாதிரியார் பையனை மிகவும் அன்புடன் அழைத்து விசாரித்தார்.

* * * *

பாதிரியாரும் கர்ணம் கந்தசாமி அய்யரும் பேசுகிருர்கள் :

"ஐயரே, மேரியம்மையின் கருணையினுல் உங்கள் மகனுக்குப் பைத்தியம் சுவஸ்தப்பட்டது. அவன் ஞான ஸ்நானம் அடைய வேண்டுமென்று கேட்கிருன். ஆண்டவன் இச்சைக்கு நாம் தடைசெய்யலாகாது."

"ஐயோ, நாங்கள் பிராமணர்கள் ஆயிற்றே? இது முடியாது."

பாதிரியார் அதன்மேல் வற்புறுத்தவில்லை, விட்டு விட்டார்.

* * * *

"போனுல் போகட்டுமே! இதற்கு வேறு விமோசனமில்லை. வேஷமோ உண்மையோ, பைத்தியம் நீங்கி எங்கேயாவது சுகமாக இருக்கட்டும். ஒப்புக்கொள்ளுங்கள்" என்ருள் அய்யர் மனைவி.

"ராம, ராம! அப்படிச் சொல்லாதே" என்ருர் கந்தசாமி அய்யர்.

பிறகு ஒருநாள் பையனை ஊரில் காணேம். எங்கேயோ மறைந்து போனுன். சென்னையில் வேறு ஒரு பெரிய பாதிரியாரிடம் ஞான ஸ்நானம்பெற்று வேங்கடராயன் 'ராயப்ப'ஞகிவிட்டான். பேப்பர் விற்கும் பையனுக அமர்ந்தான். தாய் தகப்பனுருக்குச் சங்கதி தெரியாது.

கிறிஸ்தவனுனுலும் ராயப்பன், பிள்ளையாரின் கல் விக்கிரகம் எங்கே கண்டாலும் நின்று கைகூப்பிச் செல்லுவான். இரவு தூங்குவது ஏதாவது ஒரு விநாயகருக்குப் பக்கத்தில்தான். இன்னும் தாயாரை எதிர்

பார்த்துக் கொண்டிருக்கிறான் போல்தானிருக்கிறது. மற்றப் பேப்பர் பையன்களுக்கு இவன்மேல் மிகவும் பிரியம்.

* * * *

"கதைக்குக் காலில்லை. ஆனால் கருத்திருக்க வேண்டுமல்லவா? கருத்தென்ன? கொஞ்சம் விளக்கினால் நன்றாக விருக்கும்" என்றான் விகடன்.*

"ஒரு கருத்துமில்லை. மனதுக்கு நிம்மதி. அவ்வளவுதான்!" என்று சிரித்தார் ராஜாஜி.

"என்ன ராயப்பன் சிரிப்பு சிரிக்கிறீர்? ஒருவேளை மறு விவாகம் கூடாது என்ற பிரசாரமோ?"

"இல்லை, இல்லை. விவாகம் எப்போதும் நல்லது."

"விநாயகர் பூசை மிகவும் நல்லது என்ற பிரசாரமோ?"

"எந்தப் பூசையும் நல்லதுதானே? அப்படியும் வைத்துக்கொள்ளலாம்."

"ஒருவேளை மாற்றாந் தாய்களுக்கு எச்சரிக்கையோ?"

"உங்கள் பத்திரிகையை மாற்றாந் தாய்கள் படிப்பது உண்டோ? அப்படியானால் ரொம்ப நல்லது."

"இந்தக் காலத்தில் சொந்தத் தாய்மார்களைக் காட்டிலும் இரண்டாம் தாரங்களே குழந்தைகளை அக்கறையோடு கவனிக்கிறார்களே?"

"இருக்கலாம், காலம் மாறிப் போயிற்று. ஆனால் மாற்றாந்தாய்ப் பான்மையைப் பல உருவத்தில் காண

---

*இந்தக் கதை முதலில் ஆனந்த விகடன் பத்திரிகையில் வந்தது.

லாம். ஒரு சிறு குழந்தையை மருமகளாகப் பெற்ற மாமியாரும் ஒரு மாற்றாந் தாய்தான். ஒரு வேலைக் காரக் குழந்தையைக் கூலிக்கென்று அழைத்துக் கொண்ட எஜமானியம்மாவும் ஒருவித மாற்றாந் தாய் தான். நாய்க்குட்டியை வளர்க்கும் ஒரு பெரிய மனி தரும் மாற்றாந் தாய் தருமத்தில்தான் நிற்கிறார். வளரும் உடலும் உள்ளமும் கொண்ட எந்த ஒரு ஜீவனும்—அதைப் பாதுகாத்து வரும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட ஆணோ பெண்ணோ யாராயினும் சரி—மாற்றாந் தாயும் குழந்தையுமாகத்தான் அமைந்து நிற்கிறார்கள். பெற்ற தாயின் அன்பு ஒன்றே இயற்கை அன்பு. மற்ற அன்புவகைகளுக்கு அதுவே ஆதரிசமும் ஆகும். மற்றவர்கள் எல்லாரும் வெகு ஜாக்கிரதையாகவும், பகுத்தறிவுடனும், தெய்வ பக்தி யுடனும் தாய்போல் நடந்துகொள்ளவேண்டும். வள ரும் குழந்தையின் உடலுக்கு நெய் வேண்டும். குழந் தையின் வளரும் உள்ளத்திற்கு அன்பே நெய் ஆகும்; அதை ஊட்டாவிடின் உள்ளம் வறண்டு போகும்."

"தலை வலிக்கிறது. தயவு செய்து சொற்பொழிவை நிறுத்துங்கள். எங்கள் பேப்பர் பையன்களை நாங்க ளென்னவோ கூடிய அளவு அன்போடுதான் கவனித்து வருகிறோம். கொஞ்சம் குறும்புக்காரப் புள்ளிகள் தான். ஆனாலும் பொறுமையை இழக்கமாட்டோம்."

"ரொம்ப சந்தோஷம். ராயப்பனை நன்றாக விசாரித்துக் கொள்ளுங்கள். சில சமயம் அவன் விளங்காதவாறு நடந்துகொண்டால் கோபித்துக் கொள்ளாதீர்கள்; விநாயகர் கோயிலுக்கு அனுப்பி விடுங்கள்."

# பச்சாத்தாபம்

---

சீதை அசோக வனத்தில் பல இரவுகள் கண் விழித்து, ஒருநாள், தானும் அறியாமல், பாவம், தூங்கி விட்டாள்.

*          *          *          *

அசோக வனத்தில் தவித்துக்கொண்டிருந்த காலத்தில் சீதைக்கு அடிக்கடி லக்ஷ்மணனுடைய ஞாபகமே வரும். என்ன காரணமோ, எப்போதும் இராமனை நினைத்துக் கொண்டிருந்தாலுங்கூட, அடிக்கடி லக்ஷ்மணன் வந்து அவள்முன் நிற்பதுபோலும், கண்களில் நீர் ததும்ப, " மன்னி! இப்படி நீ என்னைச் சொல்லலாமா? " என்று பார்வையினாலேயே சொல்லுவதுபோலும் தோன்றும். இதை அவளால் சகிக்க முடியவில்லை. சிறைப்பட்டுக் கிடக்கும் துக்கத்தைவிட இது அவளை அதிகமாக வருத்திற்று. " ஐயோ! தம்பியைச் சொல்லக்கூடாத சொல்லைச் சொல்லி ஒரு குற்றமும் அறியாத அவன் மனதை நோகச் செய்தேனே! அரக்கன் என்னைத் தூக்கி வந்த பாவத்தை

விட, தம்பிக்கு நான் செய்த பாவமே பெரிது!" என்று எண்ணி யெண்ணிப் பரிதபிப்பாள்.

இவ்வாறு நினைந்து நினைந்து வருந்திவந்தபடியால் அவள் அன்று கண்ணயர்ந்தபோது கனவில் திடீர் என்று லக்ஷ்மணன் அசோக வனத்தில் வந்து குதித்ததுபோல் கண்டாள்

லக்ஷ்மணனைக் கண்டதும் சீதைக்கு ஒரே சந்தோஷ பரவசம், தாங்க முடியவில்லை.

"ஆ! வந்தாயா, தம்பி? நான் பட்ட கஷ்டமெல்லாம் கனவா?" என்று ஆனந்த பாஷ்பம் சொரிந்தாள்.

"வந்துவிட்டேன், மன்னி! இனிப் பயமில்லை, துயரமில்லை. நான் உன்னை விட்டுப் போனது பெரும் பாவம். நீ என்னை மன்னிக்க வேண்டும்" என்றான் லக்ஷ்மணன்.

பிறகு சிரித்துக்கொண்டு, "ஆனாலும் மன்னி! நீ என்ன மூர்க்கத்தனம் செய்துவிட்டாய், எவ்வளவு ஆபத்தாயிற்று!" என்றான்.

லக்ஷ்மணன் அப்போது சிரித்த சிரிப்பு காலைப் பனிமேல் சூரிய கிரணம் படும் காட்சியாக இருந்தது. துக்கமும் கண்ணீரும் சிரிப்பும் சந்தோஷமும் கலந்த அந்த சிரிப்பின் அழகை எப்படி எழுத முடியும்?

"நான் செய்தது தவறுதான், தம்பி. ஆனால் நீ என்னை அப்படித் தனியாய் விட்டு விட்டுப் போகலாமா? நான் என்னதான் திட்டினாலும், நீ அண்ணனுக்குச் செய்த பிரதிக்ஞை தவறலாமா? நான்தான் புத்தி கெட்டுப்போய் வாயால் சொல்லக்கூடாத

பேச்சைச் சொன்னேன். அதற்காக நீ உன் அண்ண னுக்குக் கொடுத்த வாக்கை மீறலாமா?" என்றாள் சீதை.

*  *  *  *

"என்ன வாக்கு? எந்தப் பிரதிக்ஞை? இராம னுக்கு ஏதாவது நீ வாக்குத் தந்ததுண்டா? நான் கேள்விப்படவில்லையே?" என்றார் நாரதர்.

["நாரதர் இப்போது எங்கேவந்தார்? அவரைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே?" என்று வாசகர் கேட்கலாம். கனவில் நடக்கும் சம்பவங்களைப்பற்றி இவ்வாறெல்லாம் கேள்விகள் கேட்கக் கூடாது. நாரதர் எப்படியோ வந்து சேர்ந்தார். அது அவரு டைய வழக்கம். இது புராணம் படித்தவர்களுக் கெல்லாம் தெரியும்.]

"வாக்குக் கொடுக்கவில்லையா? இதென்ன இப் படிப் பெரியவர் நீரும் பேசுகிறீர்?" என்றாள் சீதை. உலக மாதாவான சீதைக்கு நாரதரைக் கண்டால் என்ன பயம்?

சீதை கேட்டதற்கு, நாரதர், "உன் பேச்சைக் கேட்டு, தம்பியை இங்கே இரு என்று சொல்லிவிட்டு இராமன் ஒரே ஓட்டமாய் மானைத் தொடர்ந்து போய் விட்டான். தம்பி என்ன சொல்லுகிறான் என்பதையும் கூட நின்று கேட்காமல் ஓடினானே. லக்ஷ்மணன் தன் வாயால் ஒரு பிரதிக்ஞையும் செய்யவில்லையே" என்றார்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த லக்ஷ்மணன் சிரித்தான். "இப்படியெல்லாம் வாதிப்பது எனக்குப்

பிடிக்கவில்லை. இது ஒருவேளை ரிஷிகளுக்குச் சரியா யிருக்கலாம். நான் க்ஷத்திரியன், எனக்குப் பொருந் தாது. 'இரு' என்று அண்ணன் சொல்ல, நான் குடிசை வாயிலில் நின்றதே பிரதிக்ஞை" என்றான் லக்ஷ்மணன்.

"இவனை நம்பியல்லவோ, அவர் போய்விட் டார்?" என்றாள் சீதையும்.

"நீங்கள் இருவரும் இவ்வளவு சுலபமாக ஒப்புக் கொண்டால் எனக்கென்ன ஆட்சேபணை? உங்கள் பாடு" என்றார் நாரதர்.

* * * *

"நான் திட்டிவிட்டால் உனக்கு என்ன நேர்ந்து விட்டது?" என்றாள் சீதை; "ஏன் ஊரைவிட்டு அரண்மனையைவிட்டுக் காட்டுக்கு வந்தோம், சத்தியத் திற்குப் பயந்து அல்லவா? பரதன் சொன்னதையும் மறுதளித்து, ஊரார் சொன்னதையும் நிராகரித்து வனவாசம் கொண்டது பிரதிக்ஞையைக் காப்பாற்ற வல்லவா?" என்றாள்.

"பொறுக்க முடியாத சொல்லைச் சொல்லி என் இதயம் துடிக்கச் செய்தாயே?" என்றான் லக்ஷ்மணன், கொஞ்ச நேரம் பொறுத்து.

"ஊரெல்லாம் திட்டினாலும் நீ இடத்தைவிட்டு நகரலாமா?" என்றாள் சீதை.

"ஆம், மன்னி, நீ சொல்வது சரியே. அன்று உன்னை விட்டுப்போய்ப் பாதி வழி நடந்ததும் எனக் கும் அப்படித்தான் தோன்றிற்று. மன்னி திட்டினால்

அது என்னை என்ன செய்யும்? அண்ணனுக்குக் கொடுத்த வாக்கல்லவோ பெரிது என்று திரும்பி னேன். பத்து அடி குடிசையை நோக்கிச் சென் றேன்........."

* * * *

பர்ணகுடியில் சன்னியாசி வேஷம் தரித்த இரா வணன், சீதை அளித்த பழத்தைச் சாப்பிட்டுக்கொண் டிருந்தவன், திடீர் என்று நடுக்கம்கொண்டான். அப் போதுதான் லக்ஷ்மணன் திரும்பப் பார்த்த சமயம். அவன் இடது கண்ணும் இடது கையும் துடித்தன. பழத்தை இலையில் வைத்து, வாசலை நோக்கிப் பார்த் தான். லக்ஷ்மணன் வந்து விடுவான், ஓட்டம் பிடிக்க வேண்டும் என்று பயந்தான்.

"பயப்படாதே!" என்றார் நாரதர். இந்தப் பொல்லாத ரிஷி மறுபடியும் அங்கே எப்படியோ வந்து கலந்துகொண்டார்.

[இதென்ன, கதை புதுத் தினுசாக இருக்கிறது, கோர்வை யில்லாமல் உளறலாக இருக்கிறது, அசோகவன மெங்கே, பர்ணகுடி எங்கே?...ஆட்சே பிக்க வேண்டாம். கனவு, அதிலும் மகா சோகத்தில் ஆழ்கியிருந்த சீதையின் கனவு. அதற்கு வரையும் முறையும் கிடையாது.]

* * * *

"பத்து அடி நடந்தேன், குடிசைக்குத் திரும்பிப் போக. மறுபடி மன்னி, கோபத்தால் சிவந்த உன் கண்களும், சுருங்கிய நெற்றியும் என் கண்முன் வந்து நின்றன. 'ஆ! போகாமல் வந்துவிட்டாயா, துஷ்டா!'

என்று காளியின் அவதாரமாக நீ சீறிப் பாய்ந்தது போல் கண்டேன். மறுபடி திரும்பினேன், அண்ணனுக்குக் கொடுத்த பிரதிக்ஞை தூர ஓடிப்போய்விட்டது. நீ சொன்ன வார்த்தைகளும், என்னுடைய அகங்காரமும் புத்தியை மயங்கச் செய்தன. எவ்வாறாயினும் ஆகட்டும், மானமல்லவோ பெரிது என்று பல்லைக் கடித்துக்கொண்டு, மாய மான் குரலைத் தொடர்ந்து சென்றேன்.''

''ஐயோ!'' என்றாள் சீதை. ''அப்போது நீ வந்திருந்தால் நான் பிழைத்திருப்பேனே!'' என்றழுதாள்.

''நடந்தது நடந்துவிட்டது, இப்போது கிளம்பு. போவோம்! இனிப் பழைய துக்கம் என்னத்திற்கு? நான்தான் வந்துவிட்டேனே'' என்றான் லக்ஷ்மணன்.

''தம்பி! உனக்கு எவ்வளவு பெரிய அநியாயம் செய்தேன்! இதற்கு எவ்வாறு பிராயச் சித்தம்!'' என்று பரிதபித்தாள் சீதை.

''கிளம்பு, கிளம்பு!'' என்று லக்ஷ்மணன் சீதையைத் தட்டினான்.

*　　*　　*　　*

கனவில் இவ்வாறு தட்டினதும் சீதை விழித்துக் கொண்டாள். லக்ஷ்மணனுமில்லை, நாரதருமில்லை, சுற்றிலும் அரக்கிகள்! அவர்களில் ஒருத்தி, ''எழு! எழு! என்ன உறக்கம்? இராவணேசுவரன் வருகிறான். அதோ ஒலிக்கிறது சங்கு! அவன் சொல்லுகிறபடி செய். மூர்க்கத்தனம் பண்ணாதே! இராமனும்

லக்ஷ்மணனும் கடலுக்கு அப்பால் அலைந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் இவ்விடம் வர ஒரு நாளும் முடியாது. நீ இராவணன் மனைவிதான்! சந்தோஷமாய் ஒப்புக்கொள். வந்த சௌபாக்கியத்தை ஏன் வேண்டாம் என்று தள்ளி வாழ்நாளை வீணாக்கிக் கொள்ளுகிறாய்?" என்றாள்.

"ஆ!" என்று கதறினாள் சீதை. மரமும் செடியும் பெருமூச்சுவிட்டன.

*    *    *    *

இதற்கு மறுநாள்தான் அனுமான் கடலை ஒரே தாண்டாகத் தாண்டி இலங்கை வந்து சேர்ந்தான். அனுமான் வருவதற்கு முன் சூசனையாக இந்தக் கனவைச் சீதை கண்டாள். இம்மாதிரிச் சில சமயம், வரும் சம்பவங்களைக் கனவில் முன்னால் காண்பது உண்டல்லவா? சீதைக்கு அப்போது அனுமானைத் தெரியாதாகையினாலே அனுமானுக்குப் பதில் தன் கனவிலே லக்ஷ்மணனைக் கண்டாள்.

பிறகு அசோகவனத்தில் நடந்த கதை எல்லாருக்கும் தெரியும். அனுமான் யார் என்பது தெரிந்ததும், சீதை முதல் முதலில் கேட்ட கேள்வி, "லக்ஷ்மணன் சௌக்கியமா?" என்று. அதன் பிறகுதான் புருஷனைப் பற்றி க்ஷேம சமாசாரம் கேட்கலானாள்.

தான் லக்ஷ்மணனுக்குச் செய்த அநியாயத்திற்காகச் சீதை வருத்தப்பட்டது, அவளைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. யாரிடமும் சொல்ல முடியாத வருத்தமே கொடிய வருத்தம் அல்லவா?

சீதை பட்ட துக்கத்தையெல்லாம் நினைத்து, நாமும் ஓரளவு நம்முடைய துக்கங்களை மறக்கலாம். அனுமான், "சிரஞ்சீவி" என்கிறார்கள் பெரியோர்கள். அதாவது, இப்போதும் எங்கேயும் நமக்கு உதவக் காத்திருக்கிறான். துக்கம் ஏற்பட்டால், ராம, ராம என்று சொல்லிக்கொண்டு பொறுப்போம். அனுமான் வந்து நிவாரணம் செய்வான் என்பதில் சந்தேகமில்லை.





